# பொன்விழா மலர்







## இந்து மதாபிமான சங்கம்

சிவன் கோவில் மேலே வீதி

**காரைக்குடி**

நிறுவியது. 1917 பதிவு எண். S. 11/64

பிலவங்க - ஆவணி உச.

**9-9-67**

சிவமயம்

# பொருள் அடக்கம்





சிவமயம்

# வாழ்த்துப்பா



# கருத்துரை

உ
சிவமயம்

# நன்றியும் வணக்கமும்

ஐம்பது ஆண்டுகள் நிரம்பிய நம் சங்கத்தின் பொன்விழா நன்னாளாகிய இன்று, இவ்அரிய மலரை அளித்து மகிழ்கின்றோம்.

இம்மலரை இருபத்திரண்டு கட்டுரைகளும் கவிஞர்களின் வாழ்த்துப்பாக்களும், பெரியார்களின் வாழ்த்துரைகளும் மணம் பரப்பி அலங்கரிக்கின்றன.

இம்மலரின் தனிச்சிறப்பு, கட்டுரைகள் அனைத்தும் சங்கத்தோடு தொடர்பு கொண்ட, தம்புகழ்நிறுவி மறைந்த பெரியார்களைப் பற்றியது. முதற்கட்டுரை சங்க வரலாறு. இறுதி மூன்று கட்டுரைகளும் திருக்குறள், சைவம், வைணவம் என்ற இந்து மதத்திற்கு அடிப்படையானவை.

இக்கட்டுரைகளை எழுதிய பெரியார்களும் புலவர்களும் அன்பர்களும் கட்டுரைக்கு உரியாரோடு நெருங்கிப் பழகிய தொடர்புடையவர்.

முதற் கட்டுரை சங்க வரலாறு. அதனை எழுதியவர் சங்கத் தலைவர். இரண்டாவது கட்டுரை சங்கம் கண்ட அன்பர் சொ. முருகப்பரைப் பற்றியது. அக்கட்டுரையைத் தந்தவர் அவரோடு சேர்ந்து தொண்டாற்றிய அன்பர் கி. ஆ. பெ. விசுவநாதன். மூன்றாம் கட்டுரை குருதேவர் இராமகிருட்டின பரமஹம்ஸரைப் பற்றியது. அதனை ஆக்கியவர் குருதேவரிடம் பெரிதும் ஈடுபாடு கொண்டு தொண்டாற்றிவரும் அன்பர் அவிநாசிலிங்கனார். நான்காம் கட்டுரை விவேகானந்த சுவாமிகளைப் பற்றியது. அதனை வடித்துத் தந்தவர் அதற்கு மிகவும் பொருத்தமான சித்பவானந்த அடிகள். ஐந்தாவது கட்டுரை காந்தியடிகளைப் பற்றியது. அதனை ஈந்தவர் காந்தியடிகளுக்கும் காரைக்குடிச் சங்கத்திற்கும் உள்ள தொடர்பை அறிந்த அமிருதலிங்கனார். ஆறாவது கட்டுரை சங்கத்தின் சார்பாகத் தமிழ்த் தோன்றல்கள் பலரைத் தந்த ஆசிரியர் சிதம்பரய்யரைப் பற்றியது. அதனை ஆக்கித் தந்தவர் அவரிடம் பயின்ற மாணாக்கருள் ஒருவராகிய இராமனுத சுவாமிகள்.

எழாவதுகட்டுரை காரைக்குடியில் அந்த நாளில் கம்பனை வளர்த்த அன்பர் கோவிந்தராஜ ஐயங்காரைப் பற்றியது. அக்கட்டுரையை நல்கியவர் ஐயங்காரிடம் தீராக் காதல்கொண்ட நாமக்கல் கவிஞர். எட்டாவது கட்டுரை தமிழ் முனிவர் திரு. வி. க. வைப்பற்றியது. அதனை எழுதியவர் அவர் பத்திரிகையில் உடனிருந்து தொண்டாற்றிய சாமிநாத சர்மா. ஒன்பதாவது கட்டுரை பாரதியாரைப் பற்றியது. அதை ஆக்கியவர், பாரதியாரோடு படத்தில் இருக்கும் பெருமைபெற்ற மு. நடராசன். பத்தாவது கட்டுரை வ. உ. சி. யைப் பற்றியது. அதனை முழக்கியவர் அவர் நாடகத்தைத் தந்த அவ்வை சண்முகம். பதினோராவது கட்டுரை சிவாவைப்பற்றியது. அதை அளித்தவர் காரைக்குடியில் சிவாவின் அருந்தொண்டை நேரில் கண்டறிந்த அன்பர் சா. கணேசன். பன்னிரண்டா

வது கட்டுரை வ. வே. சு. ஐயரைப் பற்றியது. அதை வரைந்தவர் அவருடன் பன்னாள் உறைந்து தொண்டாற்றிய சுத்தானந்த பாரதியார்.

பதின்மூன்றாவது கட்டுரை தமிழ்த் தாத்தா, பெரும் பேராசிரியர் சாமிநாத ஐயரைப் பற்றியது. அதனை வடித்தவர் ஐயரளித்த சங்கப்பாடல்களைப் படித்துத் தேறிய சாரங்கபாணி. பதினான்காவது கட்டுரை ஞானியார் அடிகளைப்பற்றியது. அதனை எழுதியவர் அடிகளின் மாணாக் கராகிய புலவர் நடேச முதலியார். பதினைந்தாவது கட்டுரை ஈசான சிவாச் சாரியாரைப்பற்றியது. அதனை எழுதிய வர் அவர் அருள்பெற்ற ராய. சொ. பதினாறாவது கட்டுரை சொக்கலிங்க ஐயாவைப் பற்றியது. அதைத் தந்தவர் அவர் மாணாக்கர் இராம. திருநாவுக்கரசு. பதினேழாவது கட்டுரை கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையைப்பற்றியது. அதனை ஈந்தவர் அவரை நன்கு அறிந்த மகராசன்.

பதினெட்டாவது கட்டுரை இரசிகமணி டி. கே. சி. யைப்பற்றியது. அதனை எழுதியவர் அவர் சொல்லிய பாடல்களைச் சுவைத்து நுகர்ந்த குழந்தையன் செட்டியார். பத்தொன்பதாவது கட்டுரை பண்டிதமணியைப் பற்றியது. அதனை ஆக்கியவர் அவரோடு பெருந்தொடர் புடைய இராமனாதன் செட்டியார். இருப தாவது கட்டுரை திருக்குறள் பற்றியது. அதனை வடித்தவர் குறளை நன்கு அறிந்த முது பெரும்புலவர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார். இருபத்தோராவது கட்டுரை சைவம் பற்றியது. அதனை நல்கியவர் சைவ மடாதிபதிகளுள் ஒருவராகிய குன்றக்குடி அடிகளார். இருபத்திரண்டாவது கட்டுரை வைணவம்பற்றியது. அதனை ஈந்தவர் வைணவத்தை நன்கு அறிந்த பக்தர் இராமசாமி ஐயங்கார்.

இன்ன சிறப்புக்களால் இம்மலர் நறுமணம் வீசுமாறு செய்த கட்டுரை யாளர் அனைவருக்கும், அரியபாக்களால் மலர்மணத்தை மேலும் பெருக்கும் கவிஞர்கட்கும், விளம்பரங்கள் ஈந்து மலர் சிறப்பாக வெளிவர உதவிய நண்பர்கட்கும் எங்கள் நன்றியையும் வணக்கத்தையும் புலப்படுத்திக்கொள்ளு கிறோம்.

காரைக்குடி
9-9-1967

இந்துமதாபிமான சங்கத்தார்



இந்து மதாபிமான சங்கத்தைக் கண்ட

திரு. சொ. முருகப்பர்



சங்கக் கட்டிடம் தோன்றுவதற்கு
மூல காரணமாக இருந்து முதலில் நன்கொடை அளித்த

காந்தி மெய்யப்பர்




சங்கத் தலைவர்

தமிழ்க்கடல், சிவமணி, சிவம்பெருக்கும் சீலர்

ராய. சொக்கலிங்கன்

உ
சிவமயம்

# சங்க வரலாறு

சங்கத் தலைவர், 'தமிழ்க்கடல்' 'சிவமணி' 'சிவப்பெருக்கும் சீலர்'

ராய. சொ.



ராய. சொ.

## சங்கப்பிறப்பு

சங்கம் பிங்கள, ஆவணி 26– ஆம்நாள் (10–9–1917) திங்களன்று தோன்றியது. சங்கம் தோன்றிய ஊர் காரைக்குடி. தோற்றுவிக்கப்பட்ட இடம் 'கோவிலூர் ஆண்டவர்' எனப் போற்றப்பெறும் முத்துராமலிங்க ஞானதேசிக பரமாசாரிய சுவாமிகள், நூருண்டுகளுக்குமுன் உண்டாக்கிய திருவாசக மடம். சங்கத்தைக்கண்டவர்கள் அன்றையத் தனவணிக இளைஞர்கள். அவருள் தலையாயவர், தனவணிக மரபில் அந்த நாள் இருந்த குறைபாடுகளை அகற்றி, திருத்தம் பல செய்த செம்மல் சொ. முருகப்பனூர் அவர்கள். பல அன்பர்களின் கூட்டுறவைக் கொண்டு சங்கத்தைத் தோற்றுவித்தார் அன்னுர்; எனினும் சங்கத்தைக்கண்ட பெருமை அன்பர்முருகப்பனுருக்கே உரியது.

## சங்கம் க்ண்டவர்

சங்கம் கண்ட முருகப்பனூர் 1893இல் பிறந்தார். சங்கம் பிறந்தது 1917இல். எனவே சங்கத்தைத் தோற்றியபோது அவருக்கு ஆண்டு இருபத்துநான்கு. எனக்கு அப்போது வயது பத்தொன்பது. நாங்கள் கண்ட சங்கம் இன்று பொன் விழா எடுக்கின்றது. அவ்விழாவைக் கண்டு களிக்கும்பேறு எனக்குக் கிடைத்தமைக்குப் பெருமையுறுகின்றேன். அன்று எங்களோடு உடனிருந்து, இன்றும் இருக்கின்ற சில அன்பர்கள் இதை எண்ணி மகிழ உரியவர்.

## சங்கக் கொள்கை

சங்கம் காரைக்குடியில் தோன்றியது; எனினும் காரைக்குடியோடல்லாமல் தனவணிக நாட்டிற்கும், தமிழுலகுக்கும் தமிழ் வழங்கும் பிறநாடுகட்கும் தொண்டு செய்தது; செய்கின்றது. சங்கத்தில் பல ஊரைச் சேர்ந்தவர்கள் அங்கம் பெற்றிருக்கின்றனர். இந்து மதத்தைப் பரப்புவது சங்கத்தின் குறிக்கோள். அறிஞர் பலர் பன்னெடுங் காலமாக வளர்த்த இந்து மதத்தின் சிறப்பை உலகறிய எடுத்துக்காட்டும் போது, புறச்சமய நிந்தனை எதிலும் சங்கம் தலைப்பட்டதில்லை.

## சங்கம் போற்றும் பெரியார்

சங்கம் மதத்தின் பெயரைக் கொண்டிருப்பினும் நாட்டிற்கும் மொழிக்கும் பெரிதும் உழைத்திருக்கின்றது. குருதேவர் என்று அழைக்கப்பெறும் உலக முழுவதும் தம்புகழ் நிறுவிய, இராமகிருட்டின பரமஹம்ஸர், அவர்வழி வந்த

சமயவீரர், விவேகாநந்த அடிகள் ஆகியோர் கொள்கையைச் சங்கம் கடைப்பிடிப்பது. அவர்கள் சமயப்போர்வைக்குள் இருந்தனர் எனினும் அவர்களின் நாட்டுப் பற்று அளவிடற்கரியது. மேலும் நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக அடிமைப் பட்டுக்கிடந்த நாட்டை, எல்லையற்ற ஆற்றல்வாய்ந்த மாற்றாரிடமிருந்து உலகமெலாம் வியப்புக்கடலில் ஆழ்த்துமாறு மீட்டுத் தந்த, ஒப்பாரும் மிக்காரும் இல்லாப் பெரியார், காந்தி அடிகளின் ஆணையைத் தலைமேற்கொண்டே இச்சங்கம் செயலாற்றியது. தனவணிக நாட்டில் விடுதலை வேள்வியின் பெரு நெருப்பில் குதித்த அன்பர்கள் பலரும் இச் சங்கத்தின் தோன்றல்களே.

## சங்கக் கட்டிடம்

சங்கம் தமிழ்மொழிக்கு அரும்பணி செய்து வருகிறது. இச் சங்கத்தில் வந்து கலந்துகொள்ளாத தமிழ்ப் பெரியார்கள் அரியர் எனலாம். தமிழ் முனிவர் திரு. வி. கலியாண சுந்தர முதலியார் இச்சங்கத்தோடு பெரிதும் தொடர்புடையவர். சங்கத்தின் பல ஆண்டு விழாக்களில் அப் பெரியார் தலைமை தாங்கியிருக்கிறார். சங்கத்தின் வெள்ளி விழாவில் திரு. வி. க. அவர்களே தலைமை தாங்கிச் சிறப்பித்து அருளினார். மேலும் இன்று காட்சியளிக்கும் சங்கத்தின் அழகிய கட்டிடத்திற்கு அப் பெரியாரே கால்கோள் விழாச் செய்தார். இக் கட்டிடத்தை மதிப்பிற்குரிய அறிஞர் 'இராஜாஜி' என நாடு முழுதும் அழைக்கும் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் 1952 இல் திறந்துவைத்தார். அதுதவிர 'இராஜாஜி' அவர்கள் இரு விழாக்களில் தலைமை தாங்கியிருக்கிறார். சங்கக் கட்டிடத்தில் 1965 இல் 'ராய. சொ. உமையாள் மண்டபம்' என்ற பெயரால் மேல்மாடி ஒன்று எழுப்பப் பெற்றது. அதனைக் கலைத்தந்தை கருமுத்து. தியாகராாசன் செட்டியார் அவர்கள் தலைமையில், தொழில் மேதை அ. மு. மு. முருகப்ப செட்டியார் அவர்கள் திறந்துவைத்தார்கள்.

## சங்கத்திற்கு வந்த பெரியார்

சங்கத்திற்கு, புகழுடம்பு நிறுவிச் சென்ற விடுதலைவீரர்களான வ. உ. சிதம்பரனார், சுப்பிரமணியசிவனார், வ. வே. சு. ஐயர், டாக்டர்இராசன்முதலியவர்களும், மெய்யறிவுச் செல்வர்களான ஞானியார் சுவாமிகள், ஈசான சிவாச்சாரிய சுவாமிகள், விபுலானந்த சுவாமிகள், வீர. சுப்பைய சுவாமிகள் ஆதியவர்களும், தமிழ்ப்பெரும் புலவர்களான வேங்கடசாமி நாட்டார், ம. கோபால கிருஷ்ண ஐயர், டி. கே. சிதம்பரநாத முதலியார், சோமசுந்தர பாரதியார், பண்டிதமணி கதிரேசச்செட்டியார், ரா.பி. சேதுப்பிள்ளை, ஜகவீரபாண்டியக் கவிராயர், பூரணலிங்கம்பிள்ளை, உமாமகேசுரம் பிள்ளை, உலக ஊழியனார், சரவண முதலியார் உள்ளிட்ட பலரும் போந்து, தலைமை தாங்கியும் விரிவுரையாற்றியும் சங்கத்தைச் சிறப்பித்திருக்கிறார்கள்.

## சங்கத்தில் பாரதியார்

சங்கத்தை, மகாகவி சுப்பிரமணிய பாரதியார் 1919ஆம் ஆண்டில் காரைக்குடிக்குவந்து, சங்கத்துக்கு எழுந்தருளி, சங்க அங்கத்தினர்களோடு அளவளாவி, சிலநாட்கள் தங்கி, பாராட்டி ஏழு அரிய பாடல்களைப் பாடியருளினார். கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, பேரறிஞர் வையாபுரிப் பிள்ளை முதலியவர்கள் சங்கத்தைப் பாராட்டிப் பாடியுள்ளார்கள்.

## சங்கத்தின் குழவி

சங்கத்தின் பிள்ளை, தனவைசிய ஊழியர் சங்கம். தனவணிகமரபின் சீர்திருத்தத்தில் முனைந்து பல அருஞ்செயல்

ஆற்றிய அச்சங்கத்தை, 'இந்துமதாபிமான சங்கம் ஈன்ற குழவி' என்று கூறுதல் பொருந்தும். இந்துமதாபிமான சங்கத்தைச் சேர்ந்தவர்கள்தாம் வேறு வடிவத்தோடு செயலாற்றி வகுப்பு முன்னேற்றத்தில் முனைந்து தொண்டாற்றினர் எனபதை உலகமறியும்.

### சங்க நூலகம்

சங்கத்தை விவேகானந்த புத்தகசாலை என்ற பெயரால் நூலகம் ஒன்று அலங்கரிக்கின்றது. ஏராளமான புத்தகங்கள் இந்நூலகத்தில் இருக்கின்றன. தமிழ்ப் பெரும் புலவர் மு. ரா. கந்தசாமிக் கவிராயர் அவர்கள் மறைந்த ஞான்று, அவர்கள் அரும் பாடுபட்டுத் திரட்டி வைத்திருந்த கிடைத்தற்கரிய நூல்நிலையத்தை மதுரையினின்றும் அப்படியே விலைகொடுத்துப் பெற்று வந்து, அதை ஆதியாக வைத்து, நாளடைவில் சேர்க்கப்பெற்ற பல நூல்களைக்கொண்டு இந்நூலகம் சிறந்து விளங்குகின்றது.

### சங்கக்கலாசாலை

சங்கத்தில் இராமகிருட்டின கலாசாலை என்ற பெயரால் 1918 ஆம் ஆண்டில் ஓர் கலாசாலை தொடங்கப்பெற்று, பல இளைஞர்கள் தமிழ் இலக்கியம் பயின்று வந்தனர். அந்த இளைஞர்களெல்லாம் இன்று கிழவர்களாகி விட்டனர். அவருள்ளும் சிலர்தாம் இப்போது இருக்கின்றனர். என்னை யாரைத் தமிழ்த் தொண்டிற்கே ஆளாக்கிய, நிறைபுலமையுடையார், அந்நாளில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் படித்துப் பட்டம் பெற்ற அறிஞர், சு. சிதம்பர அய்யர் அவர்கள் அக்கலாசாலைக்கு ஆசிரியராக அமர்ந்து, திறம்பட நடாத்தினர்கள். சில ஆண்டுகளில் அக்கலாசாலை நின்றுவிட்டது. எனினும் அக்கலைக்கூடத்தில் பயின்ற மாணாக்கர்களின் தமிழ்த் தொண்டு வளர்ந்து, வளர்ந்து, வளர்ந்து வருகிறது. அதனை நிறுத்த எவராலும் ஆகாது.

### சங்க இலக்கியத் தொண்டு

சங்கத்தில், தனவணிக நாட்டில் கம்பர்பெருமான் புகழை அந்தநாளில் நிலைநாட்டி, எங்களுக்கெல்லாம் கம்பப் பைத்தியம் பிடிக்குமாறு செய்த பெரியார், கம்பராமாயண விரிவுரையாளர், 'கம்பநாடன்' என்னும் இதழாசிரியர் மோ.வே கோவிந்தராச அய்யங்கார் அவர்களும், வேறு சில புலவர்களும் கிழமைதோறும் இலக்கிய விருந்து அளித்து வந்தனர். இந்துமதத்தைப்பரப்புதற்கென்றே தஞ்சை நெ. சி. விசுவநாத சாஸ்திரி என்ற பெரியவரைச்சங்கத்தில் அமர்த்தி, விழாக் கூட்டங்களில் சங்கம் உரையாடல் நிகழ்த்தி வந்தது. இந்து மதத்தைப் பற்றிச் சிறு புத்தகங்கள் பல சங்கம் வெளியிட்டிருக்கிறது.

### சங்கமும் காந்தியடிகளும்

சங்கம், காந்தியடிகள் முதல் முதலாகக் காரைக்குடிக்கு வந்தருளியபோது வரவேற்பு முகமன் உரை படித்து அளித்துத் தன்னைப் பெருமைப் படுத்திக் கொண்டது. அதனை இன்று தில்லிமாநகரில் காந்தியடிகள் பொருட்கண்காட்சியில் சிறப்பான இடத்தில் வைக்கப் பெற்றிருப்பதை அறிந்து சங்கம் மகிழ்ச்சியடைகின்றது.

### சங்கம் வாழ்க!

சங்கம் கண்டதில் பங்குபெற்ற நான், சங்கத்தின் பொன்விழாவைக் கண்டு மகிழும் பேறுபெற்றதை மிக்க பெருமையாகக் கொள்கின்றேன்.

குலம் உயர நகர் உயர, நாடுஉயர
உழைக்கின்றார்; கோடி மேன்மை
நிலவுற, இச் சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்தோங்குக! நிலத்தின்மீதே.

என மகாகவி பாரதியாரோடு சேர்ந்து எல்லோரும் வாழ்த்துவோமாக!

தடையறுத் துறவுக்கோர் நாயகனும்
விவேகஆ னந்தன் யாண்டும்
தடையறுது எடுத்துநிலை நாட்டியநம்
இந்துமதம் தழைத்துப் பாரின்
தொடையறுத் தமிழ்நாட்டின் தொல்காரைக்
குடிநகரில் தோன்றி நாளும்
இடையறு இன்பளிக்கும் இந்துமத
அபிமான சங்கம் வாழ்க!



சொ. முருகப்பர்

# அன்பர் சொ. முருகப்பர்

கி. ஆ. பெ. விசுவநாதம்



கி. ஆ. பெ. விசுவநாதம்

நாற்பத்து ஆறு ஆண்டுகட்கு முன்பு ஒரு நாள் ஒருவர் எனது இல்லத்திற்கு வந்து என்னையே சில நிமிடங்கள் பார்த்துக்கொண்டு நின்ருர். கட்டாயப் படுத்தி உட்காரவைத்து, "நீங்கள் யார்?" என்றேன். "என்பெயர் சொ. முருகப்பன்; நான் காரைக்குடியிலிருந்து வந்திருக் கிறேன்; உங்களுடைய 'இந்து மதத் தினருக்கோர் எச்சரிக்கை' என்ற கட்டுரையை ஆனந்த போதினி இதழிற் கண்டேன். அதைப்பார்த்ததும் தங்களைப் பார்க்க வேண்டுமென்ற அவா உண்டா யிற்று. அதை எழுதியவர் அறுபது வயதுக்கு மேற்பட்டவராக இருக்க வேண்டும் என்றெண்ணினேன். இருபத் திரண்டு வயது இளைஞராக இருப்பதைக் கண்டதும், அதை எழுதியது நீங்கள் தானு! என்று என்னுல் நம்பமுடியவில்லை. இந்துக்கள் அனைவர்க்கும் இக்காலத் திற்கு மிகமிகத் தேவையான ஒரு கட்டுரை. என் கொள்கையும் இதுவே தான். இதற்காக நாங்கள் காரைக் குடியில் இந்து மதாபிமான சங்கம் என்ற ஒன்றைத் தொடங்கி யிருக்கிறேம்" என்ருர்.

"பாரதியார், எங்கள் சங்கத்திற்கு வந்து எங்கள் பணிகளைப் பாராட்டியிருக் கிருர்கள்; திரு வி. க. அவர்கள் எங்கள் சங்கத்திற்குப் பல முறை வந்து தலைமை தாங்கி யிருக்கிருர்கள்; தாங்களும் வந்து சொற்பொழிவாற்றவேண்டும்" என என்னை அழைத்தார்.

## முருகப்பரின் தொண்டு

திரு. சொ. முருகப்பனுர் நல்ல சிவ பக்தர். தேவாரப் பாடல்களை மிகவும் கசிந்துருகிப் பாடுவார். அவரது உற்ற நண்பர் திரு. இராய. சொக்கலிங்கனுர். முருகப்பர் "குமரன்" வார இதழின் ஆசிரியர். இராய. சொ. "ஊழியன்" வார இதழின் ஆசிரியர். இருவரும் நல்ல தேச பக்தர்கள்; கதர் உடுத்துக் காங்கிரஸ் இயக்கத்துக்குத் தொண்டாற் றியவர்கள்; காங்கிரசுக்குத் தொண் டாற்றியதோடு சமயத்தொண்டும் செய்து வந்தவர்கள்.

1924 என எண்ணுகிறேன். சுருட்டு அனுப்பிய நிலுவைகளை வசூலிக்கச் செட்டிமார் நாட்டில் உள்ள ஒரு சிற்றா ருக்குச் சென்றிருந்தபோது, ஊருணிக் கரைக்குச் செல்ல நேர்ந்தது. அங்கு மரத்தடியில் அன்பர் முருகப்பர் ஒரு பிள்ளையார் சிலையை அமைத்துக்

கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் நான் வியந்து 'இப்போது இப்பணியில் இறங்கி யிருக்கிறீர்களோ ?' என்று கேட்டேன். அதற்கு அவர் சிரித்துக் கொண்டே ஒரு வண்டியைக் காட்டி, இதில் இன்னும் ஆறேழு பிள்ளையார்கள் உள; அவற்றையும் பிள்ளையார் இல்லாத ஊருணி மரத்தடியில் அமைத்துவிட்டுத் தான் சாப்பிடப்போக வேண்டும்' என்று கூறினார்.

பின்பு ஒரு நாள் அவர்களை நான் காரைக்குடியில் சந்தித்தபோது நூற்றுக் கணக்கான பட்டு விபூதிப் பைகளையும், பட்டுக்கயிற்றினால் கட்டிய ஒற்றை உருத் திராக்க மணிகளையும் அவர் கைகளில் கண்டேன். "இவைகள் எதற்கு?" என்று வினவியபோது "பள்ளியிற் பயிலும் இளஞ்சிறார்கட்கு" என்றார். அவரது பொதுப்பணி வண்டிக் கணக்காகப் பிள்ளையார்களை ஏற்றி ஆங்காங்கே பிரதிட்சை செய்வதிலும், ஆயிரக்கணக் கான உருத்திராக்கமணிகளைப் பள்ளிச் சிறார்கட்கு வழங்குவதிலும் தொடங் கியது; மிகக் குறுகிய நாட்களில் நேர் மாறாக அது மாறுதலடைந்தது; சமயத் துறையில் ஒரு சீர்திருத்தவாதியாகவும் அரசியல் துறையில் நீதிக்கட்சியினராக வும் காட்சியளித்தார்.

## ஊழியனும் குமரனும்

இந்தக் காலத்தில்தான் "ஊழியன்" அரசியல்துறையில் காங்கிரசுக்கும், சமயத்துறையில் சைவத்துக்கும் "குமரன்" அரசியல்துறையில் நீதிக் கட்சிக்கும் சமூகத்துறையில் பகுத்தறிவு இயக்கத்துக்கும் தொண்டு செய்ய முனைந்த காலம். இராய. சொ. அவர் கட்கும் சொ. முரு. அவர்கட்கும் அரசியல் சமயம். பத்திரிகை ஆகிய துறைகளில் மும்முனைப் போட்டி வலுவடைந்தது.

பெரியவர்கள் இராய. சொ. வையும் இளைஞர்கள் சொ. முரு. வையும் ஆதரிக் கத் தொடங்கினர். குமரன் இதழின் ஆண்டுவிழாவில் பழைய ராஜா சர் மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார். ஆண்டுவிழா நிகழும் போது, அவர்கள் தலைமையில் எனது சொற்பொழிவும் அமைந்திருந்தது.

## இருவர் போட்டியும் இராய. சொ பண்பும்

'இராய. சொ.' 'சொ. முரு.' ஆகிய இருவர்க்கும் போட்டியிருந்தாலும் எனக்கு அவ்விருவரும் இரு கண்கள் போன்றவர்கள். 1930இல் மலாய் நாட்டு மக்களுள் சிலர் என்னையும் வேறு சிலர் இராய. சொ. அவர்களையும் அங்கு அழைத்திருந்தார்கள். இராய. சொ. காங்கிரஸ் இயக்கத்தையும், சைவ சமயத் தையும் பிரசாரம் செய்துவந்தார்கள். நான் அங்கு நீதிக்கட்சியையும் பகுத் தறிவு இயக்கத்தையும் பிரசாரம் செய்து கொண்டிருந்தேன்.

'சிரம்பான்' என்னும் ஊரில் ஒருநாள் ஒரே மேடையில் நாங்கள் இருவரும் பேச நேர்ந்தது. அந்த மேடையில் நாங்கள் இருவருமே மாறு பட்ட கருத்துக்களைப் பேசினோம். அப் பொழுது, முருகப்பர் அவர்களின் தொண்டுகளை இராய. சொ. அங்குப் பாராட்டிப் பேசியது எனக்குப் பெரு வியப்பை அளித்தது. நாங்கள் அரசியல் சமயத்துறைகளில் மாறுபட்ட கருத்து உடையவர்களாக இருப்பினும் தமிழ்த் துறையில் நாங்கள் எந்தக்காலத்தும் வேறுபட்டதில்லை யென்று இராய. சொ. கூறினார். இந்நிகழ்ச்சி நடந்தது 37 ஆண்டுகட்கு முன். இராய. சொ. அவர்கள் எனக்கு ஏழு நாட்கள் மூத்தவர். சொ. முரு. எனக்கு ஐந்து ஆண்டுகட்கு மூத்தவர். இன்றைக்கு எனக்கு வயது 69 தொடங்குகிறது.

## சுயமரியாதைப் பிரசாரம்

திரு. சொ. முருகப்பர் அவர்கள் வெளிப்படையாகவே பெரியாரோடும்

என்னோடும் சேர்ந்து சுயமரியாதைப் பிரசாரங்கட்கு வரத் தொடங்கிவிட்டார். 40 ஆண்டுகட்கு முன்பு பட்டுக்கோட்டையில் சுயமரியாதை மாநாடு நடைபெற்றது. அம்மாநாட்டில் கொடியேற்றும்பணி எனக்கு அமைந்தது. அன்று விதவை மணத்தை வற்புறுத்திப் பேசினேன். சொ முருவும் அம்மாநாட்டிற்கு வந்திருந்தார்கள். சொற்பொழிவு முடிந்த பிறகு மூவலூர் இராமாமிர்தம் அம்மாள் என்ற இயக்கச் சகோதரி, ஒரு விதவைப் பெண் திருமணஞ் செய்துகொள்ள விரும்புகிறள். யாவராயினும் ஒரு நல்ல மாப்பிள்ளையாகப் பார்த்து மணஞ்செய்து வைக்கிறீர்களா? என்று என்னைக் கேட்டார்கள். அருகிலிருந்த முருகப்பர் இது பற்றி என்னிடம் பேசிப் பெண்ணையும் பார்க்க விரும்பினர். இறுதியில் பெண்ணையும் பார்த்தோம். முருகப்பர் அவரை மணந்துகொள்ள விரும்பினர். ஏற்கனவே அவர் மணமானவர் ஆதலின் இதற்குப் பெரியார் ஈ. வே. ரா. அவர்கள் இசைவு அளிக்கவில்லை. பெண்ணும் பிள்ளையும் விரும்பும்போது நாம் ஏன் தடையாக இருக்கவேண்டும் என்று பெரியாரை இணங்கவைத்து மணத்தை முடித்து வைத்தேன். அந்த அம்மையார் தாம் இன்று மகளிர் இல்லத்தைத் திறம்பட நடத்தி வருகின்ற திருமதி மரகதவல்லி முருகப்பர் அவர்கள்.

### கலப்புத்திருமணங்கள்

இதன் பிறகு செட்டிமார்நாட்டில் நகரத்தார் சமூகத்தில் நடந்த கலப்புத் திருமணங்களும் விதவைத் திருமணங்களும் பல. அவற்றுள் குறிப்பிடத்தருந்தவை அருணகிரி–சுந்தரி, நீலாவதி–இராமசுப்பிரமணியம், பொன்னம்மாள்–அருணசலம், வை. சு. சண்முகம்–மஞ்சுளா பாய், முதலியவர்களின் திருமணங்கள். இத் திருமணங்களை நடத்தப் பெருமுயற்சி செய்தவர் சொ. முருகப்பர் அவர்கள்.

### தொண்ணூற்ருறு ஊர்க்கூட்டம்

நகரத்தார் சமூகத்தில் தொண்ணூற்று ஆறு ஊர்க்கூட்டம் என்பது பெரிய மனிதர்கள் கூடுகின்ற பேரமைப்பு அவர்கள் அடிக்கடி ஒன்பது கோயில்களில் கூட்டத்தைக் கூட்டித் தங்கள் சமூகத்தில் பரம்பரையாக நடந்து வருகிற மரபுகளையும் பழக்க வழக்கங்களையும் நிலைநிறுத்தி வருவதுண்டு. அதில் சில இளைஞர்கள் தலையிட்டுச் சீர்திருத்தங்களைப் புகுத்த வேண்டுமென்று வற்புறுத்துவர். இதனல் அக்கூட்டங்கள் செவ்வையாக நடைபெருமல் குழப்பமடைவதுண்டு. இதன் விளைவாக இப்போது அப்பெரிய சமூகத் தொண்ணூற்ருறு ஊர்க்கூட்டங்கள் நடைபெறுவது பெரும்பாலும் தடைப்பட்டு விட்டன. இதன் பலன் எதுவானலும் இதனை நடத்த இளைஞர்களைத் தூண்டித் தலைமை வகித்தவர் சொ. முருகப்பர் அவர்களே.

### திருச்சியில் பெரியாரிடமிருந்து விலகுதலும் பத்திரிகைத் தொழிலும்

பெரியாரோடு இணைந்திருந்து பொதுத் தொண்டு செய்த இளைஞர்கள் தமிழகத்தில் மிக மிகப் பலர். அவர்களில் உணர்ச்சியுள்ள இளைஞர்களில் சிலர் பெரியாரது செயல்களிலும் போக்குகளிலும் மாறுபட்டு அவரைவிட்டு வெளியேறி விடுவர். இது நாற்பத்து மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிற செய்தி. இதில் அன்பர் முருகப்பர் அவர்கட்கும் சீட்டு விழுந்தது. அவர் மிக விரைவிலேயே பெரியாரை விட்டு விலகித் தனித்து நின்று பல பணிகளைச் செய்து வந்தார். இதில் அவர் நடத்திய பத்திரிகைத் தொழில் பெரிதும் குறிப்பிடத் தக்கது. அக்காலத்தில் அப்பத்திரிகையில் வந்த கட்டுரைகள் தமிழ் மக்களின் பாராட்டுதலைப் பெரிதும் பெற்றவை. அதற்குக்

கட்டுரை எழுதுவதில் எனக்கும் பங்கு உண்டு.

"சண்டமாருதம்" என்ற தினசரி இதழைப் பெரும் முதலீட்டில் திருச்சியில் நடத்தினர். திருச்சியில் நாளிதழை முதன்முதலில் நடத்திப் புகழ் பெற்றவர் சொ.முருகப்பர் அவர்களே. இது 1929 ஆம் ஆண்டு. இது அவர்களின் பெருந் துணிவையே காட்டுகிறது. இதனல் நான் அதன் வளர்ச்சிக்குப் பல்வேறு வகைகளில் துணைபுரிந்து வந்தேன். காலஞ் சென்ற செளந்தர பாண்டியனர், கோவை G. D. நாயுடு, சர், ஆர். கே. சண்முகம் ஆகியோர் ஆதரவுகளும் கிடைத்தன. எனினும் போதுமான விளம்பர வருமானம் நாளிதழுக்கு வராமையால் இழப்பு அதிகமாக ஏற்பட்டுச் சில ஆண்டுகள் நடைபெற்று நின்றுவிட்டது.

அருத சங்கிலி

உடையாத கற்பலகை, கெடாத கடிகாரம், அழியாத நாற்காலி அருத சங்கிலி எனத் தலைப்பிட்டுச் சென்ற ஆண்டு குமுதம் வெளியிட்ட செய்திகள் தமிழகத்தில் பரபரப்பை உண்டாக்கின. இவற்றைப் பார்க்க என் இல்லத்திற்கு வந்த மக்களின் கூட்டம் மிகமிக அதிகம். இவற்றுள் அருத சங்கிலியின் கதை இதுதான்.

1930 ஆம் ஆண்டு எனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அன்பர் சொ. முருகப்பர் அவர்கள் ஒரு தங்கச் சங்கிலியைக் குழந்தைக்கு அன்பளிப்பாக வழங்கக் கொண்டுவந்தார். அக்காலத்திலேயே நான் எவரிடமிருந்தும் எப்பரிசையும் பெறுவதில்லை யென்ற செய்தி அவரைத் திடுக்கிடச் செய்து விட்டது. அதைக் குழந்தைக்கு அணிவிக்க மறுத்துவிட்டதால் அவர் கலக்கமடைந்தார். இறுதியில் மரகதவல்லி அம்மையார் தங்கள் நினைவாக அது என்னிடம் இருக்க வேண்டும் என்று விரும்பியதால் தட்ட முடியாமலும் குழந்தைக்குப் போடாமலும் நானே அணிந்து கொண்டேன். அது என் கழுத்தில் முப்பத்தேழு ஆண்டுகளாக இருந்து வருகிறது. எடை அரைப்பவுன்தான். இன்னும் அறவில்லை. ஆண்டுதோறும் திருக்குற்ருல அருவியின் நீர் வீழ்ச்சியில் அடிபட்டு வந்தும் அறுபடவில்லை. அது தேய்ந்து இன்றைய எடை காலேஅரைக்கால் பவுனக இருந்துவருகிறது. அதன் அன்றைய மதிப்பு ஆறரை ரூபாய்தான். என் உயிருள்ளவரை அது என்னிடமிருந்து அவரை நினைவூட்டிக் கொண்டிருக்கும். எனினும் என் உயிர் பிரிந்த பிறகு இச்சங்கிலியை அவர்கள் குடும்பத்தில் சேர்த்துவிட ஏற்பாடு செய்யப் பெற்றிருக்கிறது. இன்று அவர்களையும் என்னையும் இணைத்துக் கொண்டிருப்பது இந்த ஒரு சங்கிலியே.

அன்பர் முருகப்பர், ஒரு நல்ல இளைஞர்; சிறந்த அறிஞர்; கருத்துள்ள எழுத்தாளி. அவர்தம் ஒவ்வொருபேச்சும் அழுத்தமாகவும் திருத்தமாகவும் எடையுள்ளதாகவும் இருக்கும். நல்ல பழக்கங்கள் உடையவர்; நட்புக்கு ஏற்றவர்; இவையெல்லாவற்றையும் விட அவரிடம் சிறந்து விளங்கியது திட்டமிட்டுச் செயலாற்றும் திறமையே யாகும். அவர் மறைந்தாலும் அவரது பணி மறையாது. அவரை இனி நான் மறந்தாலும் நாடு மறவாது.

வாழ்க திரு. சொ. முருகப்பர் புகழ்.



இராமகிருட்டினர்

# ஸ்ரீராம கிருஷ்ணர்

தற்காலத்திற்கு ஒரு மகான்

தி. சு. அவிநாசிலிங்கம்



அவிநாசிலிங்கம்

கிரீஸ் நாட்டின் தலை நகரம் ஏதென்ஸ். அதில் விமானம் சென்று இறங்கியது. அங்கு என்னைச் சந்தித்து அழைத்துப் போக நம் ஸ்தானிகர் நிலையத்திலிருந்து அன்பர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் என்னை வரவேற்று, பிரயாணச் சடங்குகள் சிலவற்றை முடித்துக் கொண்டு, விமான நிலையத்திலிருந்து வெளியே புறப்படும் சமயம், ஒரு கிரீஸ் நாட்டு அம்மாள் எங்களை வழி மறித்து, "நீங்கள்தானா அவினாசிலிங்கம் செட்டியார்?" என்று கேட்டது எனக்கு வியப்பாக இருந்தது. அவர்களை எனக்கு முன் பின் தெரியாது. அவர்கள் கிரீஸ் நாட்டைச் சேர்ந்தவராதலின், ஆங்கிலம் தாராளமாய்ப் பேச வரவில்லை. எனவே, "நீங்கள் யார்?" என்று வியப்புடன் வினாவினேன். அதற்கு அவர்கள் சொன்னார்கள்: "நான்ஒரு ராமகிருஷ்ணரின் பக்தை. நீங்கள் இங்கு வருவதாகப் பாரிசில் ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பர்கள் மூலம் கேள்விப்பட்டு, உங்களைச் சந்திக்க வந்திருக்கிறேன். நீங்கள் அவசியம் என் வீட்டிற்கு வந்து, என் பூஜை அறையைத் தரிசித்து வரவேண்டும்" என்று சொன்னார்கள்.

என் இருக்கைக்காக நம் ஸ்தானிகர் நிலயம் ஏற்பாடு செய்திருக்கும் இடத்தில் சாமான்களை வைத்து விட்டு, அவர்கள் வீட்டிற்குச் சென்றோம். ஒரு அழகான அறை. அதில் பெரிய மூன்று போட்டோக்கள். மத்தியில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் வீற்றிருக்க, இருபுறத்திலும் விவேகானந்த சுவாமியும், சாரதா மணி தேவியும் அமர்ந்திருந்தார்கள். அழகான புஷ்பங்கள் அவைகளுக்கென ஏற்பட்ட ஜாடியில் வைக்கப்பட்டிருந்தன. ஊது பத்தி சுகந்த மணம் வீசிக்கொண்டிருந்தது. அது இந்தியாவிலிருந்து வருவிக்கப்பட்டதாக அவர்கள் பெருமையுடன் கூறினார்கள். அவர்கள்மிகுந்தபக்தியுடன் அப் படங்களின் முன்பு விழுந்து வணங்கினார்கள். நானும் விழுந்து வணங்கினேன். அவரது அசாதாரண பக்தி என் உள்ளத்தைப் பரவசப்படுத்தியது."அனுதினமும் இங்கு காலையிலும் மாலையிலும் ஆராதனை நடைபெறுகிறது. மாலை வேளைகளில் மற்ற அன்பர்களும் வந்து சேர்ந்து கொள்வார்கள்" என்று அன்பு மேலீட்டுடன் உரைத்தார்கள். எனக்கு நம் ஊரில் நம் ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமங்களில் உள்ள கோயில்களில் இருந்த மாதிரியே இருந்தது.

அதற்குப் பிறகு உணவு அளித்தார்கள். அவர்கள் கணவர் அந் நாட்டில் மருத்துவத் துறையில் பெரிய உத்தியோ

கத்தில் இருந்தார். அவர்கள் வீட்டில் விருந்து ஏறபாடு செய்து அன்புடன் பரிமாறினர்கள். ஸ்ரீராமகிருஷ்ணர் ஆச்ரமங்களையும், அவைகள் செய்து வரும் சேவைகளைப் பற்றியும் பல கேள்விகள் கேட்டார்கள். "நான் இந்தியாவிற்கு வந்து ராமகிருஷ்ணர் பிறந்த காமார்ப்புகூர், அவர் தவம் கிடந்த தக்ஷிணேஸ்வரம் முதலிய இடங்களைப் பார்த்துப் புனித மடைவது எந்நாளோ?" என்று நாக்குத் தழுதழுத்தபடி சொல்லிக் கொண்டார்கள். அவர்கள் காட்டிய அன்பு மிகப் பெரியது. அந்த அன்பிற்குக் காரணம், எங்கள் இருவருக்கும் பொதுவாக இருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஆராதனைதான். அவர்கள் பக்தி எவ்வளவு பெரிது!

வெளி நாடுகளில் இம்மாதிரி ராமகிருஷ்ணர் அன்பர்களைச் சந்திக்கும், கேட்டறியும் வாய்ப்புகள் பல எனக்குக் கிடைத்தன. ஸ்விச்சர்லாந்து, பிரான்ஸ், இங்கிலாந்து, அமெரிக்கா, ஜப்பான் முதலிய எல்லா நாடுகளிலும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பக்தர்கள் இருக்கிறார்கள். பல இடங்களில் சங்கங்கள் அமைத்து, வழிபாடுகள் முறையாக நடந்து வருகின்றன. பல இடங்களில் சிறு குழுக்கள் ஆங்காங்கே இருக்கின்றன. இவர்கள் மொழியிலும், நாட்டிலும், கலாச்சாரத்திலும் வேறுபட்டவர்கள். ஆனால், இவை அனைத்துக்கும் மேலாக ஒரு ஒற்றுமையிருக்கிறது. அது தான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பால் அவர்கள் அனைவருக்கும் உள்ள மகத்தான பக்தியாகும்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் படித்துப் பட்டம் பெற்றவரல்லர். அவர் ஆரம்பப் பள்ளியில் மாத்திரமே பயின்றார். அவர் தாய் மொழியே அவருக்குச் சரியாகத்தெரியாது. ஆங்கிலம் போன்ற பிறமொழிகள் சிறிதும் தெரியாதவர். பொருளில்லாத குடும்பத்தில் பிறந்து, எளிமையே உருவாக வளர்ந்தவர். அப்படியிருந்தும் குறுகிய காலத்தில் அவர் பெயர் நம்நாட்டின் மூலைமுடுக்குகளில் மாத்திரம் அல்லாமல் உலக முழுவதும் பரவியிருப்பது பேராச்சரியமல்லவா? அதற்குக் காரணம் என்ன?

மனிதன் பிறக்கிறான்; சில ஆண்டுகள் இருக்கிறான், சாகிறான்; ஆனால் சாவிற்குப்பின் வாழ்வு உண்டா என்ற எண்ணம் எல்லோரையும் திகைக்க வைக்கிறது. நம் விஞ்ஞான அறிவும் ஆராய்ச்சியும் இதற்குப் பதில்கூற இயலவில்லை. நம் சமயங்கள் "இந்த வாழ்விற்குப் பிறகும் நம் ஆன்மா இருக்கின்றது" என்று சொல்லுகின்றன. ஆனால் அதைக் கண்டவர் எவரும் இல்லை. எனவே சமயங்களில் மக்கள் நம்பிக்கையிழந்தார்கள். சமயம் என்பதும் ஆன்மீக வாழ்வுஎன்பதும் சிலசுயநலக்காரர்களின் கற்பனை என்ற எண்ணம் அறிவாளிகளிடம் பரவிற்று. அச்சமயத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தோன்றினர். அதேசமயத்தில்தான் நரேந்திரரும் (பின் விவேகானந்த சுவாமிகளாக விளங்கியவர்) தோன்றினர். நரேந்திரர் விஞ்ஞான மனம் படைத்தவர். பெரிய அறிவாளி! அவருக்கும் இதே சந்தேகங்கள் தோன்றின. இவற்றை நீக்கப் பலரிடம் சென்றார். எவரும் கடவுள் உண்டு என்று தைரியமாகச் சொல்லவில்லை.

இறுதியில் ராமகிருஷ்ணரை நாடினர். அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கேட்ட முதல் கேள்வி, "கடவுள் என்று ஒருவர் உண்டா"? என்பதுதான். மற்றவர்கள் குழம்பிய இக்கட்டத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பதில் "டாண்" என்று வந்தது. "ஆம், குழந்தாய்! கண்டிருக்கிறேன்; உன்னையும் புற உலகத்தையும் காண்பதைவிட அதிகமாகக் காண்கிறேன்" என்றார். நரேந்திரர் ஒருகணம் திகைத்

துப் போனார். ஏனெனில் எவரிடமும் கிடைக்காத பதில் அல்லவா? உடனே துணிந்து மறுபடியும் கேட்டார், "எனக்குக் கடவுளைக் காண்பிக்க முடியுமா"? என்று. "ஆம், முடியும்! நான் சொல்லும் நெறிகளைப் பின்பற்றினால் உனக்கும் காண்பிக்க முடியும்" என்று பதில் வந்தது.

இதுவே தற்கால உலகின் ஆன்மீகவாழ்க்கைக்கும், சமய போதனைகளுக்கும் புத்துயிர் அளிப்பதாக அமைந்தது. "இதோஒருமனிதர் தன் வாழ்க்கையில் ஆண்டவனை அடைந்து மற்றவர்களும் காண வழிகாண்பிக்கிறார்" என்பது எல்லா சமயவாதி களுக்கும் புதிய நம்பிக்கையை உண்டாக்கிற்று. சமயம் என்பது வெறும் பேச்சல்ல; சடங்கல்ல; சின்னங்கள் அல்ல;வெறும் படிப்பல்ல. "ஆன்மீக அனுபூதிதான் உண்மையான சமயம்" என்று ஸ்ரீராம கிருஷ்ணர் போதித்தார். "எல்லாச்சமயங்களும் ஆண்டவனை நாடும் வழிகளே" என்று அவர் அனுபவத்தில் கண்டுகாண்பித்தார். "பேரானந்தவெள்ளம்பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஓடுகிறது. எடுத்த தேகம்விழுமுன் புசிப்பதற்குச்சேரவாரும் செகத்தீரே!" என்று அறைகூவினார்.

இத்தகைய உயிர் கொடுக்கும், மக்களை உய்விக்கும், செய்திக்காக, உலகெங்கும் மக்கள் பேரார்வத்துடன் காத்துக்கொண்டிருக்கிறார்கள்; அதை அவர்களுக்கு அள்ளிக்கொடுக்க, பரிசுத்தமான இளைஞர்கள்தான் தேவை. நம் நாடுமுன்னேறவேண்டுமானால் இவ்வன்புச்செல்வத்தைப் பருகி, தூய்மையான பக்தியில் ஈடுபட்டு நாட்டின் சேவைக்காகவும், உலகின் சேவைக்காகவும் தங்களை முற்றிலும் அர்ப்பணம் செய்யும் இளைஞர்கள்— ஆண்களும், பெண்களும் தேவை.

இந்துமதாபிமான சங்கங்கள், அத்தகையஇளைஞர்களை உண்டாக்கவேண்டும். நல்லகுடும்பத்தார் இந்த லட்சியத்தை ஏற்றுத் தங்கள் குழந்தைகளுக்கு இவ்வுயர்ந்த லட்சியங்களை ஊட்டி, நாட்டின் சேவைக்காக அர்ப்பணமாக, சிறந்த குழந்தைகளைக் கொடுப்பார்களாக!



விவேகானந்தர்

# விவேகானந்தரின் நிறைநிலை

சுவாமி
சித்பவானந்தர்



சித்பவானந்தர்

நிறைநிலை எய்துதல் அலாதியாக மனிதனுடைய செயலன்று. உயிர்கள் அனைத்தும் தம் போக்கில் உயர்வையும் நிறைவையும் எய்திவருகின்றன. எதனிடத்து நிறைவு காணப்படுகிறதோ அது தனது வாழ்க்கையை நன்கு பயன் படுத்துவது ஆகிறது. பண்பட்ட உயிரைப் பாராட்ட நாம் கடமைப்பட்டிருக் கிறோம். நிறைநிலை எய்தியுள்ள காளை, சிவனுருக்கு வாகனமாகிறது. காளையை வடமொழியில் ரிஷபம் என்கிறோம். இறைவனார் ஊர்ந்து செல்லுதற்கு அது தகுதி வாய்ந்தது. ஆதலால் அதனிடத்துத் தெய்வப் பெற்றியும் பெரிதும் அமைந்திருக்கிற தென்பது சொல்லாமலே விளங்குகிறது உடல் கட்டும் உறுதியும் வாய்க்கப்பெற்ற இளைஞன் ஒருவனைக் காளை என்கிறோம். சம்ஸ்கிருதத்தில் அவன் நர ரிஷபன் என அழைக்கப்படுகிறான். ஏறு என்னும் சொல்லும் திட்பம் வாய்க்கப் பெற்ற காளையையே குறிக்கிறது. சிவபெருமான் 'அமரர் ஏறே' என்று அழைக்கப் படுகிறார். தேவர்களுள் தலைசிறந்தவர் என்பது அதன் பொருள். ஆதலால் அவர் மகாதேவன் எனப்படுகிறார். மக்களுள் சிறந்தவன் காளை எனக் கூறப்படுவது போன்றே நரோத்தமன் எனவும் நவிலப்படுகிறான். விவேகானந்தருக்கு அமைந்திருந்த நரேந்திரன் என்னும் பிள்ளைத் திருநாமம் முற்றிலும் பொருத்தமானது. நரர்களுக்கு இந்திரன் அல்லது தலைவன் என்பது அதன் பொருள். தேவர்களுக்கு இந்திரனாக வாய்ப்பவன் தேவேந்திரன. நரர்களுக்கு இந்திரனாக வாய்ப்பவன் நரேந்திரன். பெயருக்கேற்ற பண்பு நரேந்திரநாதனிடம் இருந்தது. அவரிடம் மிளிர்ந்த மானுட மாண்புகளை ஆராய்கிறவர்களுக்கு நலன்மிக வாய்க்கும்.

கொஞ்ச காலத்துக்கு முன்பு அமெரிக்கப் பேராசிரியர் ஒருவர் மனிதன் என்னும் தலைப்புத்தாங்கியிருந்த புத்தகம் ஒன்றை வெளியிட்டிருந்தார். அது இப்பொழுது அச்சில் இல்லை. சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிக்கிறதென்றும், கடைசியில் அது மனிதன் நிலை எய்துகிறதென்றும் அவர் நிரூபித்துக் காட்டியுள்ளார். "எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான் யாதினும் அரிது அரிது காண்" என்னும் பழைய கோட்பாட்டைப் புதிய முறையில் அவர் பகர்ந்திருக்கிறார். நிறை மனிதன் ஒருவனுக்கு இருக்க வேண்டிய உடல் அமைப்பை அவர் முதலில் விளக்கினார். அந்த

விளக்கத்துக்கு ஏற்ற உடல் அமைப்பு விவேகானந்தரிடம் இருந்ததைப் புள்ளி விவரத்தோடு அவர் வெளியிட்டிருந்தார். அடுத்தபடியாக மனிதனது மனபரிபாகம் எத்தகைய பெருநிலை எய்தவேண்டும் எனபதை எடுத்துரைத்தார். பிறகு சீலத்திலே மனிதன் எப்படி மேன்மையுற வேண்டும் என்பதையும வெளியிட்டார். இறுதியாக மனிதனிடத்து ஞானம் எப்படி மேலோங்கமுடியும் எனபதையும் தெரிவித்தார். இத்தனைவித மானுட லக்ஷணங்களெல்லாம் விவேகானந்த ரிடம இருந்ததாக அவர்கூறுவாராயினர்.

மானுட அமைப்பிலே மேனி, மனம் ஆகிய இரண்டும் முக்கியமானவை களாம். நிறை மனிதன் ஒருவனிடத்துத் திட்பம் வாய்ந்த தேகமும், திண்ணிய மனதும் இயல்பாக அமைந்திருகக வேணடும். உடல உள்ளம் ஆகிய இரு கூறுகளிலும விவேகானநதா நிறைவு மிக வாயக்கப்பெற்றிருந்தார். பலவித மான உடற்பயிற்சிகளைச் செய்து உறுதி யும வலிவும் வாய்க்கப்பெற்ற உடலை அவர் பெற்றிருந்தார். குஸ்தி பிடிப் பது, சிலமபம் விளையாடுவது ஆகிய இரண்டிலும் அவர் தனிச்சிறப்பு எய்தி யிருந்தார். அவருடைய முகததை மட்டும தனியாக எடுதது மொழியு மிடத்து, அதனிடத்து அலாதியான நிறைவு பொலிந்திருந்தது. மாட்சிமை யும, வசீகரமும் நிறைநதவைகளாக அவ ருடைய கண்கள் ஜொலிததுக்கொண் டிருந்தன. கமலக்கண்ணன் என்று அவரைக் கூறுவது பொருந்தும்.

உலகிலே யாராலும் அறிமுகப் படுத்தாத வேற்றுஆக விவேகானந்த சுவாமிகள் 1893-ஆம ஆண்டு, செப்டம்பர் மாதம் அமெரிக்காவில் சிகாகோ நகரில் நிகழ்ந்த சர்வமத மகாசபையில் பிரசன்னமானர். மேடையிலே எழுந்து நின்று அவர் திருவாய் மலர்ந்தருளியது அங்கு கூடியிருந்தவர்களுடைய உள் ளத்தை முற்றிலும் கவர்வதாயிற்று. சூர்யோதயத்தில் சந்திரனும், நக்ஷத் திரங்களும் தாமாகத் தமது சோபைகளை இழப்பதுபோன்று விவேகானந்தர் முன் னிலையில் மற்ற மதப்பிரசங்கிகள் தாமாகவே பின்னணிக்குப் போய்விட் டனர். குரலோசை என்ருல் அவருடை யதுதான் குரலோசை. பண்பட்ட ஓசை கேட்பதற்கு மிகவும் வசீகரமானது. கருத்தை எடுத்து வழங்குதற்கு அது முற்றிலும் பொருத்தமான கருவி. ஆள வந்தான் என்று அந்த அண்ணலைத்தான் இயம்ப வேண்டும்.

மனிதன் உடலில் நிறைநிலை எய்து வது வேண்டப்படுவதே. ஆனல், உட லிலும் உயர்ந்தது உள்ளம். உள்ளத்தின் பரிபாகத்தில் மனிதன் அடைந்திருக்கிற உயர்வே உண்மையான உயர்வு ஆகும்.

> வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> உள்ளத் தனைய துஉயர்வு''

என்பது பொய்யாமொழி. விவேகானந் தரது உள்ளத்தின் பரிபாகத்தை ஆராய்ந்து பார்ப்போம். அவருடைய உபாசனமூர்த்தி ஸ்ரீராமன். உபாசன மூர்த்திக்கும் உபாசகனுக்கும் இடையில் உள்ள தொடர்பை நாம் அறிந்திருப்பது அவசியம். உபாசனமூர்த்தியின் மகிமை களெல்லாம் உபாசகனுக்கும் வந்தமை கிறது என்பது கோட்பாடு. உபாசன மூர்த்தியாகிய ஸ்ரீராமனிடம் இருந்த சிறப்பு ஒன்று ஆராய்ச்சிக்குரியதாகும். அடுத்தநாள் இளவரசுப் பட்டாபிஷேகம் அடையப் பெறுவதாக எண்ணி அவன் அயோத்தியில் படுக்கச் சென்ருன். ஆனல், விதிவசத்தின் விளைவாக அடுத்த இரவு அயோத்தியினின்று விலக் கப்பட்டவனுக ஒரு மரத்தடியில் அவன் படுத்துறங்க வேண்டியதாயிற்று. ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் இருபத்து

நான்குமணி நேரத்திற்குள் இவ்வளவு பெரிய விபத்து நோவதாயிற்று, ஆனல், ஸ்ரீராமன் அதை விபத்தாக மனதில் வாங்கிக்கொள்ளவில்லே. ராஜரீதியான வாழ்வையும், வறிஞன் ஒருவனுடைய வாழ்வையும் அவன சமனுக ஏற்றுக் கொண்டான். அவைகளுக்கிடையிலுள்ள ஏற்றத்தாழ்வை அவன் மனத்தில் வாங்கவில்லே, அத்தகைய ராமமூர்த்தியை உபாசித்த விவேகானந்தருக்கும் கிட்டத்தட்ட அதுபோன்றவிபத்துஒன்று விளேவதாயிற்று. அவருடைய தந்தை விசுவநாததத்தர் உயிர் வாழ்ந்திருந்தபொழுது ஒரு ராஜகுமாரனுக்கு நிகராக அவர் வாழ்ந்துவந்தார். தந்தை திடீரென்று காலமான சில நாட்களுக்குள் வறுமை நோய்க்கு அக்குடும்பம் ஆளானது. அப்பொழுது விவேகானந்தர் பெயர் நரேந்திரநாதன். முன்பிருந்த உடைமையையும் பின்பு வாய்த்த வறுமையையும் சமனுகக் கருதிச் சமாளித்தது அவருடைய நிறைநிலேயாகும்.

பெற்றெடுத்த தாயையும், தமக்கைமார் இருவரையும், தம்பிமார் இருவரையும் பராமரிக்கும் பொறுப்பு நரேந்திரனுடையதாயிற்று. ஆனல், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அந்த நரேந்திரனேத் துறவறத்துக்கு ஆயத்தப்படுத்தி வந்தார். தன் கடமை யாது என்னும் ஐயம் நரேந்திரன் உள்ளத்தில் எழுந்தது. தாயையும், உடன்பிறந்தவர்களேயும் புறக்கணித்துவிட்டுத் துறவறம் பூணுவதா? அல்லது தன்னவர்களுககுத் தன் கடமையைப் புரிவதா? என்று அவன் தயங்கிககொண்டிருந்தான். தன் மனத்திலிருந்த ஐயப்பாட்டை த்தாயிடமும்அவன் தெரிவித்தான். எது நல்லதோ அதைச் செய்யும்படி தாயார் அவனுக்கு அனுமதி கொடுத்தார். உலக நன்மை என்னும் பெரிய கடமையின் பொருட்டுக் குடும்ப நன்மை என்னும் சிறிய கடமையை ஒதுக்கி வைத்துவிட்டுச் சாந்தமூர்த்தியாக அவன் வெளியேறியது அவனுடைய நிறைநிலேக்கு எடுத்துக்காட்டு ஆகும்.

''அன்பின் வழியது உயிர்நிலே' என்பது மறைமொழி. சுவாமி விவேகானந்தரிடமிருந்த பேரன்புக்குச் சான்றுகள் சிலவற்றை எடுத்துரைக்கலாம். துறவியாக அவர் இந்தியா முழுதும் யாத்திரை செய்துகொண்டிருந்தபொழுது ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவர் இவருடைய சிஷ்யராகக் கிளம்பிவிட்டார். இருவரும் நடந்து போய்க்கொண்டிருந்தபொழுது சிஷ்யருக்குத் திடீரென்று வெப்ப நோய் வந்துவிட்டது. வடிவத்தில் சிஷ்யர் குருவுக்குப் பின்வாங்கியவர் அல்லர். அத்தகைய தடித்த மேனியைத்தூக்கித் தம் தோளின் மீது போட்டுக்கொண்டு விவேகானந்தர் மூன்றுமைல் தூரம் நடந்து சென்று ஒரு ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்காகச் சேர்த்தார். ''ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும்மே'' என்பது கோட்பாடு. விவேகானந்தருடைய கேண்மை அதற்கு எடுத்துக்காட்டு ஆயிற்று. அவர் உலகம போற்றும் பரமாச்சாரியரானபிறகு அவருடைய திருமடத்தில் கூலிவேலே செய்துகொண்டிருந்த சாநதால் என்னும் கீழ் மக்களுக்கு அவர் தாமே உணவு சமைத்துப் போட்டுப் பணிவிடை பண்ணியது அவருடைய அன்புக்கு மற்ருேர் எடுத்துக் காட்டாகும்.

கடவுள் ஆற்றல் சொருபமாகவும், அன்பு சொருபமாகவும், அறிவு சொருபமாகவும்இருக்கிருர். பேராற்றல் படைத்த மனிதன் கடவுள் தன்மை படைத்தவன ஆகிருன். விவேகானந்தர் அதற்கு நல்ல எடுத்துக்காட்டாக விளங்கினுர். ''அன்பும் சிவமும் ஒன்று'' என்பதுகோட்பாடு.

விவேகானந்தர் படைத்திருந்த தூய அன்பு வரம்பு கடந்தது. அதற்கு மேல் அவர் கொண்டிருந்த தெய்வ பக்தி அளப்பரியது. அன்பு சொரூபமாகவே அவர் இருந்ததனால் அவரோடு தொடர்பு கொண்டவர்களெல்லாம் அவருடைய அன்புக்கு இலக்கானார்கள். அவர்களி டத்திலும் இயல்பாகவே அன்பு ஓங்குவ தாயிற்று. இதற்கெல்லாம் மேலாக விவேகானந்தர் படைத்திருந்த அறிவை வாலறிவு என்று சொல்ல வேண்டும். வாலறிவன் என்பது இறைவனுக்குரிய விளக்கமாகிறது. இறைவன் வாலறிவன் என்னும் கோட்பாட்டை விவேகானந்தர் மூலமாகத்தான் நாம் அறிந்து கொள்ள முடியும். இப்பிரபஞ்ச சம்பந்தமான ஞானத்தை எடுத்துக் கொண்டால் அதன் உச்ச நிலையை எட்டியவர் விவே கானந்தர். எந்தக் கலை ஞானத்தைப் பற்றியும் தெளிவுற விளக்க அவருக்கு இயன்றது. ஒவ்வொரு கலை ஞானமும் பரஞானத்தில் கொண்டு சேர்க்கிறதென் பதையும் தெளிவுற அவர் விளக்குவார். அவர் மேல்நாடுகளுக்குக் கப்பல் பிரயா ணம் செய்து கொண்டிருந்த பொழுது அதில் பொறிக்கப் பெற்றிருந்த நீராவி யந்திரத்தின் நடை முறையைப்பற்றி அதன் எஞ்ஜினியர் இவருக்கெடுத்து விளக்கிக் காட்டினார். பிறகு விவேகானந் தர் கேள்விகள் பல கேட்க ஆரம்பித்தார். இவர் கேட்ட முறை எஞ்ஜினியருக்குப் பெரு வியப்பூட்டியது. அந்தந்த் துறையி லுள்ள நிபுணர்களுக்கு மட்டும் விளங்கு கிற நுட்பங்கள் பலவற்றை இவர் சர்வ சாதாரணமாகக் கேட்டது அந்த எஞ்ஜி னியரைத் திகைக்கச் செய்து விட்டது. அமெரிக்காவில் பௌதிக விஞ்ஞானிக ளோடு அவர் இயற்கைத் தத்துவத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த பொழுது மின் சக்தியின் வல்லமையை விவே கானந்தர் அவர்களுக்கு எடுத்து விளக்கி னார். கம்பிகள் மூலமாக நீங்கள் கொண்டு போகிற மின் சக்தியை இயற்கைக் கம்பி யின் துணையில்லாமலேயே கொண்டு போகவல்லதென்று அவர் கூறினார். அந்தக் காலத்தில் வொயர்லஸ், (wire-less) ரேடியோ போன்ற மின் சக்தியைப் பற்றிய முன்னேற்றம் உருவெடுக்காதி ருந்தது. அதுஉருவெடுப்பதற்கு முன்பே அதன் சாத்தியத்தைப்பற்றி விவேகானந் தர் பகர்ந்தார். இயற்கைத் தத்துவத்தைச் சுவானுபூதியில் அறிந்திருந்த தீர்க்க தரிசியாதலால் விவேகானந்தருக்கு அது சாத்தியமாயிற்று.

பரஞானம் அல்லது கடவுளைப் பற்றிய பேரறிவு, ஞானத்தின் முடிந்த நிலையாகும். பரஞானமே வடிவெடுத்த வர் சுவாமி விவேகானந்தர். குரு ஆகிய ராமகிருஷ்ணரிடத்திலும், சிஷ்யர் ஆகிய விவேகானந்தரிடத்திலும் தனிச் சிறப்பு ஒன்றுண்டு. உலகத்திலுள்ள மதங்களை யெல்லாம் சமரச நோக்கத்தோடு ஆராய்ந்து அனுஷ்டித்துப் பார்த்த வர்கள் இவர்கள் இருவரும். எல்லா மதங் களும் ஒரே பரம் பொருளை அடைவதற் கான மார்க்கங்கள் என்னும் அனுபூதியை அடையப் பெற்றவர்கள் இவர்கள் இரு வரும். சிற்சில குறைபாடுகள் சில மதங் களின் விளக்கத்தில் அமைந்திருக் கின்றன வெனினும் அக்குறைபாடுகள் ஆத்மசாதனத்துக்கு இடைஞ்சல் ஆக மாட்டா என்பதும் இவர்களது துணிபு. அமெரிக்காவில் நிகழ்ந்த சர்வமதமகா சபையில் சுவாமி விவேகானந்தர் அலாதி யான ஸ்தானம் வாய்க்கப்பெற்றவராய் இருந்தார். எந்த மதத்தையும் உள்ளபடி விளக்கும் திறமை அவர் ஒருவருக்கே இருந்தது. எல்லாமதங்களுக்கும் தாய் மதமாய் இருப்பது இந்துமதம் என்பதை யும் தத்துவ பூர்வமாக அவர் விளக்கிக் காட்டினார். ஆதலால், சர்வமதமகா சபையின் அதிஷ்டான தெய்வமாக அவர் திகழ்ந்தார். அவர் ஒரு பிரம்ம

ஞானி. இப்பிரபஞ்ச ஞாபகத்தில் இருப்பதும், இதை ஒதுக்கி வைத்துவிட்டு எப்பொழுது வேண்டுமானாலும் சமாதி நிலையில் பரத்தில் ஒன்றுபட்டு இருப்பதும் அவருக்கு விளையாட்டுப்போன்று அமைந்திருந்தன. இகம், பரம் இரண்டிலும் உயிர்க்குயிராய் இருப்பது கடவுள் என்பதற்கு அவருடைய சொரூபம் சிறந்ததொரு விளக்கமாயிற்று. 1902-ஆம் வருஷம், ஜுலைமாதம் 4-ஆந்தேதி அவர் உடலை உகுத்துவிட்டுப் பரத்தில் ஒன்றுபட்டார். அதைக் குறித்து அவர் நான்கு வருஷங்களுக்கு முன்பே சிஷ்ய கூட்டத்துக்குச் சொல்லிவைத்திருந்தார். உடலெடுத்து உலகவாழ்வில் ஈடுபட்டதும், அதை உகுத்துவிட்டுப் பரத்தில் ஒன்றுபட்டதும் அவருக்கு வெறும் விளையாட்டாம். மனிதன் ஒருவன் அடையக் கூடிய நிறைநிலைக்கு விவேகானந்தருடைய வாழ்வு முழுதும் நல்லதொரு விளக்கம் ஆகிறது.





காந்தியடிகள்

# எம்மான் காந்தியும் இந்து மதாபிமான சங்கமும்

வித்துவான் பூ. அமிர்த லிங்கன் பி. ஏ.



பூ. அமிர்தலிங்கன்

பாரத தேசந் தன்னை வாழ்விக்க வந்த மகாத்மா காந்தி தென்னுட்டுப் பகுதிகளில் சுற்றுப்பயணம் செய்து விடுதலை உணர்ச்சியைப் பரப்பி வந்த அக் கடுமையான காலத்தே, அவரது திருவடி தீண்டப்பெறும் பெருமை, காரைக்குடிக்கு மூன்று முறை வாய்த்த தென்ருல், அது செட்டிமார்நாட்டு மக்க ளினநாட்டுப் பற்றைக் காட்டும் வரலாற் றுச்சான்று எனக் கொள்வதில் யாதொரு தடையுமில்லை.

அங்ஙனம் சுற்றுலா வந்த மூன்று முறைகளில் இரண்டாம் முறை தவிர ஏனையமுதலும்மூன்ருவதுமான இரண்டு தடவைகளில் இந்து மதாபிமான சங்கத் தோடு தொடர்பு கொண்ட குறிப்பிடத் தக்க அருமையான நிகழ்ச்சிகள் இரண்டு உண்டென்ருல் அவை நினைந்து பாராட் டிப் போற்றுதற் குரியனவல்லவோ!

1921 செப்டம்பரில் முதன் முறை யாகக் காந்தியடிகள் காரைக்குடிக்கு எழுந்தருளியபோது, பிறந்து நான்கு ஆண்டுகளேயே கடந்து நின்ற இ. ம. சங்கம் ஒரு வந்தனேபசாரப் பத்திரம் வாசித்தளித்து மகாத்மாவை வரவேற்றுப் பெருமை கொண்ட நிகழ்ச்சி, இன்றைய இளைஞர் சமுதாயம் அறியாத ஒரு அரிய செய்தியாகும். அவ் வரவேற்பு நிகழ்ச்சி யின் சிறப்புச் செய்தி என்னவென்ருல் அவ் வந்தனேபசாரப் பத்திரம் தமிழிலே எழுதப் பெற்றுக் கதர்த் துணியில் அச்சடிக்கப் பெற்று வழங்கப் பெற்றது என்பதாகும். அதில் இன்னுமொரு சிறப்பான அம்சம் என்னவென்ருல் 46 ஆண்டுகட்குமுன்னர் வழங்கப்பெற்ற அப் பத்திரத்தின் பிரதிகள், தலைவர்—செயலாளர் முதலிய பல மாற்றங்கள் ஏற்பட்டிருந்துங் கூட, இன்னும சங்கத் தாரால் பொன்னேபோல் பாதுகாக்கப் பெற்று நம் பார்வைக்குக் கிடைக்குமாறு இருப்பதாகும்.

அப் பத்திரத்தை நோக்கினுல் செட்டிமார் நாட்டின் அன்றைய நிலை யையும் – அன்று தமிழ் உரைநடை, எப்படி இருந்தது என்பதையும் ஒருவாறு நுனித்து அறியலாம். சங்கம் தன் பொன் விழாவைக் கொண்டாடும் இவ் வேளை யில் அப்பொன்னுன நிகழ்ச்சியை நினைவு கூர்தல் மனத்திற்கு மகிழ்ச்சியூட்டுவதா கும். அப்பத்திரத்தின் படியை அப்படியே கீழே தருகிறேன்.

ஓம்

காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தார்

**மகாத்மா காந்தியடிகளுக்கு**

வாசித்துக் கொடுத்த

# வந்தனோபசாரப் பத்திரம்

"கோவே வருக! சாந்த குணக் குன்றே வருக! நலம் பொழியும்
குயிலே வருக! தவத்தினரின் கொழுந்தே வருக! அருள்சுரக்கும்
ஆவே வருக! அனைத்துயிர்க்கும் அண்ணல் வருக! அடியர் மகிழ்
அமுதே வருக! உண்மைநெறி யறிந்தோய் வருக! இந்தியரின்
தேவே வருக! சத்தியத்தின் தெளிவே வருக! பாரதத் தாய்
சேயே வருக! விருப்பளிக்கும் தீரா வருக! நறை யொழுகும்
காவே வருக! சுதந்திரத்தின் கையே வருக! திருவளிக்கும்
கடலே வருக! கரம் சந்த்ர காந்தி வருக! வருகவே!!"

**ஒப்புயர்வற்ற திப்பிய மூர்த்தி!**

அருளே வடிவாய், அன்பே மொழியாய், இன்பே செயலாய் விளங்கத் திருவவதாரஞ் செய்த தேவரீர், தேகத் தளர்ச்சியை வெறுத்து, தேசக் கிளர்ச்சியைப் பொறுத்து, அவகாசக் குறைவையுங் கருதாது இந் நாட்டிடை திருவடி வைத்து எங்கட்கு நலம்பாலிக்கவெண்ணி, ஈண்டுப் போந்தமைக்கு நாங்கள் மிக மிக வந்தனம் புரிகின்றோம்.

**அன்புள்ள மகாத்மாவே!**

"குண நன் குணராக் கொடியோ ரிடத்திற் குண நன்குடையார் குறுகார்" என்னும மூதுரையை ஆராய்ந்து, தாங்கள் அக்குணமுடைய அதமர்பாற் செல்லாது இந்திய மக்களா யியைந்து வாழும் எம்மவரிடையே இன்புற்றிருக்கின்றீர்கள், இவ் வுண்மையை "நற்குணமுடைய கற்புடைப் பெண்டிருடன் அருளும் அன்புந்தாங்கி யின்சொலின், விருந்து புறந்தரும் மேதகையாளராம் இந்தியரன்றி அறிவோர் யாருளர்?

**உலகெனுந் தாய்க்குத் திலகமா முனியே!**

தாங்கள், ஹிந்து மதத்தின் உண்மைத் தத்துவங்களைத் துருவிக் கண்டு அவ்வழி கடைப்பிடித்து ஒழுகி உலகினரை மோகிப்பித்தலால், (மோகனம்) என்பதும், பாரத தேவிக்குத் தொண்டு புரிவதே பெரும் பேறெனமதித்து உழைத்தலால் (தாஸ்) என்பதும் அத் தேவிக்கு இடுக்கண் களைவதில் விரைந்து செல்லுதலால் (கரம்) என்பதும், முப்பத்து முக்கோடி இந்தியர் களாகிய தேவர்கள் மகிழ, ஹிந்துமத தத்துவங்கள் என்ற அமுதகிரணங்களை வழங்கலால் (சந்திரன்) என்பதும் உறங்கும் காலத்தும் உலகெலாம் சென்று புரக்கும் ஆணையாந் தெய்வத்தன்மை உங்கள் பால் அமைந்திருத்தலால் (காந்தி) என்பதும் ஒருங்கு சேர்ந்து தங்கள் திருப்பெயராய் "மோகனதாஸ் கரம் சந்திர காந்தி" என்று அமைந்தது போலும், என எங்கள் இலக்கண முறையால் அறிந்து மகிழ்கின்றோம்.

**அருந்தவச் செல்வ!**

தாங்கள் ஹிந்து மதப் பெருமை தாழா வண்ணம் முயற்சிக்கவும், நனி வாழ்ந்து இன்புறவும், எண்ணிய எண்ணியாங்கு எய்தவும், பாரத நாடு பண்புற வாழவும், நல்லருள் புரியுமாறு எங்கும் நிறைந்து பொங்கு பேரொளியாம் புண்ணிய முதல்வனைப் போற்றுகின்றோம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

காரைக்குடி,
துன்மதி ஞூ
புரட்டாசி மீ 7 உ

இங்ஙனம், தங்கள் அன்புமிக்க,

ஹிந்து மதாபிமான சங்கத்தார்.

22--9—1921

இனி, காந்தியடிகள் மூன்றும் முறையாகச் செட்டிமார் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்த பொழுது நடந்த தமிழ்ச் செய்தியைக் காண்போம்.

சங்கத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவரும், பல்லாண்டுகளாகச் சங்கத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டவரும், சங்கத்தாரால் மணிவிழா எடுக்கப் பெற்றுத் 'தமிழ்க்கடல்' என்ற சிறப்புறு பட்டம் தரப் பெற்றவரும், சங்கததிற்குப் பல்லாற்றானும் பொருள் திரட்டித் தந்து வளப்படுத்திக் கொண்டிருப்பதோடு, தன் சொந்தக் கைப் பொருள் கொண்டு சங்கக் கட்டிடத்தின் மேல மாடியாக 'ராய. சொ. உமையாள்' மண்டபத்தை நிறுவிப் புகழ் பெற்றெளிர்பவரும், இன்று' சிவமணி'–'சிவம்பெருக்கும்சீலர்'–'சிவபூசைச் செல்வர்' என்ற பெருமையோடு "சைவமுந் தமிழுந் தழைத்தினி தோங்கத்" தொண்டாற்றி வருபவரும், இன்றும் சங்கத்தின் தலைவராக விளங்கி வருபவருமான, தமிழ்க் கடல் ராய. சொ. அவர்கள் ஓர் காந்திக் கிறுக்கர்.

1934 ஆம் ஆண்டு, மகாத்மாகாந்தியடிகள் மனமுவந்து ராய. சொ. அவர்கள் வீட்டிற்கு வந்து விருந்தினராயமர்ந்து சென்றார்கள் என்ற செய்தி மகிழ்ச்சியோடு பெருமிதத்தையும் நமக்கு ஊட்டும் நிகழ்ச்சியாகும். தேசத்தின தந்தையைத் தம வீட்டு விருந்தினராகப் பெறுதல் பெறுதற்கரிய பேறல்லவா? இதுபற்றி ராய சொ. அவர்கள் 1948 ஆம் ஆண்டில் எழுதிய ஒரு கட்டுரையில் காணும் சில வரிகளைக் கீழே தருகிறேன்.

"அறவாழி அந்தணர்-கருணைக்கடல்–உண்மையே உருவெடுத்தவர்–எவ்வுயிர்க்கும் தீங்கு நினையாதவர்–உலகனைத்தும் ஓர் உயிர் என்று உணர்ந்தஞானி–பொறியடக்கியாண்ட பெருந்தகை–காந்தியடிகளை, விருந்தினராய்ப் பெறும் பேற்றை நான் பெற்றேன். என்உள்ளக் கமலத்தே இடம்பெற்ற அத் திருப்பாத தாளி,என் சிறுகுடிலையும்புனிதமாக்கியது.

''எம்மையாளுடை நாயகன்
விருந்தினுக்கு இசைந்தான்'' என்ற

கண்ணபிரானை விருந்தினராகப் பெற்ற விதுரனின்கரைபுரண்டோடிய மகிழ்ச்சிப் பெருக்கினை ஒப்ப" என் உள்ளம் இன்பக் கடலாடியது. இன்னோரன்ன நிகழ்ச்சிகள் இறவாதவை. காலாவதி இல்லாதவை."

"காந்திக் கிறுக்க''ராய தமிழ்க்கடல், மகாத்மாவுககுச்சூட்டிய பாமாலைகள்பலப் பல. அவற்றுள் 'காந்தி பிள்ளைத் தமிழ்' என்ற பிரபந்தம் மிக்க சிறப்புடையது. ''காந்தியும் வள்ளுவரும்''என்ற அவர்கள் நூலிலுள்ள ஒரு வெண்பாவோடு இப் பகுதியை நிறைவு செய்யலாம்.

இந்தியர்க்கு வாழ்வளித்த எங்காந்தி சீர்மறந்த
அந்தகர்க்குச் சோறுண்டோ? அந்தணரே!–
[செந்தமிழா!
எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்
[உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

வாழ்க நீஎம்மான்இந்தவையத்து நாட்டிலெல்லாம் தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்ற தாமோ பாரத தேசந் தன்னை வாழ்விக்கவந்தகாந்தி மகாத்மா நீவாழ்க! வாழ்க!! என்று பாடி, மகாத்மாவை வாழ்த்திய மகாகவிபாரதி, இன்று பொன் விழா எடுக்கும் சங்கத்தையும் "குலம் உயர, நகர் உயர, நாடு உயர உழைக்கின்றார், கோடி மேன்மை நிலவுற இச்சங்கத்தார் பல்லூழி வாழ்ந்தொளிர்க நிலத்தின் மீதே!" என்று பாடி - பாடல் பெற்ற சங்கமாக–இதனை ஆக்கியருளியமையும் ஈண்டு ஒருங்கு நினைந்துமகிழத் தக்கதாம்.

சாந்தியொடு சத்தியமும்
தாயகலந்தோர் உருக்கொண்ட
காந்தியெனும் பெருமானைக்
கரங்கூப்பி வரவேற்றுத்
தீந்தமிழில் உபசாரம்
செப்பியநற் பழந்சங்கம்
ஏந்துதமிழ்ப் பணியாற்றி
எந்நான்றும் வாழியரோ!

பேராசிரியப்
பெருமகனார்

# சு. சிதம்பர ஐயர் அவர்கள்

தவத்திரு
இராமநாத
சுவாமிகள்

சிதம்பர ஐயர்

இராமநாத சுவாமிகள்

"காசியிலும் சேதுவிலும் கனகத் தருமமிட்டு நேசமுடன் ஈசர்பதம் நிதம் பணியும்" "நகரத்தார்" என வழங்கும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வாழ்ந்து வரும் ஊர்களில் பல்வகையா னும் சிறப்புப் பெற்றது "காரைக்குடி" நகரமாகும்.

செட்டிமார் நாட்டிலே எந்தஇயக்கம் துவங்கப்பெறினும் அதன் தலைமையகம் காரைக்குடியிலேயே அமைவது இயல்பு.

பெருமைக்குரிய நகரத்தார் சமூகத் தினர் உண்மையான சமயப்பற்று உடை யவர்கள். ஆயினும் இருபதாம் நூற்றாண் டுத் தொடக்கத்தில், தமது குல தருமத் திற்கேற்பப் பொருள் தேடுதலும், தேடிய பொருளைத் தக்க அற வழியில் பயன்படுத்துதலுமன்றி மற்றத் துறை களில் கருத்தில்லாமல் தங்கள் காரியமே கண்ணாக இருந்து வந்தனர்.

சிகாகோ நகரில் கூடிய சர்வமத சபையில் சுவாமி விவேகானந்தரால், எம் மதங்களினும் மேலாம் இந்து மதத்தின் இணையிலாப் பேருண்மைகள் உலகறிய உணர்த்தப் பெற்றதனை அடுத்து, பாரதத்தில் எழுந்த இந்துமத சமய மறு மலர்ச்சியாலும், அந்நிய ஆட்சியினின் றும் விடுதலை பெறும் வேட்கையால் எழுந்த தேச விடுதலை இயக்கத்தாலும் கவரப்பெற்ற அறிவு, ஆற்றல் நிரம்பிய நகரத்தார் இளைஞர் சிலர், கூண்டுக் கிளி யென இருந்த நகரத்தார் இளைஞர் சமூகத்தை எழுச்சியுறச் செய்வதற்கென அமைத்துக் கொண்டதே இப்பொழுது பொன்விழாக் காணும் 'இந்து மத அபி மான சங்கம்' ஆகும்.

இச்சங்கத்தின் மேலாம்தொண்டினை நேரில் கண்டறிந்த 'மஹா கவி' பாரதி யார், மனமாரப் பாராட்டி வாழ்த்து கின்றார்.

பல நூல்கள் பதிப்பித்தும் பலபெரியோர்
பிரசங்கம் பண்ணுவித்தும்
நலமுடைய கலாசாலை புத்தகசா
லையலவும் நாட்டியும்தம்
குலம்உயர நகர்உயர நாடுயர
உழைக்கின்றார்; கோடி மேன்மை
நிலவுறஇச் சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்துஒளிர்க நிலத்தின் மீதே!

இச்சங்கம் இந்து மத - சமய மறு மலர்ச்சி, தேச விடுதலை, மொழி வளர்ச்சி முதலிய துறைகளில் சிறந்த தொண்டாற்றியதுடன் சமூக சீர்திருத்தத் துறையிலும் பெரும்பங்கு பெற்றுக் கொண்டது.

முறையாகத் தமிழ் இலக்கியம் – இலக்கணம் கற்பிப்பதன் பொருட்டு 'இராமகிருஷ்ண வித்தியாசாலை' என்னும் பெயரால் சங்கத்தின் சார்பில் வித்தியாசாலை ஒன்றும் நிறுவப்பெற்றது. வித்தியாசாலை அமைப்பு எளிதாக நிறைவெய்தியது எனினும், இளைஞர்களின் ஆர்வத்திற்கேற்ப, பழமையான குருகுலக் கல்வி முறையையும் புதுமையான கலாசாலைக் கல்வி முறையையும் ஒருங்கு அணைத்துச் செல்லத்தக்க ஆசாரியரைக் காண்பது பெரும் பிரச்னையாக இருந்தது. இந்தச் சமயத்தில் எளிய - இனிய பண்பாடு உடையவரும் எல்லோராலும் விரும்பப் பெற்றவருமான "மஹா வித்வான்" சு. சிதம்பர ஐயர் அவர்கள் இப்பணியை மேற்கொள்ள இசைந்தது பெரும் பாக்கியமாக அமைந்தது.

ஆசிரியர் ஐயர்அவர்களை நினைக்குந் தோறும் மனம் மிக்க பெருமிதம் கொள்கின்றது. ஐயர் அவர்களின் மாணவர் குழாத்தில் ஒருவன் ஆகப்பெற்றதே என் பெரும் பாக்கியம் என்று கருதுகிறேன். ஐயர் அவர்களின் கட்டமைந்த அழகிய சிவந்த திருமேனியில் நரை காணது கருகருத்த சிகையும், முப்புரி நூலும், முழங்கால் அளவில் பஞ்சகச்சமும் காண்போர் கருத்தில் கண்ணியத்தைத் தோற்றுவிப்பதா யிருக்கும்.

திடமான கடவுள் பக்தி உடையவர்கள்; சநாதன தர்மத்தில் சிறிதும் வழுவாது ஒழுக்க நெறி நின்ற சீலர். எனினும்

''பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல; கால வகையினனே''

என்றபடி கால, தேச. வர்த்தமானங்களுக்கு இணங்க நலம் பயக்கும் சீர்திருத்தங்களையும் ஆதரவோடு ஏற்றுக் கொண்டார்கள்.

ஐயர்அவர்கள் வடமொழி, தென்மொழி இரண்டும் கற்றுத் தெளிந்தவர்கள். தமிழில் பெரிதும் வல்லவர்கள். ''பிழைப்பைக் கருதிக் கற்கும் கல்வி உண்மையான கல்வி அன்று; மனிதனை நிறை மனிதன் ஆக்குவதே உண்மையான கல்வி" என்பது ஐயர் அவர்களின் திடமான கருத்து. அவர்கள் மாணுக்கர்களுக்குக் கல்வி போதிக்கும் முறையே தனிச் சிறப்புடையது. அவர்களின் மாணுக்கர்களில் இளமை தாண்டியவர், இளைஞர், செல்வர்-எளியோர், தீவிர சீர்திருத்தக்கொள்கையினர் –பழமையில் விடாப்பிடியினர் ஆகப் பல திறத்தவர் உண்டு. எல்லோரிடமும் அன்பு காட்டி முகமலர்ந்து அவரவர் பக்குவத்திற்கு ஏற்பத் தெளிவான விளக்கம் தரும் முறை வியக்கத்தக்கதாகும்.

குருகுலக் கல்வி முறையில், ஆசாரியர் மாணுக்கர்களுக்குக் கல்வி கற்பித்த பின்னர், மேலாய வாழ்க்கைக்கான உபதேசங்களையும் செய்கிருர்.

தைத்திரீய உபநிஷத் பின்வருமாறு:-

எடுத்தியாகிற நூலை அறுத்து விடாமலிரு;
மறந்தும் சத்தியத்திலிருந்து நழுவுதல் கூடாது;
மறந்தும் தர்மத்திலிருந்து நழுவுதல் கூடாது;
மறந்தும் நல்முயற்சிகளிலிருந்து நழுவுதல் கூடாது.

இந்த உபதேசத்தை மனதில் கொண்டே ஐயரவர்கள் வாழ்ந்து வந்ததோடு மற்றவர்களுக்குப் போதித்தும் வந்தார்கள்.

பல திறத்தவர்களான மாணுக்கர்களைப் போலவே ஐயர் அவர்களின் அன்புக்குரிய நண்பர்களிலும் பல்வேறு வகையான கொள்கையினரும் இருந்தனர். அவர்களில் மஹாகவி பாரதியார், புரட்சிவீரர் சுப்பிரமணிய சிவா, விடுதலை வீரர் வ. வே. சு. ஐயர், கர்ம வீரர் திரு. வி. க. முதலியோர் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கோராவர். கருத்து மாறுபட்டவர்களையும் மதித்துப் போற்றும் அரிய பண்பாடு ஐயர் அவர்களிடத்தில் இயல்பாகவே அமைந்திருந்தது.

"கலைமகள் குடிகொண்டுள்ள இடத்தில் திருமகள் தங்கியிருப்பதில்லை" என்ற பொது வழக்கிற்கு நமது மதிப்பிற்குரிய ஐயர் அவர்களும் விலக்கானுரல்லர். எந்த நிலையிலும் மனம் கலங்காமல் எதிர்த்து நின்று வெற்றி காண்பது அவர்களுடைய தனிச்சிறப்பாகும். இச் சங்கத்தின் அரிய பல பணிகளைச் சிறப்புறச் செய்த—நமது வணக்கத்திற்கு உரிய மாஹவித்வான் சு. சிதம்பர அய்யர் அவர்களை இப் பொன் நாளில் நினைவு கூர்ந்து அஞ்சலி செலுத்துதல் நமது கடமையாகும்.



நாமக்கல் கவிஞர்

# திரு. மோ. வே. கோவிந்தராஜ ஐயங்கார்

நாமக்கல் கவிஞர்

திரு கோவிந்தராஜ ஐயங்கார், நாமக்கல்லை யடுத்த மோகனூரைச் சேர்ந்தவர்; நல்ல உயரமும் சிவந்த மேனியும், மலர்ந்த முகமும் உள்ளவர்; எப்போதும் இளஞ்சிரிப்போடு இனிக்கப் பேசும் இயல்பினர்; கடுகடுப்பும் கடுஞ் சொற்களும் அவரிடம் காண முடியாது; என் மனக்கினிய நண்பர்.

தமிழ் மொழியில் ஆழ்ந்த கல்வியறிவுடையவர்; வடமொழியிலும் நல்ல பயிற்சியுள்ளவர்; ஓரளவு ஆங்கிலமும் அறிந்தவர்; வடமொழியை விடத் தமிழ் மொழியின் மீது பற்று மிகுந்தவர்; காந்தி பக்தர்; கதருடையே அணிவார்.

தமிழ் இலக்கியங்களுள் கம்பராமாயணத்தில் அவருக்கிருந்த மெச்சத்தக்க ஆராய்ச்சியே அவருடைய தனிச்சிறப்பு. கம்பராமாயணப் பிரசங்கமும் காரைக்குடியில் சில செல்வச் சீமான்களுக்குக் கம்பராமாயணப் பாடம் சொல்லிக் கொடுப்பதுமே தமது ஜீவனமாகக் கொண்டிருந்தார்.

அப்போது (சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னால்) நான் ஓவியப் புலவனாகத் தொழில் நடத்திக்கொண்டிருந்தேன். தொழில் முறையில் நான் காரைக்குடிக்குச் சென்று திரு. கோவிந்தராஜரின் விருந்தாளியாகத் தங்கியிருந்தேன். அவருடைய செல்வாக்கினால் சில தனவான்களுடைய உருவத்தைப் படமெழுதிக் கொடுக்கும் வேலை கிடைத்தது. அந்த நாட்களில்தான் ஐயங்காரவர்கள் என்னை 'இந்து மதாபிமான சங்கத்தின்' அங்கத்தினர்களுக்கு அறிமுகப்படுத்தினர்.

காரைக்குடி இந்து மதாபிமான சங்கம் மிக உயர்ந்த நோக்கங்களுக்காக நடைபெறுவது. மதம், சாதி, மொழி முதலிய வேற்றுமைகளால் விளையக்கூடிய தீமைகளுக்கு இடங்கொடாமல் சமரச சன்மார்க்கத்தை மக்களிடை போதிப்பதும் உலகிலுள்ள எல்லா மதங்களையும் தன்னுள் அடக்கியது 'இந்து மதம்' என்பதை விளக்குவதும் இச் சங்கத்தின் குறிக்கோள்.

இந்த நோக்கத்துடன் சமயத் துறையிலும் இலக்கியத்துறையிலும் வல்லவர்களான பேரறிஞர்களுடைய சொற்பொழிவுகள் அடிக்கடி நடந்து கொண்டேயிருக்கும்.

தமிழ் நாட்டிலுள்ள சிறந்த பேச்சாளர்கள் எல்லாருக்கும் இச்சங்கத்துடன் தொடர்புண்டு,

அத்தகைய பேச்சாளர்களுள் திரு. கோவிந்தராஜ ஐயங்கார் மிகவும் குறிப்பிடத் தகுந்த ஒருவர்.

அவர் பொது நலத்துக்கான எதைப் பற்றியும் பேசும் திறமையுள்ளவரென்ருலும் கம்பராமாயணப் பிரசங்கமே அவருடைய தனிச்சிறப்பு. வடமொழியிலும் வல்லவரானதால் அவர் வான்மீக இராமாயணத்தோடு கம்பராமாயணத்தையும் சொல்லி,கம்பனுடைய சிறப்பைக் காட்டும் போது தமிழர்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியளிக்கும்.

அவருடைய தம்பி சடகோபாச்சார் என்பவர் நாமக்கல்லில் ஆயுர்வேத வைத்தியராக வசித்து வந்தார். அதனுல் திரு. கோவிந்தராஜர் அடிக்கடி நாமக்கல்லுக்கு வந்து தங்குவார். அப்படித் தங்கியிருந்த ஒரு சமயம் அவருடைய கம்பராமாயணப்பிரசங்கம் நடக்க ஏற்பாடாயிற்று. ஒரு மாதம் நடந்து பட்டாபிஷேகம் நடத்தப்பட்டது.

பிரசங்கத்தைக் கேட்க ஏராளமான மக்கள் கூடுவார்கள். அவர்களுக்குள் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் என்ற வடமொழிப்பண்டிதரும் ஒருவர். அவரை வடமொழிப் 'பண்டிதர்' என்பதைவிட வடமொழி 'வெறியர்' என்பது பொருந்தும். உலகிலுள்ள எல்லா மொழிகளும் வடமொழியில் இருந்துதான் உதித்தவை என்று சாதிப்பவர். 'தமிழ்' என்ற சொல்லே வடமொழி 'திராவிடம்' என்ற சொல்லின் திரிபுதான். திராவிடம் என்பது திரவிடம் என்று மாறி, திரவிடம் என்பது 'திரமிடம்' என்று மாறி, 'திரமிடம்' என்பது 'திரமிழம்' என்று மாறி, 'திரமிழம்' என்பது 'தமிழ்' ஆயிற்று என்ற விதண்டா வாதத்தைச் சேர்ந்தவர்.

ஒரு நாள் கோவிந்தராஜ ஐயங்கார் அகலிகையைப் பற்றிப் பேசும் போது, "வான்மீக முனிவர் அகலிகையை மனமறிந்து விபசாரம் செய்தவளாகக் காட்டியிருக்கிருர். ஆனுல் கம்பர் அகலிகை மனமறிந்துவிபசாரம் செய்தவளல்லளென்று 'நெஞ்சினுற் பிழைப்பிலாளை நீயழைத்திடுக வென்னக் கஞ்சமா மலரோனன்ன முனிவனும்கருத்துட்கொண்டான்' என்று அகலிகையை நிரபராதியாக்கியிருக்கின்ருர் என்று சொல்லிவிட்டு "வான்மீகத்தில் அகலிகையைப் பற்றிய பகுதியில் படிக்கவும் கூசும்படியான கொச்சைகள் கூறப்பட்டுள்ளன. முற்றும் துறந்த முனிவரின் வாயில் வரக்கூடாத ஆபாசங்கள் அடங்கியிருக்கிறது" என்று வான்மீகரைக் கடிந்துரைத்தார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி, மறு நாள் பிரசங்கம் தொடங்குமுன் கோவிந்தராஜ ஐயங்காருக்கு அருகில் அமர்ந்து,

"ஒரு விண்ணப்பம்" என்ருர்.

'என்ன?' என்ருர் ஐயங்கார்.

"தாங்கள் பிராமணுக இருந்தும் இந்த அபசாரம் செய்யலாமா?" என்ருர் சாஸ்திரி.

"என்ன அபசாரம்?"

"அமானுஷ்யமான தெய்வ வாக்காகத் தீர்க்க தரிசனத்தால் ராம சரிதத்தைப் பாடித்தந்த வான்மீக முனிவரை இகழ்ந்து, தன் யுக்தியினுல் நடந்ததை மாற்றிவிட்ட கம்பனைப் புகழ்ந்து பேசலாமா?" என்ருர் சாஸ்திரி. "ஏன்? கம்பரும் அமானுஷ்யமான கலைமகளின் கடாட்சத்தால் 'எழுந்த ஞாயிறு விழுவதன் முன் கவி பாடினது எழுநூறே' என்றபடி தெய்வ வாக்காகப் பாடினவர் தானே?" என்ருர் ஐயங்கார்.

இதற்குச் சரியான பதில்சொல்ல முடியாமல் "இருந்தாலும் ஒரு பிராம

மணன் வான்மீகத்தை இகழ்ந்து பேசுவது அபசாரம்" என்று முனகினர் சாஸ்திரி.

உடனே கோவிந்தராஜ ஐயங்கார் தமது குரலை உயர்த்தி "வான்மீகத்திலுள்ள குற்றங் குறைகளைச் சுட்டிக் காட்டுவதும் கம்பராமாயணத்திலுள்ள சிறப்புகளை எடுத்துக் கூறுவதும் பிராமணனுக்கு அபசாரம் என்றால் அப்படிப் பட்ட பிராமணீயம் எனக்குத் தேவையில்லை" என்று சொல்லிக்கொண்டே பிரசங்கம் செய்ய எழுந்து விட்டார்.

திரு. கோவிந்தராஜ ஐயங்காருடைய பிரசங்கங்களைக் கேட்டபின் நானும் வான்மீக இராமாயணத்தின் தமிழ்மொழி பெயர்ப்பை வாங்கிப் படித்துப் பார்த்துக் கம்பன் செய்திருக்கிற வியக்கத்தக்க மாறுதல்களைக்கண்டு மட்டற்ற மகிழ்ச்சியடைந்தேன்.

அந்த மகிழ்ச்சியில் மலர்ந்த பாடல்களே கீழே உள்ளவை:—

கரையறியாக் காட்டாற்று
வெள்ளம் போலக்
கவிபொழிந்து வான்மீகி
உலகுக் கீந்த
திரையறியா ஓட்டத்தைத்
தேக்கிக் கட்டித்
திறமிகுந்த கால்வாய்கள்
செய்து பாய்ச்சி,
தரையறியா இலக்கியக்கா
வனத்தைத் தந்தான்
தனிப்புலமைக் கம்பனெனும்
கவிதைத் தச்சன்
உரையறியாப் பெருமை பெறும்
கம்பன் பாடல்
உலகெங்கும் பரவும்வகை
உழைப்போம் வாரீர், (1)

மால்கடிந்த தவமுனிவான்
மீகி யென்பான்
வனத்திடையே தான்கண்டு
கொண்டு வந்து
பால்படர்ந்து முள்ளடர்ந்து
பருத்து நீண்டு
பரிமளிக்கும் பலாக்கனியைப்
பாருக் கீந்தான்;
மேல்படிந்த பிசினகற்றி
மெல்லக் கீறி,
மெதுவாகச் சுளையெடுத்துத்
தேனும் வார்த்து
நூல்படிந்த மனத்தவர்க்கு
விருந்து வைத்தான்
கம்பன்எனும தமிழ்த்தாயார்
நோற்ற மைந்தன். (2)

வனத்திலுள்ள மலர்வகைகள்
யாவும் கொய்து
வாசனைவேர் பச்சிலைகள்
பலவும் சேர்த்துக்
கனத்தவொரு பூப்பொதியாம்
இராமன் காதை
வான்மீகி யெனும்தவசி
கட்டோ டீந்தான்;
இனத்தையெல்லாம் ஆய்த்தறிவால்
எடுத்துக் கோத்தே
இடைகிடந்த மாசுமறு
யாவும் நீக்கித்
தனித்தமணம் அறம்திகழும்
மாலை யாக்கித்
தாரணிக்கே சூட்டிவைத்தான்
கம்பன் தானே. (3)

இந்தக் கவிகளைப் பாடக் காரணமாக இருந்தவை திரு. கோவிந்தராஜ ஐயங்காருடைய கம்பராமாயணப் பிரசங்கங்களும் அவர் நடத்தி வந்த 'கம்பநாடர்' என்ற மாதப் பத்திரிக்கையுமே என்பதை மகிழ்ச்சியுடன் சொல்லி அவர் நினைவை வாழ்த்துகின்றேன்.

## சங்கத்தின் 50-ஆவது ஆண்டுச் செயற்குழுவினர்



திரு. சி. மு. அரு. நா. அருணாசலம் செட்டியார்
துணைத்தலைவர்



திரு. அபிசீனியா பழ. நாச்சியப்பன்
செயலாளர்



திரு. மு. மெ. முத்துராமன்
துணைச் செயலாளர்



திரு. மெ. நா. சித. சிதம்பரம்
பொருளாளர்

## சங்கத்தின் 50-ஆவது ஆண்டுச் செயற்குழுவினர்



திரு. சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார்



திரு. சு. ராம. ராம. கிருஷ்ணப்ப செட்டியார்



திரு. சித. ராய. சிதம்பரம் செட்டியார்



திரு. பெரி. நா. நா. அ. தேவராசன் செட்டியார்

## சங்கத்தின் 50-ஆவது ஆண்டுச் செயற்குழுவினர்



திரு. அரு. ராம. முத்துராமன்



திரு. ரெ. முத்துக்கணேசன்

## சங்கத்தின் 50-ஆவது ஆண்டுக் கணக்குத் தணிக்கையாளர்



திரு. L. சொக்கலிங்கம், B. Com., B. L.



திரு. TR. சொக்கலிங்கம், B. Com., A. C. A.



திரு. வி. க.

# திரு. வி. கலியாண சுந்தரனர்

திரு. வெ. சாமிநாத சர்மா



சாமிநாதசர்மா

ஆழ்ந்த அன்பு, உயர்ந்த பண்பு, பரந்த புலமை இவை மூன்றும் ஒன்று சேர்ந்து காட்சியளித்தன திரு. வி. கலியாணசுந்தர முதலியாரிடத்தில். உண்மையில் இவை மூன்றுமாகவே முதலியார் வாழ்ந்தார் என்று சொல்லலாம். ஆனல் இம் மூன்றும் தம்மிடத்தில் இணைந்திருக்கின்றன என்று அவர் எப்பொழுதும் உணர்ந்ததில்லை.

முதலியாரின் முன்னேர்கள் சோழ நாட்டைச் சேர்ந்தவர்கள். திருவாரூரில் வதிந்தவர்கள். ஆயினும், முதலியார் தொண்டை நாட்டிலே பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து புகழெய்தினர். தமது முன்னேர்கள் வதிந்த ஊரை நினைவு கொள்கின்ற முறையில், தமது பெயருக்கு முன்னல், தமது பங்காளிகளின் அன்பான கட்டளைப்படி திரு. என்ற ஈரெழுத்துக்களைச் சேர்த்துக் கொண்டார்.

அவர் பிறந்தது சென்னை பூவிருந்தவல்லிக்கு அருகில் உள்ள துள்ளம் என்னும் கிராமம்; வருஷம் 1883. அவருடைய தந்தையார் விருத்தாசல முதலியார். தாயார் சின்னம்மாள்.

அவர் பிறக்கும்போது வலது காலில் ஆறு விரல்களோடு பிறந்தார். 'ஆறு விரல்களோடு பிறந்தவர்கள் ஆனை கட்டி வாழ்வார்கள்' என்ற வாசகத்திற்கிணங்க அவர் வாழவில்லை யென்ருலும் தமது ஐம்புலன்களைக் கட்டி மனிதனக வாழ்ந்தார்.

முதலியார் மெட்ரிகுலேஷன் வகுப்போடு படிப்பை முடித்துக் கொண்டு குடும்பத்தின் தேவையை முன்னிட்டு, ஸ்பென்ஸர் கம்பெனியில் ஒரு கணக்கராகப் போய்ச்சேர்ந்தார். சுமார் பதினெட்டு மாதங்களுக்குப் பிறகு, இந்த உத்தியோகத்திலிருந்து விலகி, ஆயிரம் விளக்கு என்ற பேட்டையில் நடைபெற்று வந்த வெஸ்லியன் மிஷன் பள்ளியில் சுமார் ஆறு ஆண்டு காலம் ஆசிரியராகப் பணியாற்றினர். பின்னர் சுமார் பதினெட்டு மாதக்காலம் வெஸ்லியன் கல்லூரியில் தலைமைத் தமிழ் ஆசிரியராகச் சேவை செய்தார். இதற்குப் பிறகே 1917-ம் ஆண்டுக் கடைசியில் பத்திரிகாசிரிய பீடத்தில் அமர்ந்து தேசத்தொண்டு செய்துவரத் தொடங்கினர்.

முதலியாருக்கு இளமையில் ஆங்கில மொழியின் மீது மோகம் இருந்ததாயினும், வயதாக ஆக அவர் தமிழ் மொழியின் மீது தணியாத காதல் கொண்டவரானர். ஆரம்பத்தில் யாழ்ப்பாணம்

நா. கதிரைவேற் பிள்ளை அவர்களிடமும், பிறகு மயிலை மகாவித்துவான் தணிகாசல முதலியார் அவர்களிடமும், தமிழ் பயின்று அதில் நல்ல புலமையும் பெற்றார். இந்தப் புலமையை அநேக புராணப் பிரசங்கங்கள் வாயிலாக வெளிப் படுத்துவதற்கான வாய்ப்புகள் அவருக்கு நிறையக் கிடைத்தன. இந்தக் காலத்தில்தான் இவர் தமது சொல்லாற்றலை வளர்த்துக்கொண்டார்.

'தேசபக்தன்' ஆசிரிய பீடத்தை அலங்கரித்து வந்த போதுதான் அவர் தொழிலாளர் இயக்கத்தைத் தொடங்கி அதைத் திறம்பட நடத்தி வந்தார். தொழிலாளர்களின் உரிமைகளுக்காகவும், அவர்களுக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய ஊதியத்திற்காகவும் பல போராட்டங்கள் நடத்தி அவைகளில் வெற்றியும் கண்டார். இந்தப் பலதுறை அலுவல்களுக்கிடையே அநேக நூல்கள் இயற்றி வெளியிட்டு வந்தார்.

அரசியல் என்பது அறத்தை அடிப்படையாகக் கொண்டதென்றும், அந்த அடிப்படையோடு கூடியதைத்தான் அரசியல என்ற பெயரிட்டு அழைக்கலாம் எனவும் கூறுவார். அறத்தைஅடிப்படையாகக் கொள்ளாத அரசியல், உயிரில்லாத உடல் மாதிரி என்று முதலியார், தமது நூலொன்றில் கூறியுள்ளார். இந்தமாதிரி மேலான ஒரு கருத்தை மனத்தில் பதியவைத்துக் கொண்டுதான் அவர் அன்றைய அரசியலில் பிரவேசித்தார். பிரவேசித்த சிறிது காலத்திற்குப் பிறகு, அந்த அடிப்படை உண்மையிலேயே இருக்கிறதா, இல்லையா என்று சந்தேகிக்கக் கூடிய நிலையில் எங்கேயோ ஆழத்தில் அழுந்திக்கிடந்தது. அதனைக் கண்டுபிடித்து, அது இருக்கவேண்டிய நிலையில் அதனை அமைக்க, தமது சொல்லாலும் எழுத்தாலும் வெகுவாகப் பாடு பட்டார். எதிர்பார்த்த பயனைக்காண முடியவில்லை. அந்நிய ஆதிக்கத்தின் சக்தி, அந்த அடிப்படையைக்காண விடாதபடி செய்து வந்தது. ஆகவே, அந்த அந்நிய ஆதிக்கத்தின் சக்தி உருக்குலைந்து ஒழிந்தாலன்றி, நமது நாட்டின் அரசியல், அறத்தை அடிப்படையாகக் கொண்டு இயங்க முடியாதென்பதை உணர்ந்தார். அதனை ஒழிக்க, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வழி தோன்றினாலும், முதலியாருக்குக் கடவுளின் திருவருளை நாடுவது தான் சிறந்தவழி என்று தோன்றியது. எனவே, வெறும் அரசியலிலிருந்து ஒதுங்கிக்கொண்டு கடவுளின் அருளுக்கு விண்ணப்பித்துக் கொண்டு வந்தார். அவருடைய வாழ்க்கையின் பிற்பகுதிக் காலத்து எழுத்திலும் பேச்சிலும் இந்த முறையிடு தொனிப்பதைக் காணலாம். இதனால் வெறும் அரசியலிலிருந்து அவர் ஒதுங்கிக் கொண்டார் என்று சொல்வது தான் பொருந்துமே தவிர, வேறுவிதமாகச் சொல்வது பொருந்தாது.

அறத்தை அடிப்படையாகக் கொள்ளாத அரசியல், சூழ்ச்சி மலிந்து காணப்படும்; பதவிப் போட்டி முட்டி நிற்கும். வன்ம உணர்ச்சி மாறுபட்ட கொள்கையினரைத் தேடி அலையும்; தன்னலம், தலைதூக்கி ஆடும்; தன்முனைப்பு தம்பட்ட மடித்துக் கொண்டிருக்கும். இவைகளுக்கெல்லாம் புறம்பானவரல்லவா முதலியார்?

மற்றும், முதலியார், மனச்சாட்சிக்கு முழு மதிப்புக் கொடுத்தார்; அதற்கு அஞ்சவும் செய்தார். இதனால், 'நீங்கள் இங்ஙனம் மனச்சாட்சிக்கு முழு மதிப்புக் கொடுத்து வருவதினால்தான் அரசியலில் உங்களுக்கு வெற்றி கிட்டவில்லையென்று சிலர் கூறுகின்றனர்' என்று யாராவது அவர் காதில் போட்டால், அதற்காக அவர் வருந்த மாட்டார்; மகிழ்ச்சியே கொள்வார்; பெருமையும் அடைவார்.

உண்மையில் முதலியார், அரசியல் வாழ்க்கையைக் காட்டிலும் மனித வாழ்க்

கைக்குத்தான் முக்கியத்துவம் கொடுத்தார். வெறும் அரசியல் வாதியாகஇருந்து செல்வமும் செல்வாக்கும் பெறுவதைக் காட்டிலும், மனிதப் பண்புகளோடுகூடிய மனிதனுக இருந்து வறுமை வாழ்க்கையை நடத்துவதே சிறப்பு என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை. காந்தியடிகளை, அரசியல்வாதிகளில் ஒருவராக, அந்த அரசியல்வாதிகளின் தலைவராக அவர் கருதவில்லை; மனிதத் தன்மைகள் நிறைந்த மேலான ஒரு மனிதராகவே கருதினர். பத்திரிகை ஆசிரியர் பீடத்தில் அமர்ந்தபிறகு, முதன் முதலாக வெளிவந்த அவருடைய நூல் "காந்தியடிகளும், மனித வாழ்க்கையும்" என்று தலைப்புப் பெற்றதே தவிர, "காந்தியடிகளும், அரசியல் வாழ்க்கையும்" என்ற தலைப்பைப்பெருதது, ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. அறத்தை வளர்ப்பதற்கும், அதனைப் பாதுகாப்பதற்கும் அரசியலை ஒரு கருவியாகக் கொள்ள வேண்டுமே தவிர, அந்த அரசியலையே குறிக்கோளாகக் கொள்ளக்கூடாதென்ற காந்தியடிகளின் கருத்தில் முதலியாரின் உள்ளம் படிந்திருந்ததென்பதைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை.

முதலியார், சிறை செல்லத் தயங்கினுர் என்று சொல்லி, அவருடைய தியாகத்தில் ஒரு சிறு கறை காண முயல்வர் சிலர். ஆனுல், அவர் சிறை செல்லத் தயங்கவில்லை என்பதும், அப்படிச் செல்லவேண்டிய வாய்ப்போ அவசியமோ அவருக்கு ஏற்படவில்லை என்பதும், சிறிது காலம் அவர் வீட்டொடு காப்பில் வைக்கப்பட்டிருந்தார் என்பதும் அவரோடு நெருங்கி உறவாடி வந்த ஒரு சிலருக்கு நன்கு தெரியும்.

தவிர, முதலியார் நடத்தி வந்த "தேசபக்தன்", "நவசக்தி" பத்திரிகைகளில் அவர் எழுதிய தலையங்கங்கள் அரசாங்கத்தின் மீது துவேஷத்தை உண்டு பண்ணக் கூடியவை என்பதற்காக, அப்பொழுதைய அரசாங்கம், ஆயிரக் கணக்கில் ஈடுகாணம் (ஜாமீன்) கேட்டுப்பெற்று, பிறகு அந்தத் தொகைகளை அவர் இழந்து விடும்படி செய்ததை அந்த ஒரு சிலர் நன்கு அறிவர்.

முதலியாரை, கவிதைகள் பல இயற்றிய ஒரு கவிஞராக மட்டுமே ஒரு சிலர் காண்பர். ஆனுல், அவர் கவிதை உள்ளம் படைத்தவர். கவிதையாக வாழ்ந்தவர்; வாழ்க்கையைக் கவிதையாக அமைத்துக் கொண்டவர். இனிமையும் எளிமையும் அவரோடு பிறந்த இயல்புகள். இதத்கைய கவிஞர்கள். கர்ம வீரர்களைச் சிருஷ்டித்துக் கொடுப்பது தங்கள் தலையாய கடமையென்று கருதுகிருர்கள். இவர்களே கர்ம வீரர்களாகி விடுவதில்லை. உலக வரலாற்றில் இத்தகைய கவிஞர்கள் பலரை நாம் சந்திக்கிறோம். சீனு, ருஷ்யா துருக்கி, ஐர்லாந்து, இத்தாலி ஆகிய அநேக நாடுகளில், கர்ம வீரர்கள் பலர் தோன்றிப் பெரும் புரட்சி நடத்தியதற்குக் காரணமாக இருந்தவர்கள் கவிஞர்களே. இவர்களில் ஒருவராகவே முதலியாரை நாம் பார்க்க வேண்டும். அன்றைய தேசிய இயக்கத்தை உரமிட்டு வளர்ப்பதற்கான கர்ம வீரர்களைப் பாரதியாரின் கவிதைகள் சிருஷ்டித்துக் கொடுத்தன. அதே காலத்திலும், அவருக்குப்பின்பும், முதலியாரின் எழுத்துக்களும், பேச்சுக்களும் அந்தப் பணியைத் தொடர்ந்து செய்து வந்தன. ஆகவே, முதலியார் சிறை செல்லவில்லையென்ருல் அதற்கு அடிப்படையான காரணம், கர்ம வீரர்களைச் சிருஷ்டித்துக் கொடுக்கும் தமது தலையாய கடமை ஸ்தம்பித்துப் போய் விடக் கூடாதென்பதுதான்.

உண்மையானமனிதனுக ஒருவன் வாழ விரும்பினுல், அவன் மண்ணுசை, பெண்ணுசை, பொன்னுசை ஆகிய இவற்றைத் துறக்க வேண்டும் என்று பெரியோர்கள்

சொல்லியிருக்கிறார்கள் அல்லவா? இந்த வாசகத்திற்கு முதலியார் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கினர். இது மட்டுமன்று; நான்காவதாகச் சொல்லப் படக்கூடிய பதவி ஆசையையும் துறந்த வராயிருந்தார், முதலியார்.

அவர் 1918-ம் ஆண்டின் இடைக் காலத்தில் முப்பத்து மூன்ருவது வயதில் தமது மனைவியார் கமலாம்பிகை அம்மை யாரை இழந்துவிட்டார். அதற்குப் பிறகு, அவர் மறுமணம் செய்துகொள்ளவில்லை. எத்தனையோ பெரிய பெரிய இடத்துப் புள்ளிகள் அவருக்குப் பெண் கொடுக்கப் போட்டி போட்டுக்கொண்டு முன் வந் தன. ஆனால அவர் கண்டிப்பாக மறுத்து விட்டார். ஒருத்தனுக்கு ஒருத்தி என்ற ஏகபத்தினி விரதத்தைக் கடைப் பிடித்தார். கடைசி காலம் வரை பிரம்மச் சரிய வாழ்க்கையையே நடத்தி வந்தார். அவரைக் காண வரும் பெண்கள் தங்கள் தந்தை முன்னே வந்து நிற்பதாகவே உணர்வார்கள். வாழ்க்கையில் வழுக்கி விழுந்துவிட்ட எத்தனையோ சகோ தரிகள், அவருடைய அறிவுரைகளையும், அறவுரைகளையும் கேட்டுத் திருந்தி நல் வாழ்வு நடத்த முற்பட்டிருக்கிருர்கள்.

முதலியார், நாவசைத்திருந்தால், லட்சக் கணக்கில் பணம் சேர்த்திருக்க லாம் என்பது மட்டுமல்ல; குவித்தே இருக்கலாம். அதே பிரகாரம், அவர் விரும்பி இருந்தால் அரசியலிலோ, புலவர் குழுவிலோ மேலான பதவி கிட்டி யிருக்கும். ஆனால், இந்தப் பொன்னு சைக்கும், பதவி ஆசைக்கும் அவர் புறம் பானவராகவே இருந்தார். இவ்விரண் டுக்கும் ஆசைப்பட்டு, தமது மனச்சாட்சி யில் லேசாகக்கூடக் கறையை உண்டு பண்ணிக் கொள்ள அவர் விரும்பவில்லை. அவர் பொன்னுசைக்குப் புறம்பானவ ராக இருந்தார் என்பதற்கு எடுத்துக் காட்டாக அவர் ஒரு 'பர்ஸ்' (பணப்பை) கூட வைத்துக் கொண்டதில்லை. தொழி லாளர் கூட்டங்களுக்கோ வேறு கூட்டங் களுக்கோ அவர் செல்லும்போது, வண்டிச் சத்தத்திற்குத் தேவையான சில்லரையை ஒரு காகிதத்தில் பொட்டல மாகக் கட்டி சட்டைப்பையில் போட்டுக் கொள்வார். யாராவது பண உதவிக்கு வந்தால் தமது தமையனர் திரு. வி. உலகநாத முதலியாரைக் கொண்டு கொடுக்கச் செய்வார். அவர் கையில் பணம் வைத்துக் கொண்டிராததற்கு ஒரு காரணம், தம் கையால் கொடுத்தால், கொடுக்கிருேம் என்ற தன் முனைப்பு உணர்ச்சி எங்கே தன்னை ஆட்கொண்டு விடுமோ என்ற அச்சம். மற்ருெரு காரணம்: ஒரு கையால் கொடுத்தது மற்ருெரு கைக்கு தெரியக்கூடா தென்ற மூதுரை அவர் கொடையில் அடங்கி யிருந்தது.

முதலியார் நல்ல சங்கீத ரசிகர். இசை நுணுக்கங்களை நன்கு அறிவார். சிறு பிராயத்தில் தமது தந்தையார், திரு. விருத்தாசல முதலியாருடன் அப் பொழுது சென்னையில் மிகவும் பிரசித்த மானவர்களில் ஒருவராயிருந்த ஜஸ்டிஸ் மணி ஐயர் (இவரை மயிலை முனீந்திரர் என்றே முதலியார் அழைத்து வந்தார்) மாளிகையில் கண்ணொளி இழந்துநின்ற சரபசாஸ்திரியார் என்ற புல்லாங்குழல் வித்துவான் அவ்வப்பொழுது அளிக்கும் இசை விருந்துக்குச் சென்று வருவார். 'அந்த இசை மேதையின் குழலோசை யைக் கேட்ட மாத்திரத்தில் என் அடி வயிற்றிலிருந்து ஆனந்த அலை பொங்கி எழுவதாக உணர்வேன், என்று அடிக்கடி கூறுவார். தமது சொற்பொழிவு களின்போது, மேற்கோள்களை இசை யோடுதான் எடுத்துக் காட்டுவார். இதனல் ராக ஆலாபனை சகிதம் சொல் வார் என்பது அர்த்தமல்ல. செவிக்கு இனிமையளிக்கின்ற முறையில் சொல் வார் என்பதுதான் பொருள்.

அவர் சொற்பொழிவுகள் நிகழ்த்து கிறபோது எடுத்துக்கொண்ட பொருளின் வரம்புக்கப்பால் மறந்தும் செல்ல மாட்டார். நிகழ்த்தவேண்டிய சொற்பொழிவைப் பற்றி முன்கூட்டியே சிந்தித்து, என்ன பேசவேண்டுமென்பதற்கு ஒரு சிறு குறிப்புத் தயாரித்துக்கொண்டு கூட்டத்திற்குச் செல்வார். இதனுல் எடுத்துக்கொண்ட பொருளுக்குப் புறம்பாகப் போகாமலிருப்பது அவருக்கு எளிதாயிருந்தது. பொதுவாகவே அவருடைய எழுத்து நடையைப்போலவே பேச்சு நடையும் இருக்கும், பேச்சின் கடைசியில் ஓர் ஐந்து நிமிஷம், தாம் அதுகாறும் பேசியதை,'என்றும்என்றும்' போட்டுத் தொகுத்துச் சொல்வார். அவருடைய பேச்சின் முற்பகுதியை அசந்து மறந்து கேட்கத்தவறிவிட்டவர்கள்கூட இந்தத் தொகுப்புரையைக் கேட்டு, அதுகாறும் அவர் பேசியதை நன்கு விளங்கி கொள்வார்கள்.

முதலியாருக்கு அன்னிபெசண்ட் அம்மையாரிடத்தில் ஆழ்ந்த பக்தி உண்டு. அவரை அன்னை பெசண்ட் என்றே அழைப்பார். பாரதநாட்டின் விடுதலைக்கு, சட்டவரம்புக்குட்பட்ட கிளர்ச்சி செய்வதற்கான வழி வகைகளை முறையாக வகுத்துக்காட்டி அதன் பிரகாரம் நடத்திக் காட்டியவர் அந்த அம்மையார் என்பதை முதலியார் நன்கு உணர்ந்திருந்தார். "தேசபக்தன்" பத்திரிகை தொடங்குவதற்கு அன்னி பெசண்ட் அம்மையார் அதிக உற்சாகமளித்தார்; பொருளுதவியும் செய்தார்.

முதலியார் தமது குடும்ப வாழ்க்கையைப்பற்றிஓரிடத்தில் "செல்வமுமின்றிச் சீர்மனையின்றிச் சிறக்கு நன்மக்களுமின்றிப் பல்வளமின்றிப் பனித்தனை வாழ" என்று கூறுகின்ருர். இதனுல், அதாவது குடும்ப வாழ்க்கையில் அதிகமாக ஈடுபடாதிருந்த காரணத்தினுல், அவருக்கு உலக அனுபவம் அவ்வளவாக இல்லை என்று சிலர் கருதிக்கொண்டிருக்கக்கூடும். இதற்கேற்ருற்போல் அவருடைய புறத்தோற்றம் மிக எளிமையுடையதாக இருந்தது. தவிர, எல்லாம் தெரிந்துகொண்டிருப்பவர் போல் அவர் எப்பொழுதும் பேச மாட்டார். இதனுல் சிலர் தங்களுடைய பேச்சுச் சாமர்த்தியத்தினுல் அவரை ஏமாற்றி விடலாமென்று எண்ணி அவரிடம் வந்து ஏமாந்து போயிருக்கின்றனர்.

சோதிட சாஸ்திரத்தின் கரையைக் கண்டுவிட்டதாகச் சொல்லிக் கொண்டு ஒருவர் முதலியாரிடம் வருவார். முதலியாருடைய ஜாதகத்தைப் பார்க்க விரும்புவதாகச்சொல்லி வாங்கிப் பார்ப்பார். அந்தக் கிரகம் உச்சத்தில் இருக்கிறது; இந்தக் கிரகம் லாபாதிபதியாயிருக்கிருன், என்று இப்படி என்னென்னவோ அளந்து கொட்டுவார். முதலியார் அனைத்தையும் மௌனமாகக் கேட்டுக் கொண்டு விட்டு நிதானமாக சில குறுக்குக் கேள்விகள் போடுவார். வந்தவர் விழிப்பார். சோதிட சாஸ்திரத்தில் முதலியாருக்கு நல்ல பரிசயம் உண்டென்பதை அவர் பிறகு தெரிந்துகொண்டு முதலியாரிடத்திலேயே தமக்கு ஏதேனும் சந்தேகம் இருந்தால் அதைத் தீர்த்துக் கொண்டு செல்வார். இப்படி அநேகர் வந்து போனதை நான் பார்த்திருக்கிறேன். முதலியார் சோதிட சாஸ்திரத்தை முறையாகப் பயிலவில்லையாஞலும் அதில் அனுபவஞானம் நிரம்பியவர் என்பதை மட்டும் இங்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனமே வைத்திய சாஸ்திரத்தில் வல்ல அநேகர் முதலியாரிடம் வந்து போவதுண்டு. அவர்களும். வைத்திய சாஸ்திரத்தில் முதலியாருக்குள்ள அனுபவ ஞானத்தைக் கண்டு திகைத்துப் போவர். இன்னின்ன நோய்களுக்குஇன்னின்னசிகிச்சை, எந்தெந்த மூலிகைகளில் என்னென்ன சத்து

இருக்கின்றது என்பவைகளைப் பற்றி விளக்கமாகச் சொல்வார் முதலியார். நாடி பிடித்துப் பார்த்து அவர் வைத்தியம் செய்யவில்லை யாருலும், அகமறிந்து முகம்பார்த்து அவர் சொன்ன சிகிச்சை முறைகள் அநேகருக்கு நல்ல பயனை அளித்திருக்கின்றன என்று நான் உறுதியாகக் கூறமுடியும்.

குடும்பப் பிணக்கினுலும், வேறு பல தொல்லைகளினுலும் அவதிப்பட்டுப் போன அநேகர் முதலியாரிடம் வந்து பரிகாரம் பெற்றுச் சென்றிருக்கின்றனர். வாழ்க்கைப் பாதையில் தப்பித்தவறி வழுக்கி விழுந்து விட்ட சில சகோதரிகள் முதலியாரிடம் வந்து அறவுரை கேட்டு சீரிய வாழ்க்கைக்குத் திரும்பிப் புனித மடைந்திருக்கின்றனர். மனோதத்துவ சாஸ்திரத்தில் முதலியார் நல்ல பயிற்சி பெற்றிருந்தபடியால் தம்மை அணுகியவர் களுக்கு ஆறுதல் அளிப்பது அவரால் சுலபமாயிருந்தது.

இங்ஙனம் பல துறைகளிலும் அனுபவம் பெற்றிருந்த முதலியார், எத்தனையோ பேருடைய உள்ளங்களில் நிரந்தரமாக வாழ்ந்து கொண்டிருக்கிருர். வாழ்க அவர் திருநாமம்!

## திரு வி. க. அவர்கள்
## அந்தநாள் சங்கத்தை வாழ்த்தியது

ஹிந்து மதத்தின் பெயரால் பல சங்கங்கள் ஆங்காங்கே தோன்றி யுள்ளன. காரைக்குடியிலும் ஒரு சங்கம் அமைந்துள்ளது. அது ஹிந்துமதாபி மான சங்கம்.

ஹிந்துமதாபிமான சங்கத்துக்கும் எனக்கும் தொடர்புண்டு. அச்சங்கத்தின் மூன்று ஆண்டு விழாக்கள் என் தலைமை யில் நடைபெற்றன. செட்டிமார் நாட்டில் இந்நாளில் தோன்றியுள்ள, புத்துணர்ச் சிக்குக் கால்கோலியது 'ஹிந்து மதாபி மான சங்கம்' என்று சுருங்கச் சொல்லுகிறேன்.

இப்பொழுது 'ஹிந்துமதாபிமான சங்கம்' வெள்ளி விழாவைக் காண்கிறது. இனி அது பொன்விழாவையும், மணி விழாவையும், கண்டு நீடு வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள் செய்வானுக!

---



பாரதி

# பாரதியும் சங்கமும்

திரு. மு. நடராசன்
அ. கெ. மு. மு. ந.



தி. மு. நடராசன்

செட்டிமார் நாடு செழிப்பாக இருந்த நாட்களில், செட்டியார்களுக்குப் பர்மா, இந்தோனேசியா, மலேயா முதலிய நாடுகளில் தொழில்துறை யிருந்து நல்ல சம்பாத்தியம் பெற்று வந்தனர். அப்போது, இளைஞர்களை ஓர் நல்வழியில் திருப்ப வேண்டுமென நினைத்து, திரு. சொ. முருகப்பர் அவர்களும், திரு. ராய. சொ. அவர்களும், இன்னும் சிலரும் சேர்ந்து 50 ஆண்டுகட்கு முன் இந்து மதாபிமான சங்கத்தைத் தோற்றுவித்தார்கள்.

ஆரம்பமான சில மாதங்களிலே, இராமகிருஷ்ண கலாசாலை துவங்கப் பெற்றது. உயர்திரு. சு. சிதம்பரம் ஐயர் அவர்கள் உபாத்தியாயராக இருந்தார்கள். மேல் வகுப்பில் திரு. சொ. முரு திரு. ராய. சொ. அவர்களும், இன்னும் சிலரும் பாடம் கேட்டு வந்தார்கள். கீழ் வகுப்பில் நானும், திரு. அ. மு. க. மு. க. ரெங்கனாதன் செட்டியாரும், தவத்திரு இராமனாத சுவாமிகள் அவர்களும (காரைக்குடி வீ. சித. ராம. சித. இராம நாதன்செட்டியார்) அவர்களும், இன்னும் சிலரும் பாடம் கேட்டு வந்தோம். நான் காரைக்குடியில் இருந்த நாட்களில் உணவு நேரங்களைத் தவிர மற்ற நேரங்களில் எல்லாம் என்னைச் சங்கத்தில்தான் பார்க்கலாம். சங்கத்தில் பாடம் படிக்கும் நேரம்போகப் பாக்கி நேரங்களில் சங்கத்துக்கு வரும் தேசபக்தன், சுதேசமித்திரன், முதலிய பத்திரிகைகளைப் பார்ப்பதிலும், மாலையில் வரும் பல பிள்ளைகட்கு உபந்நியாசம் செய்யப் பழகித்தருவதிலும் கலந்துகொண்டுவந்தேன்.

நாள் ஆக ஆக, சங்கத்துக்குப் பத்திரிகை பார்க்க வருபவர்களும், உபந்நியாயசம் செய்யப் பழகிக்கொள்ள வருபவர்களும் பெருகினர். பலபண்டிதர்கள் புலவர்கள் வந்து அடிக்கடி சொற்பொழிவு செய்வார்கள். அந்நாட்களில், சுமார் 47 ஆண்டுகட்குமுன், மகாகவி சுப்பிரமணிய பாரதியார் அவர்களையும் அழைத்து வந்தார்கள்.

பாரதி சிவந்த குள்ளமானவர்; முறுக்கு மீசை; கையில் தடியுடன் இருந்தார். இவருடன் உயரமான கறுப்பு நிறமான மொட்டைத்தலையர் ஒருவரும் உடன் வந்தார். பாரதியார் அவர்கள் அவரை மொட்டையா என்றுதான் அழைப்பார். பாரதியார் அவர்கள் காரைக்குடியில் மூன்று நான்கு நாட்கள் இருந்தார்கள். அவர்கள் இங்கு இருக்கும்வரை

நானும் கூடவே இருந்தேன். ஒருநாள் என்னை ஒமப்பொடி வாங்கிவரச் சொன்னார்கள். ஒட்டமாக ஒடி ஒமப்பொடி ஒரு பொட்டலம் வாங்கிவந்து கொடுத்தேன். பாரதியார் அவர்கள் பிரித்து எடுத்து மோட்டையன் தலையில் போட்டு ஒரு அடியடித்து அவரிடம் அள்ளிக் கொடுத்தார்.

எல்லாரிடமும் மிக அன்பாகப் பேசுவார். பாரதியைப் படம்பிடிக்க வேண்டுமென நினைத்து, போட்டோ எடுக்கும் நொண்டி ராஜு என்பவரைக் கூட்டி வந்து குறிச்சியில் அமரச்செய்து படம் எடுக்கச் சொன்னோம். பாரதியார் அவர்கள் கையில் தடியை உயர்த்திப் பிடித்துக் கொண்டிருந்தார். படம்பிடிப்பவர், தடியை இப்படி வைத்துக்கொண்டால் நன்ருய் இருக்காது என்று எவ்வளவோ சொல்லியும், ஒரே பிடிவாதமாய், நான் சொல்லுகிறபடி கேள். இல்லாவிடில் போ எனச் சொல்லிவிட்டார். அப்புறம் ரொம்பச் சமாதானம் செய்து அவர்கள் நோக்கப்படியே கையில் தடியுடன் படம் எடுக்கச் செய்தோம். அந்தப்படம்தான் இன்று உலகெங்கும் உலவிவருகிறது.

பாரதியார் அவர்கள், எங்களை எல்லாம், தம்பீ அல்லது பாண்டியா என்றுதான் அழைப்பார்கள். பாண்டியா காகிதமும் பென்சிலும் கொண்டுவா என்பார்கள். கொடுத்தால் பாட்டாகவே எழுதித் தள்ளுவார்கள். "மணி வெளுக்கச் சாணை உண்டு எங்கள் முத்துமாரி" என்று உரக்கப் பாடினல்... நானெல்லாம் பயந்து விடுவேன். மீசை படபடக்கும். முகத்தில் ஒரு ஆவேச உணர்ச்சி தோன்றும். பாடும் தொனியோ சுமார் ஒரு மைல் தூரத்திற்குக் கேட்கும். அவர்களுடன் கூடவிருக்கும் ஒவ்வொருவரையும் நேரே நிமிர்ந்து இருக்கவேணும். கம்பீரமாக நடக்க வேண்டுமெனச் சொல்வார்கள்.

திரு. சொ. முரு., தமிழ்க்கடல், சிவமணி திரு. ராய. சொ., திரு. அ. மு. க. மு. க. ரெங்கநாதன் செட்டியார், திரு. கி. நாராயணன் செட்டியார், நான் எல்லோரும் மகாகவி பாரதியார் அவர்களுடனிருந்து ஒரு படம் எடுத்தோம். அவர்களில் தமிழ்க்கடல் சிவமணி ராய. சொ. அவர்களும், நானும்தான் இன்று இருக்கிறோம். எனவேதான் தமிழ்க் கடல் அவர்கள் பாரதியாரைப் பற்றி மலருக்கு எழுதும் பணியை எனக்கு இட்டார்கள்.

பாரதியார் அவர்களுடன் சங்கத்துப் பிள்ளைகள் பலரும் சேர்ந்து கோவிலூருக்குப் போய்வந்தோம். பாரதியார் அவர்கள் கோவிலூரிலுள்ள சிற்ப வேலைகளைப்பார்த்து மிகவும் போற்றிப் புகழ்ந்தார்கள். ஊருணியில் அவர்களுடன் எல்லாரும் நீந்தினேம். மைய மண்டபத்திற்குப் போய் வந்தார்கள். எங்களுக்கும் நீந்தப் பழகித் தந்தார்கள். எல்லாருக்கும் பசு மடத்தில் நல்ல பல வகை வர்க்கன்னம், நல்ல சாப்பாடு. அவர்களுடன் இருந்த நாட்களில் நாங்கள் பெற்ற உள்ளக் களிப்பு மிகுதி. அவர்கள் இந்து மதாபிமான சங்கத்தைப் பற்றி ஏழு பாடல்கள் பாடினுர்கள்.

இந்து மதாபிமான சங்கம் தோன்றி ஐம்பது வருடகாலம் ஆகிவிட்டது. அது தோன்றிய பின்தான், அதில் வந்து கலந்துகொண்ட பலரும் பல துறையிலும் முன்னேறி, ஒழுக்க நெறியிலும் தெய்வ சிந்தனையிலும் ஈடுபட்டுத் தம் வழித் தோன்றல்களையும் நல்வழிப் படுத்தி வருகிருர்கள். இந்து மதாபிமான சங்கத்திற்கு வந்து கலந்துகொள்ளாத பெரியோர்களும், புலவர்களும் இலர். பல பெரியோர்கள் பிரசங்கம் பண்ணுதலைக் கேட்டுப் பயனடைந்தவர்களில் நானும் ஒருவன் என்று பெருமையுடன் சொல்லிக்கொள்கிறேன்.

வாழ்க இந்து மதாபிமான சங்கம்.




## சங்கக் கட்டிடம்

ராய. சொ. உமையாள் மண்டபத்துடன்

சிவன் கோவில் மேலை வீதி,

காரைக்குடி.



24-10-52இல் இந்துமதாபிமான சங்கக் கட்டிடத்தை
இராஜாஜி திறந்து வைத்தார்.



ராய. சொ. உமையாள் மண்டபத்தில் திரு. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் அவர்களால் 31-1-1965ல் திறந்து வைக்கப்பெற்ற

ராய. சொ - உமையாள் படம்



ராய. சொ. உமையாள் மண்டபத்தில்
31—1—1965ல் எடுக்கப்பெற்றது.



ராய. சொ. உமையாள் மண்டபத்தை 31-1-1965ல் திரு. கருமுத்து
தியாகராசன் செட்டியார் தலைமையில்
திரு. அ. மு. மு. முருகப்பசெட்டியார் திறந்து வைத்தார்கள்.



வ. உ. சிதம்பரனுர்

# நாடகத்தில் சிதம்பரனுர்

அவ்வை
தி. க. சண்முகம்



அவ்வை தி. க. சண்முகம்

இந்து மதாபிமான சங்கத்தில் கப்பலோட்டிய தமிழர் வ. உ. சி. அவர்கள் விரிவுரையாற்றியுள்ள செய்தியை நான் அறிவேன். சங்கத்தோடு தொடர்புடைய அப் பேரறிஞரை நாடக மேடைக்குக் கொண்டுவர நாங்கள் எடுத்துக்கொண்ட முயற்சி சுவையானது. 1936 வரை நம்மோடு வாழ்ந்து மறைந்தவர் வ. உ. சி. அப்பெரியாரின் வரலாற்றினை மேடைக்குக் கொண்டு வருவதென்ருல் அது எளிதான காரியமா? ஏதோ இறைவன் முன்னின்று ஆட்டுவித்தான் என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்?

'தேச பக்தனும் ஆங்கிலேயனும்' என்னும் தலைப்பில் மகாகவி பாரதி ஒரு தர்க்கப் பாடல் புனைந்துள்ளார். அப்பாடல் தேசபக்தர் வ. உ. சிதம்பரனுருக்கும், திருநெல்வேலி மாவட்டக் கலெக்டர் விஞ்சுதுரைக்கும் நடைபெற்ற உணர்ச்சி மிக்க சம்வாதம். சிதம்பரனுர் விஞ்சு துரையைச் சந்தித்தபோது அவர்களுக்குள் எவ்வாறு வாதம் நடைபெற்றிருக்கும் என்பதைப் பாரதி தம் மனக் கண்ணுல் கண்டு எழுச்சியோடு பாடிய பாடல் அது. ஒரு இசை நாடகமாகவே அப்பாடல் அமைந்துள்ளது.

நாட்டில் எங்கும் சுதந்திர வாஞ்சையை
நாட்டினுய் கனல் மூட்டினுய்

என்கிருன் விஞ்சு துரைமகன். அதற்கு நம் வீரர் பெருமகனுர்,

சொந்த நாட்டிற் பிறர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம் இனி அஞ்சிடோம்

என்று பெருமித உணர்ச்சி பொங்க விடையளிக்கிருர்.

இந்தப் பாடல் முழுவதையும் படிக்கும்போது அன்று நடைபெற்ற நிகழ்ச்சி எப்படியிருந்திருக்கும் என்பதை இன்று நம்மால் உணரமுடிகிறது.

### 'கல்கி' நடத்திய விழா

1952 செப்டம்பர் 12ல் சென்னை கச்சாலீசுவரர் ஆலயத்தின் முன் அமைக்கப் பெற்றிருந்த பாரதி விழா அரங்கில் பாரதியின் அந்த இசை நாடகத்தை நாங்கள் நடித்தோம். அமரர் 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் முன்னின்று நடத்திய பெரு விழா அது. ராஜாஜி உள்பட, வீரர் வ. உ. சி. அவர்களை நேரில் கண்டு உரையாடும் பேறுபெற்ற பெருமக்கள் பலர் அன்றைய விழாக் கூட்டத்தின் முன்னணியிலே வீற்றிருந்தனர்.

நான் சிதம்பரனாராக வேடம் புனைந்து நின்றேன். நாடகத்தில் உரையாடல் எதுவுமில்லை; பாரதியின் பாடல் மட்டுந்தான். வீரச் சிதம்பரமாக நானும் விஞ்சு துரையாக எங்கள் குழுவின் நடிகர் டி. எஸ். தட்சிணாமூர்த்தியும் ஆவேசத்தோடு பாடி நடித்தோம்.

மகாகவி பாரதியின் பாடல்களுக்குச் சிலர் உரிமை கொண்டாடியதை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்று, அப்பாடல்களை நாட்டின் பொதுச் சொத்தாக்கிய பிறகு நடைபெற்ற முதல் விழா அது. அந்த வெற்றியிலே எங்களுக்கும் பங்குண்டல்லவா? எனவே, நாங்கள் அந்த வெற்றிப் பெருமிதத்தோடு நடித்தோம்.

வந்தே மாதர கோஷம்

நாடகம் தொடங்கியது. நடைபெறவிருக்கும் நிகழ்ச்சியைப் பற்றிய அறிவிப்புச் செய்யப்பெற்றதும் திரை விலகியது. வீரச் சிதம்பரனாரையும் விஞ்சு துரையையும் மேடையில் பார்த்ததும் பெருந்திரளாகக் கூடியிருந்த அவையோர் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள். நான் உணர்ச்சிப் பிழம்பாக நின்றேன்.

இருவரும் பாடத் தொடங்கினோம். ஆம்; சொந்தக் குரலிலேயே ஆவேசத்தோடு பாடினோம். விஞ்சு துரையின் கண்டனங்களுக்கு வீரர் சிதம்பரம் உடனுக்குடன் விடையளித்த போது, அவையோர் பல முறை கைதட்டி வரவேற்றனர். சில அடிகளைப்பாடி முடித்த பிறகு இறுதியாக,

கூட்டம் கூடி வந்தே மாதரம் என்று
கோஷித்தாய் எமைத் தூஷித்தாய்
ஓட்டம் நாங்கள் எடுக்க வென்றே
கப்பல் ஓட்டினாய் பொருளீட்டினாய்

என்று அழுத்தமாகப் பாடினார் விஞ்சு துரை. உடனே நான் (சிதம்பரம்) ஆவேசத்தோடு, "வந்தேமாதரம்" என்று உச்சஸ்தாயியில் குரல் எழுப்பினேன். விஞ்சுதுரை ஆத்திரத்தோடும் கோபத்தோடும் கண்களை அகல விரித்தார். நான் மீண்டும் அழுத்தமாக அதற்கு மேல் ஸ்தாயியில்,

'வந்தேமாதரம்'

என்று முழக்கி நிறுத்தினேன். மீண்டும் விஞ்சுதுரை கண்களில் கனல் கொப்பளிக்க உருட்டி விழித்தார். நான் மேலும் அழுத்தமாக ஆவேசத்தோடு,

'வந்தே மாதரம்'

என்று உச்சஸ்தானத்தில் குரலை எழுப்பி நீண்ட பார்வையோடு பெரு முழக்கம் செய்தேன்.

என்ன வியப்பு! எதிரில் உணர்ச்சி வடிவாக வீற்றிருந்த பல்லாயிரக் கணக்கான மக்கள் வெறி பிடித்தவர்கள்போல என்னோடு சேர்ந்து,

'வந்தே மாதரம்' வந்தே மாதரம்'

என்று கோஷித்தனர். அவையின் முன்னணியிலே வீற்றிருந்த சிலபெரியவர்கள் துள்ளி எழுந்து, கரங்களை உயர்த்திய வாறு 'வந்தேமாதரம்' என்று முழக்கியதை என் வாழ் நாளில் மறக்க முடியாது. ராஜாஜி அவர்களும் உற்சாகத்தோடு பாராட்டினார்கள்.

காட்சி ஐந்து நிமிடங்கள்தான் நடைபெற்றது. 'வந்தே மாதரம்' என்று சிதம்பரனார் கோஷிப்பதோடு காட்சி முடிகிறது. பெரும் திரளான மக்கள் அந்த மாமந்திரத்தை எதிரொலித்து முழக்கிய உணர்ச்சி வேகம் அடங்க மேலும் ஐந்து நிமிடங்கள் பிடித்தன.

### வித்து விழுந்தது

சிதம்பரனாரை நாங்கள் மேடை நாடகமாக உருவாக்குவதற்கு 1952 பாரதி விழாவில் நடைபெற்ற இந்த இசை நாடகம்தான் வித்தாக இருந்தது. வ. உ. சி. யின் வீர வரலாற்றில் நாடகத்திற்குத் தேவையான ஒரு உயிரோட்டம் இருக்கிறது. பாரத விடுதலைப் போரில் பைந்தமிழ் நாடு கிளர்ந்தெழுந்து முன்னணியில் நின்ற சிறப்பினை உணர்த்தும் அவ்வீர வரலாற்றை எப்படியேனும் மேடை யேற்றிவிட வேண்டுமென்ற துடிப்பு எங்களுக்கு இருந்தது.

1955ஆம் ஆண்டில் திடீரென்று ஒரு நாடகம் என் பார்வைக்கு வந்தது. நாடகத்தின் பெயர் 'தளபதி சிதம்பரனார்' ஆவலோடு படித்தேன்; என் மதிப்புக்குரிய தலைவர் ம. பொ. சி. அவர்களிடமும் காண்பித்தேன். ம. பொ. சி. யின் 'கப்பலோட்டிய தமிழன்' என்னும் வரலாற்று நூலை அடிப்படையாகக் கொண்டுதான் நண்பர் சேலம் சித்தராசன் நாடகம் புனைந்திருந்தார். அவரோடுநான் கடிதத் தொடர்பு கொண்டேன். நாடகத்தை மீண்டும் திருத்தியமைக்க வேண்டிய வழிவகைகளை யெல்லாம் அவருக்கு எழுதினேன். சில ஆண்டுகள் கடந்தன.

### வானொலியில் வ. உ. சி.

14-4-58 இல் அந் நாடகச் சுவடியைக் குறுக்கி 'கப்பலோட்டிய தமிழன்' என்னும் தலைப்பில் சென்னை வானொலியிலே நாங்கள் நடித்தோம். வானொலி நாடகத்தைக் கேட்டு ரசித்த அன்பர்கள் பலர் எங்களை மிகவும் பாராட்டி உற்சாகப் படுத்தினார்கள். மீண்டும் மேடை நாடக முயற்சியைத் தொடர்ந்தோம். நாடஆசிரியர் சித்தராசன் ஒரு மாத காலம் எங்கள் இல்லத்திலேயே வந்திருந்து நிகழ்ச்சிகள், உரையாடல்கள் யாவற்றையும் திருத்தியும், மாற்றியும் எழுதிக் கொடுத்தார். தம்பி பகவதி, நண்பர் கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் ஆசிரியர் சித்தராசன் இவர்கள் மூவரோடும் தனித்திருந்து சில நாட்கள் நன்கு விவாதித்து இறுதியாக ஒருவாறு நாடகத்தை எழுதி முடித்தோம்.

### மேடை நாடகம்

மகாகவி பாரதியின் வாக்குகள் பலவற்றை நாடக பாரதியின் உரையாடல் களிலே புகுத்தினோம். வ. உ. சி யின் 'மெய்யறம், 'அகமேபுறம்', 'மனம்போல் வாழ்வு'' 'வலிமைக்கு மார்க்கம், முதலிய நூல்களிலே உள்ள சிறந்த கருத்துக்களை நாடக வ. உ. சி. உரைகளிலே சேர்த்தோம். தலைவர் ம. பொ. சி. அவர்களிடம் நாடகத்தைப் படித்துக் காட்டினோம். அவர்களும் சில அரிய யோசனைகள் கூறி நாடகத்திற்கு மெருகு ஏற்றியதோடு நாடகம் கச்சிதமாக அமைந்து விட்டது என்று நற்சான்றும் தந்தார்கள். வ. உ. சி. அவர்களின் குமாரர் வ. உ.சி. சுப்பிரமணியம் எங்கள் நெருங்கிய நண்பர். அவர் வானொலி நாடகத்தைக் கேட்ட நாள் முதல் எங்களை உற்சாகப் படுத்திக் கொண்டேயிருந்தார். அவரிடமும் மேடை நாடகத்தைப் பற்றிக் கூறினேன். நாடக அமைப்பு முறை சரியாக உள்ளதென அவரும ஆமோதித்தார்.

### பின் குடுமி வ. உ. சி.

வேடம் புனைவதற்காக ஆடையணிகளைத் தயாரிக்க முனைந்தபோதுதான் பெரும் சிக்கல்கள் ஏற்பட்டன. நாடகப் பாத்திரங்கள் நம் காலத்தில் வாழ்ந்தவர்கள் அல்லவா? பார்த்துப் பழகியவர்கள் இருக்கிறார்களே; அவர்கள் உள்ளம் ஒப்ப வேண்டுமே என்று அஞ்சினேன். நமக்குக் கிடைத்துள்ள புகைப்படங்கள் பலவற்றிலும் வ. உ. சி. தலைப்பாகை

யுடனேயே காணப்படுகிருர். ஆனல் அவர் நாடகத்தில் தலைப்பாகையில்லாமல் வரவேண்டிய காட்சிகளும் இருக்கின்றன. எனவே பாகையில்லாத சமயம் அவர் எப்படியிருந்தார் என்பதை அறிய முயன்ருேம். அவரோடு நெருங்கிப் பழகிய அன்பர்கள் சிலரிடம் விசாரித்தோம். வ. உ. சி. சைவ வேளாளர் மரபின்படி பின் குடுமி வைத்திருந்தார் என்பது மட்டும் தெரிந்தது. ஓரளவு கற்பனையாகவே யூகித்து ஒரு பொய்ச் சிகை தயாரித்தோம.

பின்னல் நாடக மேடையில் தம்பி பகவதியை வ. உ. சி. வேடத்தில் பார்த்த முதியவர்கள் சிலர் வ. உ. சி. சாட்சாத் இதே போலத்தானிருந்தார் என்று பாராட்டினர்கள்.

### ராஜாஜி பாரட்டுரை

வ. உ. சி. அவர்களுடன் நெருங்கிப் பழகிய நம் தலைவர் ராஜாஜி அவர்கள் நாடகத்தைப் பார்த்து விட்டு மேடையில் பாராட்டிய போது அவர்கள் வாயால்,

> 'மேடையில் தோன்றிய சிதம்பரம் பிள்ளை, பாரதி, சிவா முதலிய பாத்திரங்கள் எல்லாம் தத்ரூபமாகவே யிருந்தார்கள்'

என்று சொன்னபோது எங்கள் எல்லோருக்கும் ஆறுதல் ஏற்பட்டது.

மகாகவி பாரதியின் பாடல்கள் சில, இந்த நாடகத்தில் பொருத்தமாக அமைந்தன. எனவே. அப் பாடல்களையே பயன்படுத்திக் கொண்டோம்.

தீரர் சுப்பிரமணிய சிவாவாக நான் நடித்தேன். அவருடைய பாடல் ஒன்று பழைய புத்தகத்திலிருந்து கிடைத்தது. அதையும் பயன்படுத்தினேம். ஏனைய பாடல்கள் நெல்லை மாவட்டத்தையே சேர்ந்த கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் சொற்சுவை பொருட்சுவையோடு மிக அருமையாக அமைத்துத் தந்தார். ஆண்டாளின் திருப்பாவைப் பாடல் ஒன்றும் அருமையான கட்டத்தில் இடம் பெற்றது.

இந்தனைச் சிறப்புக்களுடன் 'தேசபக்தர் சிதம்பரனர்'—வ. உ. சி. அவர்களை ஈன்றெடுத்த நெல்லை மாவட்டத்தில், அவர் போர்க்கொடி உயர்த்திய திருநெல்வேலியில் நகரமன்றப் பொருட்காட்சி அரங்கில் 1960 ஜூலை முதல் தேதியன்று "ஜாம் ஜாம்" என்று அரங்கேறியது.

### "சாட்சாத் பாரதியார்"

இந்த நாடகத்தில் பாரதியாராக நடிப்பதற்குப் புதிதாக ஒருவரைத் தேர்ந்தெடுத்தோம் அவருடைய கண்கள் பாரதியின் கண்களைப்போல் ஒளிபெற்று விளங்கின. அவரது இயற்கையான துடிப்பும் பேச்சும் ஒரு கவிஞனுக்குரிய முறையில் காட்சியளித்தன. முன்னதாகவே அவருக்கு வேடம் புனைந்து பார்த்தபோது அவர் அசல் பாரதியாகவே தோற்றமளித்தார். சென்னையில் சிதம்பரனர் நாடகத்தைக் காண பாரதியாரின் புதல்விகள் தங்கம்மாள் பாரதியும், சகுந்தலா பாரதியும், வந்திருந்தார்கள். அவர்கள் மிகுந்த உணர்ச்சியோடு, "எங்கள் தந்தையார் இப்படித்தான் பேசுவார்; இப்படித்தான் துள்ளித்துள்ளி நடப்பார்" என்று சொல்லிப் பாராட்டியபோது எங்கள் உள்ளம் நிறைவு பெற்றது. அவ்வேடத்தைத் தாங்கிய நண்பர் கதிரேசன் எட்டையபுரத்திற்கு அருகிலுள்ள கழுகுமலையைச் சேர்ந்தவர். அவர் பாரதி கதிரேசனுவே பெருமை பெற்ருர்.

வாஞ்சிநாதன் மனைவியின் கண்ணீர்!

சப்கலெக்டர் ஆஷ் துரையைச் சுட்டுக் கொன்று தன்னையும் மாய்த்துக் கொண்ட புரட்சி வீரன் வாஞ்சி நாதன், நாடகத்திலே ஒரு முக்கிய பாத்திரமாக வருகிறார். அவரைப் பற்றிய வரலாறு எதுவும் எங்களுக்குத் தெரியாது. அதைப் பற்றித் தெரிந்துகொள்ள நாங்கள் பெரு முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை. நாடகாசிரியர் வாஞ்சிநாதனுக்கு ஒரு மனைவியைப் படைத்து, அவள்மூலமாக நாடக உணர்ச்சிகளை உருவாக்கியிருந்தார். இறுதியாக வாஞ்சிநாதன் கருவுற்றிருந்த மனைவியை ஏமாற்றிவிட்டு இரவில் புறப்படுகிறார்; இவ்வாறு நாடகம் ஆக்கப் பெற்றிருந்தது. நாங்கள் சென்னையில் நாடகத்தை நடத்தியபோது சாட்சாத் வாஞ்சிநாதன் மனைவியே உயிரோடிருக்கிறார் என்பதும், அதுவும் சென்னையிலேயே இருக்கிறார் என்பதும் தெரியவந்தது. ஆக்கூர் அனந்தாச்சாரியார் உதவியோடு அந்த அம்மையாரைச் சென்று பார்த்தேன்; வணங்கினேன். அவர்களிடமிருந்து சம்பந்தப்பட்ட குறிப்பான செய்திகளை அறிய முயன்றேன். அவர்களும் வந்து நாடகத்தைப் பார்த்தார்கள். மறுநாள் அவர்களைக் கண்டு 'தங்களைப் பற்றிய காட்சியில் ஏதாவது தவறு இருக்கிறதா' என்று கேட்டேன், அவர்கள் அமைதியாகக் கண்ணீர்விட்டார்கள். 'எல்லாம் நடந்தது போலவே இருக்கிறது' என்று நாத் தழுதழுக்கக் கூறினார்கள். தெய்வத்தின் திருவருளை எண்ணிப் பூரித்தோம். எங்கள் மனம் சாந்தி அடைந்தது.

யாம் பெற்ற பேறு

மற்ற நாடகங்கள் எல்லாவற்றையும்விட இந்த நாடகத்தை உருவாக்குவதில் நாங்கள் அதிகப்படியான சிரமத்தை யெடுத்துக் கொண்டோம். எங்கள் உழைப்பு வீண் போகவில்லை. இந்நாடகத்தின் வெற்றிக்கு ஒத்துழைத்த நண்பர்கள் எல்லாரும் பாராட்டுக்குரியவர்கள். இந்தமேடை நாடக வெற்றிதான் "கப்பலோட்டிய தமிழன்" என்னும் பெயருடன் ஒரு அற்புதமான திரைப் படத்தை உருவாக்கக் காரணமாயிருந்தது என்பதைப் பெருமையோடு சொல்லிக் கொள்ள எனக்கு உரிமையுண்டு.

தேசபக்தர் சிதம்பரனாராகவும், சுப்பிரமணிய சிவாவாகவும், மகாகவி பாரதியாகவும் நாடக மேடையில் தோன்றுவதற்கு எங்களுக்குக் கிடைத்த நற்பேற்றினை எண்ணும்போது இன்னும் மெய் சிலிர்க்கிறது.

வாழ்க சிதம்பரனார்!



சுப்பிரமணிய சிவா

# வீர மெய்ஞ்ஞானி சுப்பிரமணிய சிவா

சா. கணேசன்



சா. கணேசன்

இருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில், தமிழகத்தில், முப்பெரும் சுப்பிரமணியர்கள் பெரும் புகழ்கொண்டு விளங்கினர். ஒருவர், மகாகவி சுப்பிரமணிய பாரதியார்; மற்றவர் வ. வே. சுப்பிரமணிய ஐயர்; மூன்ருமவர், சுப்பிரமணிய சிவா. அவர்கள் மூவரையும், முறையே, பாரதி, வ. வே. சு., சிவா எனக்கூறுவது அக்கால வழக்கு. மூவரிலும் ஆண்டால் முதிர்ந்தவர் சிவாவே.

அவர்கள் மூவருக்கும் காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்துடன் தொடர்புண்டு. என்ருலும், அதிகத் தொடர்பு, அதிக நாள் தொடர்பு, சிவாவுக்குத்தான்.

1920ம் ஆண்டு, தென்னகத்தில் கொழுந்து விட்டெரியத் தொடங்கிய தேசபக்திக் கனல், காந்தியத்தால் வெம்மை குறைந்து நேர்மை அரும்பியகாலம். அந்தக் காலந்தான் காரைக்குடியின் தேசிய எழுச்சிக்கு வித்திட்ட காலம். வித்திட்டவர் சிவாதான். வித்திட்ட இவர் காரைக்குடியையே தமது முகாமாகவும் ஆக்கிக்கொண்டார். தேசப் பணிக்குத் தாம் இட்ட வித்து, முளைத்துத் தழைத்துக் கிளைக்க நீர்பாய்ச்சி, உரமிட்டும் வந்தார்.

தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மும்மொழிப் புலவர் இவர்; தேசப் பற்றும் தெய்வ பக்தியும் நிரம்பியவர்; சொல்லாற்றலும் எழுத்தாற்றலும் மிக்கவர். அருள்பழுத்த நெஞ்சில் ஆண்மை, தறுகண், அஞ்சாமை தலைதூக்கிநின்றன. ‘ஆறி நின்றது அருளன்று’ என்றுரைத்த விசுவாமித்திரனே இவர் என்று எண்ணத்தோன்றும்!

அறிவா லுயர்ந்த அருந்தவராய் விளங்கிய இவர் உள்ளம், தாய்நாட்டின் அடிமை நிலையை எண்ணி எண்ணிக் குமுறிற்று. உபநிஷதங்களையும், கீதையையும் ஓதி உணர்ந்த மெய்ஞ்ஞானியான இவர் கர்ம யோகியாகச் செயல்பட்டதில் வியப்பேதும் இல்லையன்றே? அன்றேல், ஆன்ம விடுதலையை அடைய விழைந்து துறவறமேற்கொண்ட இவர் நாட்டு விடுதலையில் நாட்டம் செலுத்துவாரா?

வடக்கே ஒரு சிரத்தானந்தர் என்ருல் தெற்கே ஒரு சுப்பிரமணிய சிவா என்னத் துலங்கினர். பாதம் வரைத்

தாழ்ந்த நாலரை முழக் காவிக் கதர் வேட்டி; மணிக்கட்டுவரை நீண்ட காவிக் கதர் ஜிப்பா; காது மறையக் கட்டிய காவி முண்டாசுக் கட்டுத் தலைப்பாகை; இடது மார்பில் தொங்கும் முண்டாசு வால்; வலது கையின் பிடியுள் அடங்கிய, கோணலற்ற, நெற்றி மட்டக் கம்பு; கருணையும், வீ ர மு ம் கலந்தொளிரும் கூர்த்த நயனங்கள்; சுருங்கலும், கரடு முரடுமான முகம், இவை யாவும் ஒருங்கு கூடிய உருவத்தான் சிவா.

வீரம் சொட்டும் சீரிய கூரிய பேச்சு; நாதம் நிரம்பிய, தீரம் மிளிரும், எழுச்சி ஊட்டும், உணர்ச்சி மிக்க பாட்டு; "அமைதிப் பொய்கையில் அக்கினிக் குழம்பா?" என்று அதிசயிக்கும் வண்ணம், அருள் குளிரும் அந்தக் கண்களிலிருந்து சீற்றக் கனல் தெரிக்கும், பேசும்போதும், பாடும் போதும். இவர் ஓர் உணர்ச்சிப் பிழம்புதான்.

"இராமகிருஷ்ண பரம ஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும்", "விவேகா நந்த சுவாமிகள் சரித்திரம்", "சிகாக்கோ பிரசங்கம்" ஆகிய நூல்களை முதன்முதலில் தமிழில் எழுதினர். இவருடைய தத்துவ ஞானத்திற்கும், வரலாற்றறிவுக்கும், தொகுத்து வகுத்துச் சுவைபட நிரல்நிரையாக எழுதும் ஆற்றலுக்கும் அந்நூல்கள் மீண்டும் மீண்டும் பதிப்பில் வந்து கொண்டிருப்பதே தனிச்சான்ருகும். ஆனல் அந்நூல்களை நாம் ஆழ்ந்து படிப்போமானல் எல்லாவற்றையும் மிஞ்சிக்கொண்டு தேசபக்திக் கனல் தெறிப்பதை நாம் காணலாம்.

நாடு காக்கும் போரில் அல்லது நாடு மீட்கும் விடுதலைப் போரில் வீறு கொண்டு குதித்தவர்கட்குச் சக்தி-கொற்றவை-தான் வழிபடு தெய்வமாயிருக்கும்; இவருக்கும் சக்திதான் தாரக மந்திரமா யிருந்திருக்கிறது. அச்சக்தியை இவர் பாரதமாதா என்பார். அதுதான் இவர் வழிபடு தெய்வம். தேச விடுதலையே இவர்தம் குறிக்கோள். அதை அடைய மக்களைத் தட்டி எழுப்புவதே இவர் சமய ஒழுக்கம்.

எங்கெல்லாம் கூட்டம் சேருமோ அங்கெல்லாம் சிவா எழுந்தருளி யிருப்பார். தேர்த் திருவிழாக்கள் இவர் பிரசங்கத்திற்குக் கூட்டம் சேரப் பேருதவியா யிருந்திருக்கின்றன.

விழா நடைபெறும் கோயில் வீதியில் ஒரு தெருவிளக்குத் தண்டின் அடியிலே, கல்லோ, மரமோ, அன்றி ஒரு கள்ளிப் பெட்டியோ, அதன்மீது சிவா நின்று கொண்டிருப்பார். "வந்தேமாதரம்!" "பாரதமாதாவுக்கு ஜே" "மகாத்மா காந்திக்கு ஜே" என்ற கோஷங்கள் முழங்கும். பாரதியார் பாடல் உணர்ச்சியூட்டும். கேட்பானேன்? அப்புறம் கூட்டம் கூடிவிடும். சிவா வீராவேசமாகப் பேசுவார். வெறும் பேச்சா அது? இல்லை. ஒரு போர் பிரசங்கமாகவே இருக்கும்; அயர்ந்து கிடந்தவர்களை ஆண்மையாளராக்கும்; ஓய்ந்து கிடந்தவர்களையும் உணர்ச்சிப் பிண்டங்களாக மாற்றும்.

"அடிமைக்கு வாழ்வில்லை, மதிப்புமில்லை; சாகாப் பிணமாய்ச் சஞ்சரிக்கலாம்; உண்ணலாம்; உறங்கலாம்; பிள்ளை குட்டிகளைப் பெற்றுத் தள்ளலாம்; வெள்ளைக்காரனுக்கு வேலைசெய்ய அடிமைகளைப் பெருக்கிக் கொடுக்கலாம்; செத்த பிறகும் நரகம்தான் சித்திக்கும்; சுவர்க்கம் நமக்கெல்லாம் கிட்டாதையா கிட்டாது. ஏனென்ரு விழிக்கிறீர்கள்? அடிமைக்கும் கோழைக்கும் அங்கே இடமில்லை; அனுமதியுமில்லை.

"பாரதியார் என்ன சொல்கிருர் தெரியுமா?

நின் அருள் பெற்றிலாதார்
    நிகர் இலாச் செல்வரேனும்,
பன்ன அரும் கல்வி, கேள்வி
    படைத்து உயர்ந்திட்டாரேனும்,

பின்னரும் என் இராத
பெருமையிற் சிறந்தாரேனும்,
அன்னவர் வாழ்க்கை பாழ் ஆம்;
அணிகள் வேய் பிணத்தோடு ஒப்பார்.

கேட்டீர்களா, நம் பெருமையை? அழகான ஆபரணங்களை அணிந்து கொண்டுள்ள பிணங்கள் என்கிறார் அடிமைகளை. ஆனதால், சுதந்திரம் நமது பிறப்புரிமை. அதை அடைந்தே தீரவேண்டும். விழித்துக் கொண்டு எழுங்கள்!

"முப்பது கோடிமக்கள் நாம். எல்லாரும் ஒன்றாய்ச் சேர்ந்து மூச்சை இழுத்துஒரு ஊது ஊதினால்-ஒரேஊதாய் ஊதினால் — அந்தக்காற்றே ஆங்கிலேயர்கள் அத்தனை பேரையும் அடித்துக் கொண்டுபோய் அட்லாண்டிக் மகாசமுத்திரத்தில் ஆழ்த்திவிடாதா? இல்லை என்றால், நாம்எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து பிரான்சுக் கரையில் நின்று கொண்டு எச்சிலை உமிழ்ந்தால் இங்கிலாந்து நாட்டையே ஒரு பெரு வெள்ளப் பெருக்கு முழுகடித்து விடாதா? நன்றாக யோஜியுங்கள், வீர யுவர்களே!

"நாய்களையும் பன்றிகளையும் போல் அடிமையாகவா நாமிருப்பது? நாம் மனிதரில்லை? நாம் சோறுண்ணவில்லை? நமக்கு மானம் ரோஷமில்லை? பெற்ற தாயைப் பிறன் பெண்டாள நாம் பார்த்துச் சகித்துக் கொண்டிருப்போமா? துடிதுடித்துப் பதறி எழுந்து படுபாவியைக் கண்டதுண்டம் செய்யாமல் விடுவோமா? அப்படித்தானே, பெற்ற தாயினும் பெரிய தாயான, பிறந்த நாட்டை அந்நியன் அடக்கி ஆண்டு கொண்டிருக்கிறான்! இதைக் கண்டும் காணமாட்டாத குருடர்களா நாம்? உங்கள் மானம் உணர்ச்சிகொள்ளவில்லையா? நெஞ்சம் குமுறவில்லையா? குருதி கொதிக்கவில்லையா? நாடி துடிக்கவில்லையா?

"எழுங்கள்! எழுங்கள்! சுயராஜ்யப் போராட்டத்தில் குதியுங்கள். காந்தி மகாத்மா போர் முரசு கொட்டிவிட்டார், போருக்கு ஆள் வேண்டும்; பண்டம் வேண்டும்; பணம் வேண்டும்; திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடி ரூபாய் வேண்டும். காந்தி நோட்டுகள் அச்சிட்டு வந்திருக்கின்றன. குறைந்தது ஆளுக்கு ஒரு ரூபாயாவது கொடுத்துக் காந்தி நோட்டு வாங்கிக் கொள்ளுங்கள். போராட்டத்தில் கலந்து தியாகம் செய்ய முடியாதவர்கள், போராட்டத்திற்குப் பணங்கூடவா கொடுக்க முடியாது? இதுவும் செய்யாதவன் இந்தியன் என்று கூறிக்கொள்ளவும் தகுதியில்லாதவன்"

இந்த உரையை நான் அரியக்குடித் தெப்பத்திருவிழாவில்வடமேற்குமூலையில் சிவா பேசிக்கொண்டிருந்தபோது கேட்டேன். சில ரூபாய்க்குத் திலகர் சுயராஜ்ய நிதி—காந்தி நோட்டுக்களையும் வாங்கினேன்.1942ல் போலீசார்என் வீட்டைச் சூறையாடியதற்கு முன்வரை அந்நோட்டுக்கள் என்னிடம் பத்திரமாயிருந்து வந்தன.

1920ல் சிவா காரைக்குடி வந்தார். அதற்குச்சில ஆண்டுகட்கு முன்னரேயே பசலா கிருஷ்ணய்யர் என்பவர் காரைக்குடிக்கு வந்து ஒரு காபிக் கடையை நடத்திவந்தார். கல்லுக்கட்டி வடகிழக்கு மூலையில், ஊருணியை ஒட்டியிருந்தது அக் காபிக் கடை. அவர் ஒரு தேசபக்தர்; எதற்கும் துணிந்த கட்டை.

அவர் பேச்சிலும்மூச்சிலும்தேசபக்திப் பொறி பறக்கும். சிவாவின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் உரியவராய் விளங்கினார் அவர். ஒருக்கால் சிவா காரைக்குடிக்கு வருவதற்கும் அவர்தான் காரணரோ என்னவோ!

சிவா சில தொண்டர்களுடனேயே காரைக்குடிக்கு வந்தார். வந்ததும் பாரதமாதா ஆச்ரமம் தோன்றிவிட்டது. மேலே ஊருணிக்கும் கல்லுக் கட்டிக்கும் இடையேயுள்ள முனீச்வரன் கோயில் தெருவில் அந்த ஆச்ரமம் இடங்கொண்டது. எல்லாப் பணிகளையும் ஆச்ரமவாசிகளே செய்வர். அவர்களுள் இன்று என் நினைவில் இருப்பவர்கள் திருவாளர்களான: ஸ்ரீநிவாச வரதன், தியாகராஜ சிவம், கல்கி சதாசிவம் ஆகிய மூவருமே. முன்னவர் இருவரும்அமரராய்விட்டனர். மூன்றுமவர் இன்று நம்மிடையுள்ளார். அவர்களுள் தியாகராஜ சிவமும், கல்கி சதாசிவமுமே சமையல் துறையை நடத்தியவர்கள்.

தினப்படி தேசியப் பஜனை ஊர்வலம் வரும். பாரதியாரின் பாடல்களே முழங்கும். கல்கி சதாசிவமும், ஸ்ரீநிவாச வரதனும் பாடல்களை எடுப்பாகவும் உணர்ச்சிபூர்வமாகவும் பாடுவார்கள்.

"வந்தே மாதரமென்போம்," "செந்தமிழ் நாடெனும் போதினிலே," "அச்சமில்லை, அச்சமில்லை," "வீர சுதந்திரம் வேண்டி நின்றார்" முதலிய பாடல்கள் முன்மொழியப் பின்மொழியப் பெரும் எழுச்சியூட்டும்.

"முன்னை இலங்கை அரக்கர் அழிய
முடித்தவில் யாருடை வில்?"

என்று இருவர் இசைந்து வினவாய் இசைப்பார்கள்.

அன்னை பயங்கரி பாரத தேவிநல்
ஆரிய ராணியின் வில்!"

என்று பலரும் பெருமித உணர்வுடன் விடையாய் இசை முழக்கம் செய்வார்கள். இங்ஙனமே, அந்தப் பாடல்கள் முழுவதும் வினா விடையாக இசைக்கும் பொழுது ஒருவகை உணர்ச்சி எல்லார் உள்ளங்களிலும் ஏற்படும்.

அத்தகைய பஜனை ஊர்வலங்களில் திருவாளர்கள் பசலா கிருஷ்ணய்யர், இந்தியன் ஸ்டோர் சங்கரன், சுப. முத்தையா. மு. நடராஜன் முதலியவர்களுடன் நானும் கலந்துகொண்டு சென்றது இன்னும் பசுமையாக என் நெஞ்சில் நின்று மணக்கிறது.

அந்த ஊர்வலங்களின் போது வீடுகள்தோறும் பிடியரிசி வாங்கியதும், அப்படிச் சேர்ந்த அரிசி ஆச்ரமவாசிகளின் உணவிற்குப் பயன்பட்டதும், என் நினைவில் இருக்கின்றன. காரைக்குடிக்கு 1921இல் காந்தியடிகள் வந்தபோது சிவா வரவேற்றார். அப்பொழுது தான் சிவா–சங்கத்தொடர்பு வலுப்பட்டது. சங்கத்து நிர்வாகிகள் சிவாவுக்குத் தனி மதிப்புக் காட்டியதில் வியப்பொன்றுமில்லை. சிவாவும் சங்கத்தின்பாலும், அதன் உறுப்பினர்பாலும் அன்புமிக்குடையவரா யிருந்தார். திரு. சொ. முருகப்பர், திரு. ராய. சொக்கலிங்கன், திரு. பிச்சப்பா சுப்பிரமணியம், திரு. செ, அ. ராம. முருகப்பசெட்டியார். திரு. அ. ராம. ராம. சேதுச்செட்டியார், திரு. அழ. அருணசலன், திரு. வை. சு. ஷண்முகம் செட்டியார், திரு. கி. நாராயணன் செட்டியார், திரு. கோகலே அருணசலம் செட்டியார் முதலியோர் அக்காலத்து, அசலாமல் சங்க வாசம் செய்தவர்களாவார்கள்.

அக்காலத்தில் சங்கத்தின் பெயர்ப் பலகை முதல் அனைத்திலும் "ஓம்" என்பதே தலையில் பொறிக்கப் பெறும். அதைக்கண்ட சில பெரியவர்கள் பிள்ளையார்சுழி, சிவமயம் போடாமல் ஓம் என்று குறிப்பதை விரும்பவில்லை. அதை ஒரு குறையாகவும் கூறினர்கள். அந்தச் செய்தியைச் சங்கத்தார் சிவாவின் கவனத்திற்குக் கொண்டு வந்தனர். உடனே சிவா இரு கட்டுரைகள் எழுதிக் கொடுத்தார். அவை "ஓங்கார விளக்கம்"

"பிரணவ கோஷம்" என. இரு துண்டுப் பிரசுரங்களாக அந்நாளில் வெளி வந்தன. சங்கத்திற்கும், பாரதியார், வ. உ. சி. போன்ற தேசபக்தர்கள் சிலருக்கும் ஏற்பட்ட தொடர்புக்கு இவரும் ஒரு பெருங் காரணர்.

அறிவும் திறனும், ஆண்மையும் நேர்மையும், அஞ்சாமையும் இரக்கமும் நிரம்பிய, தன்னலம் வெறுத்த, சர்வ பரித்தியாகியாகிய சிவாவைப் பெருநோய் பற்றிக்கொண்டு பாடாய்ப் படுத்திற்று. உடனிருந்தவர்கள் இவரைத் தங்கள் தெய்வமாகவே கருதிக் கீழ்ப்படிந்து சிறிதும் முகம் சுளிக்காமல் பணிபுரிந்து வந்தனர். என்றாலும் இவர் தம்மைத் தனிப்படுத்தியே வாழ்ந்து வந்தார். தொழுநோய் ஒரு பயங்கரமான தொற்று நோய் என்பதை ஒருபோதும் மறவாது வாழ்ந்தார். தம் உடை, உண்ணும் பாத்திரங்கள் அனைத்தையும் ஒதுக்கமாக வைத்துக் காத்து வந்தார். தமது பண்ட பாத்திரங்களை யன்றி, பொதுப் பாத்திரங் களைத் தொடவே மாட்டார்.

அந்நோயால் எத்துணைக் கஷ்ட முற்றாலும் எதையும் பொருட்படுத்தாமல் முழு மூச்சுடன் தேசத் தொண்டில் ஈடு பட்டார். தமது வீர கர்ஜனையால் எண் ணற்ற மக்களை, உணர்ச்சியூட்டி, வீறு கொண்டு எழச் செய்தார். இத்தகைய ஒருவரை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பார்த்துக்கொண்டு சும்மா இருந்து விடுமா? இவர் மீது வழக்குத் தொடர்ந்து சிறையுள் அடைத்தது. இரண்டு அல்லது மூன்றாண்டுத் தண்டனை என்பது என் நினைப்பு.

இவர் உடல்நிலைக்குச் சிறை வாழ்வு பெருந்துயர் விளைத்தது. சிறைக்கோட்ட மருத்துவரும் இது பற்றி அரசாங்கத் திற்குச் செய்தியளித்தார். "ஏகாதிபத்திய ஆட்சிக்கு விரோதமான செயல்களில் ஈடுபடுவதில்லை" என்று முறி எழுதிக் கொடுத்தால் சிறைவீடு செய்வதாக அரசாங்கம் சொல்லிற்று. தேசபக்த சிங்கம் அதற்கு இசையுமா, என்ன? தேசத்துரோகம், தேவிதுரோகம் எனச் சீறினர். "மானம் துறந்து வாழ்வதினும் மானம் காத்து மாள்வேன்" என்றிட்டார் சிவா. இச்செய்தி காந்தியடிகள் செவிக்கு எட்டிற்று. தமது 'யங் இந்தியா'வில் ஒரு குறிப்பெழுதினர் இது பற்றி.

"தேசத்திற்காகவே தமமை அர்ப் பணம் செய்துகொண்ட சிவாவைப் போன்றவர்கள், சத்திய வாழ்வை நித்திய வாழ்வாக்கிக்கொண்டவர்கள், தொழு நோயால் பாதிக்கப்பட்டுள்ள நிலையில் முறி எழுதிக்கொடுத்து விடுதலை யடைவது தேசத் துரோகமாகாது. அது தேசபக்திக் குரிய செயலே. அங்ஙனம் செய்து விடுதலை யடைந்து உடம்பைச் சீராக்கிக்கொள்ளும்வரை ஆக்கப்பணி யில் மட்டும் ஈடுபடவேண்டும் என்பதே சிவாவுக்கு எனது ஆலோசனை" என்பது அக்குறிப்பின் சாரம்

அதைக் கண்டபின்னர் சிவா முறி எழுதிக் கொடுத்துச் சிறைவீடு பெற்றார். விடுதலை பெற்ற சிவா தர்மபுரி மாவட் டத்தில் உள்ள பாப்பாரப்பட்டி என்னும் அழகிய கிராமத்திற்குச் சென்றார். பாரதமாதா ஆச்ரமத்தை மீண்டும் தொடர்ந்தார். அவர் அங்கிருந்த காலத் தில்தான் வங்கச் சிங்கம் தேசபந்து சித்திரஞ்சன தாஸ் ஓய்வு கருதி, பாப்பாரப்பட்டி வந்து சில தினங்கள் இவருடன் தங்கி அளவளாவி மகிழ்ந் திருக்கிறார்.

சிவாவுக்கு அங்கு பல வகையாலும் உதவி புரிந்த அன்பர் (அவர் பெயரை மறந்துவிட்டேன். மன்னிக்கவேண்டும்) ஒரு நல்ல செல்வர்; மாடிவீட்டுக்காரர். அந்த மாடியிலேதான் தேசபந்து தங்கி

யிருந்தாராம். அங்கு போய், சிறிது நேரம் அம்மாடியில் தங்கியிருந்தேன் நான். தாஸ் தங்கியிருந்தபொழுது எடுத்த புகைப்படங்களையும் கண்டேன். மாடியிலிருந்து புறத்தே நோக்கினல் கண்ணைக் கவரும் வளமான மலைக்காட்சி மனத்தை மகிழ்ச்சியுள் திளைக்கச் செய்கிறது. அந்தக் காட்சியை மணிக் கணக்கில் கண்டு சொக்கி அதிலே ஆழ்ந்து விடுவாராம் சி. ஆர். தாஸ்.

காரைக்குடியில் தங்கியிருந்தபோது பாரதமாதா ஆச்ரமத்தை அமராவதி புதூரில் அமைத்து நடத்தக் கருதியிருந்தாராம் சிவா. ஆனல் அவ்வெண்ணம் எக்காரணத்தாலோ நிறைவேறவில்லை. பாப்பாரப்பட்டியில் சில காலம் நிலவியதெனினும், சிவாவுடன் அதுவும்மறைந்து விட்டது. அதியமான் நெடுமான் அஞ்சி ஆண்ட, கொடைவீரம் செறிந்த, மானம் போற்றிய அந்த மண்ணிலே, பாப்பாரப் பட்டியில், இந்த வீர மெய்ஞ்ஞானியின் பூத உடல் சமாதிகொண்டிலங்குகிறது. இவர் ஏற்றத்திற்கு ஏற்றவண்ணம் சமாதியின் தோற்றம் அமையவில்லைத் தான். சமாதியின் எற்றம் சமாதி கொண்டவரின் ஏற்றத்தையன்றே பொறுத்திருக்கிறது என்று நாம் ஒரளவு ஆறுதல் கொள்ள வேண்டியதுதான், இல்லையா?

ஹிந்து மதாபிமான சங்கம் தன் பொன் விழாவைக் கொண்டாடும் பொழுது, அதனுடன் தொடர்புகொண்டிருந்த பெரியார்களுள் சிறந்த சிலருள் ஒருவரான வீர மெய்ஞ்ஞானி சுப்பிரமணிய சிவா அவர்கட்கு நமது திரிகரண வணக்கத்தைச் செலுத்தி அவர் நினைவைப் புதுப்பித்துக்கொள்வோமாக!



வ. வே. சு. ஐயர்

# வ. வே. சு. ஐயர்

கவியோகி
சுத்தானந்த
பாரதியார்



சுத்தானந்த பாரதியார்

இந்து மதம் மறு மலர்ச்சி பெற்றுள்ளது; அந்த மறுமலர்ச்சி தமிழகத்தில் காரைக்குடியிலேதான் தளிர்த்துப் பூத்து நறுமணம் வீசியது. அங்கேதான் இந்துமதாபிமான சங்கம் எழுந்தது–1917ஆம் ஆண்டு; அதில் எனக்கும் பங்குண்டு அந்தச் சங்கத்தைச் சேர்ந்த விசுவநாதையர் என்னிடம் அடிக்கடி வருவார். அந்தக் காலம் நான் விஞ்ஞான ஆசிரியராக இருந்தேன். புதுச்சேரியில் வீர விளக்கு வ. வே. சு. ஐயரும் பாரதியாரும் எனக்குச் சில பணிகளைப் பணித்தனர். அது நாட்டினருக்கு வீறு நல்கும் பணிநலமாகும். எனது வாழ்வில் நண்பர் என்று பெருமையுடன் பேசத் தக்க ஒருவர் வ. வே. சு. ஐயரே. ஒருசமயம் ஸ்ரீ அரவிந்தரைக்கண்டு பேசிய பிறகு ஐயரைக்கண்டேன். ஐயரைக்காண்பது அக மகிழ்ச்சி நல்கும். ஐயர் அசகாய சூரர்; கம்பக் கலைவாணர்; ஆங்கிலத்திலும், லத்தீனிலும், பிரெஞ்சிலும் சிறந்த புலவர்; மனத் திட்பமும், வினைத் திட்பமும், உடலுறுதியும், வீரக்கனல் வீசும் விழிகளும் உடையார்; எனினும் பெண்மையின் நாணும் பேச்சில் மென்மையும் உடையவர். அவர் வாய்மொழி முத்துக் கோப்பது போல அடுக்கடுக்காக, மெல்ல மெல்ல, சிந்தனைக்கடலில் ஆழ்ந்து வெளிவரும்.

1917ஆம் ஆண்டு எங்கள் வாழ்வில் ஓர் நன்னாள். அன்று மஹாத்மா காந்தி புதுவைக்கு வந்தார். 1910ஆம் ஆண்டு லண்டனில் ஐயர் காந்தியைக் கண்டு பேசியதெல்லாம் ஹிந்து சுயராஜ்யம் என்ற நூலாக வந்துள்ளது. ஐயரே காந்தியை முதலில் மஹாத்மா என்று அழைத்தார். காந்தி, ஐயரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்தார். தமது சத்தியாக்கிரகத்தின் தத்துவத்தை விளக்கி "நீரும் சத்திய வீரராக வேண்டும்; கனல் வீரரான நீர் கருணை வீரராக வேண்டும்" என்று வேண்டினர். அன்றுமுதல் நாங்கள் காந்தி வீரரானோம்.

எங்கள் பேச்சு சமயத்தின்பால் திரும்பியது. அந்தக் காலம் மதுரையில் இரண்டு அந்தண மாணவர் கிருஸ்துவராகி செராம்பூருக்கு (Serampur) அனுப்பப் பெற்றனர். பலர் இந்து மதத்தைக் கேலி செய்து பிற மதங்களைப் போற்

றினர். இன்னும் பலர், "சமயமே சாதிகளை உண்டாக்கி நாட்டைப் பிரித்து அன்னியருக்குக் காட்டிக் கொடுத்தது" என்று பிதற்றினர். ஒருபுறம் புறச் சமயத் தாக்குதல்; மறுபுறம் அகச் சமயத் தாக்குதல்; இன்னொருபுறம் "சமயமே வேண்டாம்" என்னும் கூச்சல்; பின்னொருபுறம் இந்து சமயத்தைக் கிண்டல் செய்யும் கொடுமை; இன்னொருபுறம் சமய நூல்களையே தொட்டுப் பாராது கற்பனைப் பொய்களைத் திரித்துவிடும் மடமை — இவையெல்லாம் சேர்ந்து நமது பண்பாட்டிற்கே தீ மூட்டிக் கொண்டிருந்தன. இந்தச் சமயம், மாஸ்கோவில் மார்க்ஸ்–லெனின்,புரட்சிப் புயல்வீசிச் செங்கொடி நாட்டி உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்தார். சமயத்தைக் கஞ்சா மயக்கம் என்றார். அதுவே றே நம்மவரைப் பிடித்துக்கொண்டது. இவ்வாறு இந்து சமயம் "இருப்பதா? இறப்பதா?" என்ற நிலைமைக்கு வந்த போதே சமய சஞ்சீவிபோலக்காரைக்குடி இந்து மதாபிமான சங்கம் என்னும் கதிரொளி எழுந்தது. அப்போதுதான் ஐயர் காந்தியிடம் ஒரு கேள்வி கேட்டார்.

#### மகாத்மா காந்தி சொன்னது

"மகாத்மாஜீ! 1857இல் நானசாகெபு இரண்டு முழக்கங்கள் செய்தெழுந்தான்:- ஒன்று ஸ்வராஜ்யம், மற்றொன்று ஸ்வதர்மம். தேசம், தர்மம்—இரண்டும் நம் உயிர்த் துடிப்புக்கள். தார்மீக-அடிப்படையில்லாவிட்டால் தேசம் சுதந்தரம் அடைந்தும் இதந்தராது. இந்தக்காலம் இந்துமதம் இருள்மூண்டு, புகை மூண்டு, மூச்சுத் திணறி வருந்துகிறது. நமது சமயத்தை மீட்க என்னசெய்வது?" என்று வினவினார்.

மஹாத்மா: "நான் இந்து சனாதனி; எனது சமயம் எனக்கு உயிர். எனது சத்தியாக்கிரகம் இந்துமதத்தின் செயலுருவே. இந்து மதத்தை நாம் காக்க வேண்டும். பகவத் கீதையும் ராம நாமமும் எங்கும் முழங்க வேண்டும்" என்றார். திருக்குறளையும் அவர் போற்றினார்.

ஸ்ரீ அரவிந்தர்: "சனாதனமே இந்துமதம்; அதைக் காக்கவே பாரத நாடு விடுதலை பெறுகிறது" என்றார்.

வீரவிளக்கு இதற்காகவே குருகுலம் நாட்டி, பிரமசாரிகளைப் பயிற்றினார். நானும் ஐயரும் இரவெல்லாம் தனியாகக் கொழுந்தனுமலைக்குச் சென்று பேசுவோம். அந்தப் பேச்சின் கருப்பொருளையே இங்கே எழுதுகிறேன். ஐயர் கலியாண அருவிக்குப் போகு முன்பு "சுதந்தர பாரதம் ஹிந்து தர்மா அனுஷ்டான நிலையமாக வேண்டும். மதம் மாறிய பேரும் திரும்பி நம்முடன் சேரவேண்டும். அதற்கொரு நல்ல இயக்கம் காணுவோம்" என்று சொன்னார்.

#### இந்து மதாபிமான சங்கம்

காரைக்குடி இந்து மதாபிமான சங்கம் செய்த சமயப் பணியும் சமுதாய முன்னேற்றப் பணியும் சரித்திரப் புகழ் பெறத் தகும். பல கூட்டங்களில் நானும் விசுவநாதையரும் இந்துமதச் சொற்பொழிவுகள் ஆற்றினோம். தேசக் கவி பாரதியாரும் இந்தச் சங்கத்திற்கு நல்லாசி கூறினார்.



டாக்டர்
# உ. வே. சாமிநாதையர்

புலவர் இரா. சாரங்கபாணி, எம். ஏ., எம். லிட்



உ. வே. சாமிநாதையர்

இரா. சாரங்கபாணி

"தன்னை மேன்மேல் உயரச் செய்வானும் தன்னைத் தலையாகச் செய் வானும் தான்"

என்னும் நாலடியின் ஈரடிக்கொப்ப, தன்னை முயற்சியால் மேன்மேல் உயர்த்திக்கொண்டு, தாம் வாழ்ந்த காலத்துத் திகழ்ந்த தலையாய புலவர்களுள் ஒருவராக விளங்கியவர் உ. வே. சாமிநாத ஐயர் ஆவர். 1855-ஆம் ஆண்டு பிப்ரவரி 19-ஆம் நாள் தஞ்சை மாவட்டத்தில் உள்ள உத்தமதானபுரம் என்னும் ஊரில் வேங்கட சுப்பையா–சரசுவதி அம்மையார் என்னும் இருவர்க்கும் மகவாய்த் தோன்றினர் 'குலவிச்சை கல்லாமற் பாகம் படும்' என்னும் பழமொழிக்கேற்ப இசையறிவும் தமிழறிவும் உ. வே. சாமிநாத ஐயருக்கு இயல்பின் வாய்த்தன.

இளமையில் தம் தந்தையாரிடமும் ஆசிரியர் கிருட்டினன் என்பாரிடமும் கல்வி பயின்றார். அப்பொழுதே நாள் தோறும் ஐந்து பாட்டு மனப்பாடம் செய்வது அவருடைய வழக்கமாக இருந்தது. பின் சடகோப ஐயங்காரிடம் பாடம் கற்கத் தொடங்கினர். தமிழ்ச் சுவை உண்டாகும் வண்ணம் கற்பித்த முதல் ஆசிரியர் சடகோப ஐயங்காரே என்றும், சித்திரப்பாவையினைக் காட்டிச் சிறுர்களைக் கவர்வதுபோலப் பா நயத்தைக் காட்டித் தம் உள்ளத்தைக் கவர்ந்தவர் அன்னரே என்றும், தம் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார். புலவர்களோ துறவிகளோ யார்வரினும் தமிழ்த தொடர்பான செய்தி அவர்தம் உரையாடலில் கிடைக்காதா என எக்கற்று எதிர நோக்கும் ஆர்வம் அவர்பாலிருந்தது. "வடமொழி, தெலுங்கு, ஆங்கிலம் இவற்றுள் ஒன்றேனும் என் மனத்தைக் கவரவில்லை. சில சமயங்களில் வெறுப்பைக் கூட அடைகிறேன். இசைபால் சிறிது அன்பிருந்தது. அதுவும் நிலையாக இல்லை. என் உள்ளத்தின் சிகரத்தைத் தமிழே பற்றிக்கொண்டது. அதன் ஒரு மூலையில் சங்கீதம் இருந்தது. எந்தச் சமயத்திலும் அந்தச் சிறிய இடத்தையும் அதனிடமிருந்து கவர்ந்துகொள்ளத் தமிழ் காத்திருந்தது" என்று வரைந்துள்ள அவர்தம் குறிப்பிலிருந்து எத்தகைய தமிழார்வம் அவர்கட்கு இருந்தது என்பதனை அறியலாம்.

விருத்தாசல ரெட்டியாரிடம் யாப்பருங்கலக்காரிகையைப் பாடம் கேட்டார். பின் கவிஞர் முடிமணியாய், சைவப்

பிழம்பாய், குணக்கடலாய்ப் பிறங்கிய திரிசிரபுரம் மகாவித்துவான். மீனுட்சி சுந்தரம்பிள்ளை அவர்களிடம் பாடம் கேட்க வேண்டும் என்னும் வேணவா கிளர்ந்தெழுந்தது. அதுகாரணமாக அவரிடம் பாடம் கேட்பது போலச் சில நாள் கனவும் கண்டனராம். மீனுட்சி சுந்தரம்பிள்ளை இயற்றிய திருக்குடந் தைத் திரிபந்தாதி, சிவப்பிரகாசர் அருளிய பழமலைத் திரிபந்தாதி, நெற் குன்றவாணர் யாத்த திருப்புகலூர்த் திரிபந்தாதி முதலியவற்றையும், சீர் காழிக் கோவை தஞ்சை வாணன் கோவை முதலிய சிற்றிலக்கியங்களை யும், பெரிய புராணம் போன்ற தெய்வப் பனுவல்களையும் மீனுட்சிசுந்தரம் பிள்ளைபால் கேட்டறிந்தார். நமசிவாய தேசிகரிடம் காஞ்சிப் புராணம், பேரூர்ப் புராணம் முதலியவற்றைக் கற்றறிந்தார்.

பின்னர்த் திருவாவடுதுறை. சுப்பிர மணிய தேசிகர் தொடர்பு கிட்டிற்று. அவரிடம் பல சமய இலக்கியங்களை ஐயந்திரிபற உணர்ந்தார். அப்போது மீனுட்சிசுந்தரம்பிள்ளையின் மாணுக்க ரான தியாகராசச் செட்டியார் நட்புக் கிடைத்தது. அதன்பயனுகக் குடந்தைக் கல்லூரியில் தமிழ் ஆசிரியரானுர். பின் சென்னை மாநிலக் கல்லூரியில் பேராசிய ராகத் திகழ்ந்தார். சிதம்பரம் மீனுட்சிக் கல்லூரியின் தமிழ்த் தலைமையும் அவரை அடைந்தது.

இளமைப் பருவத்தைப் பெரும் பாலும் சைவ இலக்கியங்களைப் பயிலு வதிலேயே செலவழித்த சாமிநாத ஐயருக்குப் பல்வேறு சமய இலக்கியங் களையும் பண்டைத் தமிழ்ப் பனுவல்களை யும ஆராயும் நிலை தம் பிற்காலத்தே வாய்த்தது. ஆறுமுக நாவலர் முதலிய பெரியார்களைப்போல, சைவசமயத் தொடர்பான இலக்கியங்களில் மட்டும் ஈடுபடாமல் சமயப்பொறையுடன் பௌத் தம், சமணம் பற்றிய இலக்கியங்களிலும் ஈடுபட்டு ஆராய்ந்து ஐயரவர்கள் நூல் களை வெளியீடு செய்தமை தமிழர்தம் தவப்பயனேயாகும். உ. வே. சா. விற்கு இத்தகைய பரந்துபட்ட நல்லுள்ளம் வாய்க்கக் காரணமாக அமைந்தது அவர் முதற்கண் எடுத்துக்கொண்ட சமண காப்பியமாகிய சீவக சிந்தாமணிப் பதிப்பே எனலாம். பிற்காலச் சிற்றிலக் கியங்கள் தொடங்கிப் பண்டை முதல் நூலாகிய தொல்காப்பியம்வரை, கசடறக் கற்று அவற்றைக் கருத்தினில் இருத் திக் கொண்டமையால்தான் பிழையற்ற பதிப்பு நூல்களை ஐயரவர்கள் வெளியிட முடிந்தது.

ஊர்ஊராக வீடுவீடாக அலைந்து ஊணின்றி, உறக்கமின்றி, வெள்ளத்தே போகாமலும், வெந்தணலில் வேகா மலும், சிதல்வாய்ப்பட்டுச் சிதையாமலும் பழைய ஏடுகளைத் தடுத்தாட்கொண்டு ஆராய்ந்து அவற்றைப் பதிப்பித்தருளி ஞர். பத்துப்பாட்டு, எட்டுத்தொகைஎனப் பாராட்டப்பெறும் பதினெண்மேற் கணக்கு நூல்களுள் 15 நூல்களைப் பதிப் பித்தவர் உ. வே. சா. அவர்களே. ஐம் பெருங் காப்பியங்களுள் இப்போது கிடைப்பனவாகிய சிலப்பதிகாரம். மணி மேகலை, சிந்தாமணி மூன்றையும் வெளிக் கொணர்ந்த பெருமை அன்னுரையே சாரும். புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக்காரிகை முதலிய இலக் கண நூல்களையும், தக்கயாகப் பரணி போன்ற சிற்றிலக்கியங்களையும், குமர குருபரர் பிரபந்தத்திரட்டு, சிவக் கொழுந்து தேசிகர் பிரபந்தத்திரட்டு முதலிய திரட்டு நூல்களையும் அவரே பதிப்பித்துள்ளார். அதன் பயனுகவே, பண்டைத் தமிழர் வரலாறு, பண்பாடு, நாகரிகம், மொழிச் சிறப்பு என்றினை யவற்றை நாம் தெள்ளிதின் உணர முடிகின்றது. அப்பெருமகனுர் தோன்றி யிராவிடின் சங்கப்பனுவல்களின் நிலை யாதாயிருக்குமோ?

உ. வே. சா. அவர்களின் பதிப்பு ஆராய்ச்சிக் குறிப்பு மலிந்ததாய், பிழை யிலதாய், ஒப்புமைப் பகுதி உடையதாய், செம்மைசான்றதாய் இலங்குகிறது. தம் கருத்தை வலியப் புகுத்துவதோ, மனம் போன போக்கில் அடிகளைத் திருத்து வதோ அவர்மாட்டுக் காண்டல் அரிது. நூலாசிரியர் உரையாசிரியர் வரலாறுகள் குறிப்புரை, அருஞ்சொல் விளக்கம் ஆய்வு முன்னுரை, நூலால் அறியப் பெறும் புரவலர். புலவர். மலை, யாறு பற்றிய செய்திகள் ஆகியவற்றை இவர் பதிப்பித்த எந்நூலிலும் காணலாம். அவர்தம் பதிப்புக்களைப் பார்க்கும்போது அவரை நாம் பதிப்பாசிரியர் என்று மட்டும் கொள்வதில்லை. உரையாசிரியர், இசை ஆசிரியர், வரலாற்று ஆசிரியர், மொழி நூலாசிரியர் என்றெல்லாம் நினைக்கத்தோன்றுகிறது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலம்பு, மேகலை, சிந்தா மணி முதலிய நூல்கட்கு முன்னுரையாக அமைந்த ஆய்வுக்கட்டுரைகளே இக் கால மாணவர்கள் பலர் ஆராய்ச்சிப் பட்டம் பெறுதற்கு உறுதுணையாக உள்ளன. "பாம்பின்கால் பாம்பறியும்" என்றபடி இப்பதிப்புக்களின் சிறப்பினை அறிந்த மகாவித்துவான் ரா. இராக வையங்கார் அவர்கள் "தமிழ் நூல்களை நன்குகப் பதிப்பிடுவதற்குப் பிறந்தவர் சாமிநாதையரே" என்று கூறி வியந்து பாராட்டியுள்ளார்.

ஐயரின் அரிய செந்தமிழ்ப் பணிக்கு அப்பொழுதைய ஆங்கில அரசு ஆயிரம் வெண்பொற்காசு பரிசளித்து "மகா மகோபாத்தியாயர்" என்னும் பட்டத்தை யும் வழங்கிப் பாராட்டியது. காஞ்சி காமகோடிபீடம் சங்கராச்சாரியார் அவர்கள் "தாட்சிணாத்திய கலாநிதி" என்ற பட்டம் நல்கினர். சென்னைப் பல்கலைக் கழகம், டாக்டர், பட்டம் அளித் துச் சிறப்புப் பெற்றது. தாம் வாழ்ந்த காலத்தே பலரும் பாராட்டும் கீர்த்தியை யும் பெற்றுத் திகழ்ந்தவர் உ. வே. சா. ஆவர்.

இலக்கியம் கற்பதில் ஈடில்லாப் பற்றுக்கொண்ட உ.வே.சா. அவர்களுக்கு இலக்கியம் படைப்பதிலும் ஆர்வம் இருந்தது. யாப்பிலக்கணம் நன்கு கை வரப் பெறுதற்கு முன்னரே சதகங்கள் மாலைகள் முதலியவற்றையும்படித்த பழக் கத்தால், அவற்றிலமைந்த சந்தப் போக் கை மனத்திற்கொண்டு, கும்பகோண ஆதிகும்பேசுவரர்,மங்களாம்பிகை, ஆயிர வல்லி முதலியதெய்வங்களின்மீது பாடல் இயற்றியுள்ளார். யாப்பிலக்கணம் நன்கு அறிந்தபின்சுவாமிமலையிலுள்ள முருகன் மீது பதினாறு கட்டளைத் துறையான் அமைந்த திருவேரகமாலையைத் தொடுத் தார். அவ்வூர் அம்பிகை மேல் ஐந்து செய்யுள் இயற்றி ஆனந்தவல்லியம்மை பஞ்சரத்தினம் எனப் பெயர் சூட்டினர்.

காரிகையைப் பாடம் கேட்கும் பொழுதே வெண்பா இலக்கணத்தை வெண்பா வடிவிலும், அகவற்பா இலக்க ணத்தைஅகவற்பாவிலும் இயற்றி, ஆசிரி யரிடம் திருத்தம் செய்து கொள்வாராம். இதுபோலவே திருவாவடுதுறை, சுப்பிர மணியதேசிகரிடம்அணியிலக்கணம் கற்ற போது, அணிகள் பல அமையுமாறு தேசிகர் மீதே பல பாக்களைப் பாடி அவரி மே காட்டியதுண்டு. நீலி இரட்டைமணி மாலை பெரியநாயகி இரட்டைமணி மாலை என்ற நூல்கள் ஐயர் யாத்தவை யாகும். முருகக் கடவுள் படைவீடுகள் ஆறற்கும் ஒவ்வோர் இரட்டைமணி மாலை இயற்றியுள்ளார்.

பட்டாபிராமப் பிள்ளை மடத்திற்கு வந்தபொழுது அவரைப்பற்றி ஒவ்வொரு பாடல் இயற்றுமாறு சுப்பிரமணிய தேசி கர் மாணவரிடம் கூறினர். அப்பொழுது உ. வே. சா.

"கார்நோக்கி நிற்கு மயில்போல
நீங்கிய காதலன்றன்
தேர்நோக்கி நிற்கு மடந்தையர்
போலத் திகைப்பறவிப்
பார்நோக்கி நிற்குநற் பட்டாபி
ராம பராக்கிரம
நேர்நோக்கி நின்றனம் யாங்களெல்
லாநின் னிகழ்வரவே."

என்ற இப்பாடலைப் பாடினர்,

நச்சினர்க்கினியர் உரைச்சிறப்புக் களைப் பல்லாற்றான் பாராட்டிப் பாடிய பாடல் சுவைதருவதாகும்.

"எவனுலை வாயினிடை யமுதவா
யுடயனென இயம்பப் பெற்ருேன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது
நிலவவுரை எழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனச்சி
னர்க்கினியன் எனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெய்போது
மலர்கவென தகத்து மன்னே."

தியாகராசச் செட்டியார் விடைபெறு விழாவின்போது பாடிய பாடல் அவர்தம் உள்ளன்பைப் புலப்படுத்துகின்றது.

வருந்தியருந் தமிழ்நமக்கு யார்புகல்வா
ரென்றேங்கும மனத்தி னேர்கள்
திருந்தியசெந் தமிழ்ச்செல்வன் தியாகரா
சப்புலவர் திலகன் றனபாற்
பொருந்தியவன்விளங்கவெடுத்துரைத்
திடுநல்
லுரைகளைத்தம் புந்தி வைப்பின்
மருந்தியலைந் தியலுணர்வார் கவிபுகல்வார்
பிரசங்கம் வகுப்பார் மன்னே"

பூண்டி அரங்கநாதர் பொன்றியபின், அவர்தம் சொல்வன்மை, தமிழ்வன்மை முதலிய நினைந்து இனைந்து கையற்றுப் பாடிய பாடல்கள் சொற்சுவையும் பொருட் சுவையும் பொருந்தி இருத்த லோடு படிப்போரைக் கண்ணீர் உகுக்கு மாறும் செய்து விடுகின்றன.

"பனியார் சிலசொற் பகர்ந்தே யுளங்
குழைப்போய்
கனியா ரினிமை கலந்தே சுவைகள்பல
நனியார் தமிழி னயந்தெரிய வல்லார்தாம்
இனியா ருனைப்போ லினியா ரினியாரே."

"தரங்க வேலை யனைய தாய
சபையி டைப்பு குந்துநின்
றுரங்க லந்த வாங்கி லேய
ரொருமொ ழிப்ர சங்கமங்
கரங்க நாத வள்ளல் போல
வவர வர்வி யந்துதம்
சிரங்க ரந்து எக்கு மாறு
செப்ப வல்லர் யாவரே."

திருவா வடுதுறை ஆதீனத்தலைவர் சுப்பிரமணிய தேசிகர் மறைவு கேட்டுப் பாடிய பாடல் வருமாறு.

"கருணையெனுங் கடல்பெருகு மடையாய
நினதுவிழிக் கடையுஞ் சீதத்
தருணமதி யனையமுக மண்டலமுந்
தெளியமுத தாரை போல
வருமினிய மொழிவாக்கும் வருவோர்க்கு
வரையாது வழங்கு கையும்
திருவருட்சுப் பிரமணிய குருமணியே
காண்பதென்று சிறியேன் மன்னே."

இங்ஙனம் சாமிநாதையர் பாடிய தனிப்பாடல்களையும் சிற்றிலக்கியங்களை யும் காணும்போது அவர் ஒரு கவிஞர் என்றும் சொல்லலாம்.

தமிழையே நினைந்து தமிழுக்காக வாழ்ந்து தமிழன்னைக்குச் சிலம்பு, மேகலை, சிந்தாமணி முதலிய அணிகளைப் பூட்டி அரியணையேற்றித் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராய்த் திகழ்ந்த மையின் டாக்டர் உ. வே. சா. தமிழர்தம் உள்ளத்தே என்றும் நிலைக்கலுற்ருர்.

குடந்தைநகர்க் கலைஞர் கோவே
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய்; அவர்நெஞ்சின் வாழ்த்
தறிவாய்
இறப்பின்றித் துலங்குவாயே!

என்று பாட்டுக்கொரு புலவர் பாரதி யாரும் டாக்டர் உ. வே. சா. அவர்கட்குப் பாமாலை சூட்டுவராயினர்.



ஞானியார் சுவாமிகள்

# ஞானியார் சுவாமிகள்

தமிழ்ப்பெரும் புலவர் அ. நடேசமுதலியார்

திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூர்ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் மடத்து ஐந்தாம் பட்டத்துத்தலைவர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவசாரிய சுவாமிகள் அவர்களது நினைவு இக்கட்டுரை.

தமிழ்நாடு செய்த தவப்பயனாய்த் தோன்றிய பல சான்றோர்களுள் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளாகிய ஸ்ரீ ஞானியாரடிகள் இருபதாம் நூற்றாண்டு முற்பகுதியில் வாழ்ந்த தன்னிகரில்லாத் தனிப்பெரும் சமயத் தொண்டும் மொழித் தொண்டும் ஆற்றிய பெரியாராவார்கள். அவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் தொண்டுநினைவுகள்,சொற்பொழிவுகள், நூல்கள் வாயிலாக அண்மைக்காலத்தில் அடிகளாருடைய மாணவர்களாலும், அன்பர்களாலும் வெளிவந்துள்ளன. எனினும் அடிகளாரிடத்தில் தொண்டு செய்து கல்விபெற்று வாழ்ந்து வருகிற மாணவர் சிலருள் யானும் ஒருவனாகையால் அவர்களோடு உடனுறைவு காலத்தில் நேரில் அனுபவபூர்வமாக அறிந்த சில குறிப்புக்களைக் கொடுப்பதுதான் இக்கட்டுரையின் நோக்கம்.

அடிகளார் சோழ நாட்டிலே திருநாகேசுரம் என்னும் சேக்கிழார் பெருமானுடைய விருப்புத்தலத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றி, இளம் வயதிலேயே வீர சைவப்பரம்பரைத் திருமடமாகிய திருக்கோவலூர் ஆதீனம் திருமடத்துக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றார்கள். எனினும் அற நிலையத் தலைவராய் விளங்குவதற்கு வேண்டிய கல்வியறிவும் சமய அறிவும் தீட்சை முதலாயின செய்வதற்குரிய சமயச் சடங்கு அறிவும், சிவபூசை முதலாயின செய்து வைத்தற்குரிய ஆசாரிய அறிவும் பெறுவதற்கு அவர்கள் தக்க வடமொழி தென்மொழி ஆசிரியர்களிடத்தில் தன்னிலையில் தாழாது, பயிற்சி முகத்தான் பெற்றுத் தேறினார்கள். உலகியலுக்கு வேண்டிய ஆங்கில அறிவும், அக்காலத்தில் இசைப் பயிற்சிக்கு வேண்டிய தெலுங்கு அறிவும் பெற்றிருந்தார்கள். அடிகளார் அங்கலிங்கம் தரித்த வீர சைவமடத்துத் தலைவராகலானும், திருக்கோவலூர் மடத்து முதல் முதல்வர் வீர சைவப் பரம்பரையினர் ஆகலானும் அதற்கு மூலமாய் இருக்கிற வீர சைவ சித்தாந்தங்கள் அனைத்தையும், பகவ புராணம் முதலாகிய நூல்களிலிருந்தும்,

கன்னட மொழியிலிருந்தும், கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச் செய்த சித்தாந்த சிகாமணி, வேதாந்த சூடாமணி போன்ற நூல்களி லிருந்தும் துரிசு அறக் கற்றுத் தேர்ந்த புலமையுடன் விளங்கினார்கள். அதனால் அவர்களுடைய இளமைப் பருவம் மடத் துத்தலைவர்களாக விளங்கும் பொழுதே கல்விப் பெருக்கத்திற்கு ஆக்கந்தேடும் அரும்பாட்டுக்குரியதாயிற்று. அவர்களு டைய இலக்கண இலக்கிய அறிவு, சாஸ் திர நுட்ப அறிவு, சமயத்தில் ஆழ்ந்த பற்று. சமுதாயத் தொண்டில் நிறைந்த ஆர்வம், சமயப் பணியில் காட்டியஊக்கம் அத்தனையும் இளமை உழைப்பின்பயனே ஆகும். நிற்க, அடிகளாரிடம் கண்ட சில நிகழ்ச்சிகளை இனி இக் கட்டுரையில் காணலாம்.

அடிகளார் ஆயிரத்துத் தொள்ளா யிரத்து இருபத்தொன்பதில் சைவ மாநாடு ஒன்று திருப்பாதிரிப்புலியூரில் தங்கள் மடாலயத்தின் தொடர்பாகக் கூட்டினார்கள். அது போது தமிழ் நாட்டில் தலை சிறந்து விளங்கிய மொழிப் புலமை நிறைந்தவர்களும், சமய நுட்பம் அறிந்தவர்களும் ஒன்று கூடினார்கள். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள். மறைமலை அடிகள், திரு. வி. க., கா. சுப்பிரமணியப் பிள்ளை, ந. மு வேங்கட சாமி நாட்டார், தூத்துக்குடி பொ. முத்தையா பிள்ளை, சிவகுருநாதபிள்ளை, ம. பாலசுப்பிரமணிய முதலியார் முதலிய வர்கள். அந்த மாநாட்டில் மறைமலை அடிகள், தலைமை தாங்கினார்கள். மறை மலை அடிகள், மடாதிபதிகளையும், போலிச் சைவர்களையும் வன்மையாகக் கண்டிக்கும் இயல்பினர். திரு. வி. க. சமரச மனப்பான்மையில் சாதி வேற்று மை, சமய வேற்றுமை கூடாது என்பவர். கா. சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் சைவ சமயமே அனைத்திலும் உயர்ந்தது என்ற எண்ணத்தினர். மற்றையோர் சிலர் சமய ஒழுக்கங்களில் சாத்திர முறைப் படி. தீட்சை முதலாயின பெற்றுச் சிறத் தலே சமயத்திற்கு ஆக்கம் தருவது என்னும் கருத்தினர். இவர்களுள் சிலர், சாத்திரங்களும் ' சமய உண்மைகளும் ஆகம முறைப்படி அமைந்தன என்பவர். சிலர், சைவ உண்மைகள் அனைத்தும் தமிழர்களுடைய பண்டைய வழி வழி வந்த உண்மைகள் என்பவர். இப்பிணக் குகளை ஒருமுகப்படுத்தி அனைவரும் ஒரு சேர முடிவுகண்டு சமயத்திற்கு ஆக்க வழிகளில் பணி செய்யத் துணைநிற்க வேண்டும் என்பது அடிகளாரின் பரந்த நோக்கம். அதனால் அடிகளார் தலைமை தாங்காது மறைமலை அடிகளாரையே தலைமையாகவைத்தார்.அனைவரையும்தம் முன்னிலையிலேயே உசாவச் செய்து அனைத்துக்கும் தாமே சான்றாய் இருப்பது சைவ சமயம். எத்தனை கருத்து வேறு பாடுகள் இருப்பினும் நாம் அனைவரும் ஒன்று கூடிக் கலந்து மகிழ்தலாகிய இஃதொன்றே அனைத்தையும் உள்ளடக் கிய முழுமுதல் சிவனே என்பதனை உண்மைப்படுத்திற்று. வேற்றுமைகள் எண்ணத்தில் தானே தவிர, மகிழ்ச்சி என்ற ஒன்றில், அடைகின்ற பொருளில் வேற்றுமை இல்லை. அம்மகிழ்ச்சியாயிருப் பவன் இறைவன். அவன்தான் சிவன், மகிழ்ச்சி அடைகின்ற நாமெல்லாம் சைவர்கள். குறைவற்ற குற்றமில்லாத மகிழ்ச்சியைத்தான் சிவன் என்று சாத் திரங்களும். சமயச் சான்றோர்களும் ஏன் அனுபவிகளும் கூட ஒருமுகமாய் 'சிவம் மங்கலம், என்று கூறி இருக்கிறார்கள்.

''குறைவிலா மங்கலக் குணத்தனுதலின்
நிறைமலம் அனாதியே நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவம் என அறிவின் மேலவர்

என்று மேற்கோள் காட்டி அறிஞர்களை யும், அவையினரையும் அடிகளார் மகிழச் செய்ததிறம் வியப்பிற்குரியது. அப்போது

மறைமலை அடிகளார், அடிகளாரைப் பற்றி, மடாதிபதிகள் எப்படி இருக்க வேண்டும் என்பதனை அடிகளார் நடந்து காட்டுகிறார்கள்; அடிகளாரால் மடம் சிறப்புப் பெறுகிறது. மடங்களைப்பற்றிக் கருத்து வேற்றுமையுடைய நானும், சமயத்தைப் பற்றிக் கருத்துப் பகையுடைய ஈ. வே. ரா. போன்றவர்களும் அடிகளாரிடத்தில் தொடர்பு கொண்டுள்ளமை ஒன்றே அடிகளாரின் சிறப்புக்கும், அடிகளார் வாழ்கின்ற மடத்துக்கும், அடிகளார் செய்கின்ற சமயப் பணிக்கும், அடிகளாருடைய திருவாய் மலரும் மொழி வளர்ச்சிக்கும் போதிய சான்றாகும். அடிகளாரால் மொழி வளர்கிறது; சமயம் வளர்கிறது என்று புகழ்ந்து போற்றினார்கள்.

திரு வி. க. அவர்கள் அடிகளாரின் பேச்சைக் கேட்டுத் "தமிழ்ச்சமயமும், தமிழ்ச் சான்றோரும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் எப்படி வாழ்ந்திருப்பார்கள் என்று இலக்கியங்களில் ஆங்காங்குக் காணப்படினும், தெளிவு பெறமுடியாமல் திகைக்கின்ற எம்மனோர்க்கு, அடிகளாருடைய ஒழுக்கமும் பேச்சும், உயர்ந்த மனப்பான்மையும், இப்படித்தான் அவர்கள் வாழ்ந்தார்கள் என்பதனை உண்மைப்படுத்துகிறது. அவர்கள் வழி நின்று சமயப்பணியும், தமிழ்ப்பணியும் வளர்ந்து, நாடு, சமயப்பிணக்கும் மொழிப்பிணக்கும் இன்றி வளர வேண்டும். அதற்கு நாம், உறுதுணையாக நிற்கவேண்டும்" என்று கூறி வாழ்த்தினார்கள். இங்ஙனமே ஒவ்வொருவரும், அடிகளாரினுடைய ஆழ்ந்து அகன்ற நுட்பமான அனைவரையும் ஒன்றுபடுத்தும் அறிவுரை அறவுரைகளின் ஆற்றலை வியந்து பாராட்டினர். இவ்வாறாக மாநாடு சிறப்புப்பெற்றது.

சமய ஒழுக்கமும் சமய பிரசாரமும்

தாமின் புறுவது உலகு இன்புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்

என்பது குறள்

இது சமய வாழ்வுக்கும் பொருந்தும். மாடதிபதிகளாயிருப்பவர்கள் தம்முடைய ஆத்மிக வளர்ச்சிக்கு, சமய ஒழுக்கம் தலை நின்று உலக நன்மைக்கு, சமயப்பிரசாராகளாய் விளங்க வேண்டும். சமய ஒழுக்கத்தில் பூஜையும் அனுஷ்டானமும் இன்றியமையாதவை. சமயப் பிரச்சாரத்திற்கு, கல்வியும், பொது நலத் தொண்டும் இன்றியமையாதவை. மடங்களுக்குத் தலைவர்களாக வருபவர்கள் பூஜை அனுஷ்டானங்களிலும். அதனைச் செய்து வைக்கும் முறைகளிலும் தலை நின்று ஒழுக்கம் கடைப்பிடித்து அனைத்துயிர்க்கும் இரங்கும் அருளாளர்களாய் விளங்க வேண்டும். பிரச்சாரர்களாய் இருப்பவர்கள் பல சமய உண்மைகளையும் மனத்தடக்கி, தம் சமயத்தின் சிறந்த திட்பநுட்பக் கருத்துக்களைப் பொது மக்கள் அனைவரும் விளங்கிக் கொள்ளும்படி அருள் உள்ளத்தோடு கேட்பார்ப் பிணிக்கும் தகையவாய்ப் பேசிப் பிறரை வசீகரிக்க வேண்டும். ஞானியாரடிகள் இவ்விருதிறத்திலும் தலைசிறந்து விளங்கினார்கள். சமய ஒழுக்கத்தில் மூன்று படிகள். தாங்கள் ஒழுகுவது. சீடர்களுக்குத்தீட்சை முதலாயினசெய்து தங்களைப் போல் ஒழுகும்படிச் செய்வது, அவர்களைக் கண்டார் இப்படி இருக்க வேண்டும் என்று ஆர்வம் உண்டாகும்படி நடந்து காட்டுவது. இந்த மூன்று நிலைகளிலும், அடிகளார் நடந்துகாட்டினார்கள்.

பிரச்சாரர்களாய் வருபவர்களுக்கும், இந்த மூன்று நிலைகள் உண்டு. ஒன்று பிறசமயத்தவரைக் குறைத்துப் பேசாமல் இருப்பது. பிறசமய உண்மைகளைப் பிறசமயத்தாரும் மதிக்கும்படி உயர்த்திப் பேசுவது. அதற்கு அப்பால் தம்

சமய உண்மைகளை அனைத்தினும் மேம்பட்டதாக நிறுத்திக் காட்டி, பிற சமயத்தாரும் போற்றும்படிச் செய்வது. இந்த மூன்று நிலைகளிலும் அடிகளார் தமிழ் நாட்டில் தலை சிறந்து விளங்கினார்கள்.

ஒரு நிகழ்ச்சி. ஆயிரத்துத்தொள்ளாயிரத்து முப்பத்திரண்டாம் ஆண்டில் சில துறவிகளுக்கும், சில இல்லறத்தார்க்கும், என் போன்ற இளைஞர் சிலருக்கும் சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற சாத்திரங்களைக் காலையில் பாடம் சொல்லி வந்தார்கள். அதுபோது, சில கிருத்துவ நண்பர்களும், இஸ்லாமிய நண்பர் ஒருவரும் அந்நூல்களைப் பயில்வதற்கு வகுப்பிற்கு வந்தார்கள். அவர்களையும் கேட்கும்படி அடிகளார் அனுமதித்தார்கள். அது போது சைவ முறைப்படி தீட்சை முதலியன பெறாமல் சிவஞான போதம் முதலிய நூல்களைப் பாடம் கேட்பதும், பிறசமயத்தார்க்குப் பாடம் சொல்வதும் கூடாது என்று சிலர் புறங் கூறினார்கள்.

அவர்களில் சிலர் அடிகளாரிடத்திலேயே தம் கருத்து வேற்றுமையையும் புலப்படுத்தினார்கள். அது போது, அடிகளார், "சமய ஒழுக்கம் வேறு, சமயப் பிரச்சாரம் வேறு; சைவ சமயத்தில் உள்ளவர்கள் ஒழுக்கத்தில் நின்று ஆன்ம நலனைப் பெறுவதற்கு என்று, தீட்சையும், பூஜையும் கட்டுப்பாடுகளும் பெரியோர்களால் அமைக்கப்பட்டுள்ளன. அந்த விதிகளைச் சைவ சமயிகள் எக்காரணத்தினாலும் விலகாமல் பாதுகாக்க வேண்டும். ஆனால், சமய உண்மைகளைப் பிரச்சாரம் செய்யும் பொழுது பிறருக்கு, சைவ சமயம், பிற சமயங்களினும் உயர்ந்தது என்பதற்கு வேண்டிய ஆதாரங்களை, உண்மைகளை, சைவ சாத்திரங்களைக் கொண்டே தெளியச் செய்ய வேண்டும். மடாதிபதிகளாய் இருப்பவர்கள் இவ்விரண்டு பொறுப்பினையும் மேற்கொண்டவர்கள்".

'மடாதிபதிகள் சைவ ஒழுக்கங்களைக் கடைப் பிடிப்பார்க்கு, அந்த மரபு தவறாமல் தீட்சை முதலாயன செய்து, உபதேச முறைப்படிச் சைவ ஒழுக்கத்தில் நிறுத்தி, ஆன்ம நலனைப் பெறவும் செய்யவேண்டும். மற்றும் சமயஉண்மைகளை அறியாத, ஆனால் அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வமுடைய பொது மக்களுக்கும் பிற சமயத்தார்க்கும், பொதுவாக திட்ப நுட்பங்களை எடுத்துச் சொல்லி அவர்களுக்கும் சமயப் பற்றையும், சைவப் பற்றையும் வளர்க்க வேண்டும்; இவ்விரண்டு பொறுப்பையும் மேற்கொண்டு இருப்பவன் நான். ஆகையால் பாடம் சொல்லும்போது ஒழுக்க விதிகளைக் கடைப் பிடிப்பது கூடாது; அனைவரும் சாதி சமய மொழி வேறுபாடு இல்லாமல் உண்மைச் சமயத்தை அறிந்துகொள்ள வைப்பதே என் கடமை. அதுவே பிரச்சாரம்''

''சமயப்பிரச்சாரத்தின்பயன் மூன்று. ஒன்றுதெய்வ நம்பிக்கையை உண்டாக்குவது. இரண்டு, சமயப் பற்றுடையவர்களாக்குவது. மூன்று, சைவசமயமேமெய்ச் சமயம் எனப் பிறரும் உணரும்படிச் செய்வது. இதனைக் குறிக்கொண்டு காப்பாற்ற வேண்டும் பிரசாரகர்கள். அது போலவே மூன்றை நீக்க வேண்டும். பிரசாரகர், பிற சமயங்களைக் குறை சொல்லக் கூடாது. தன் சமய உண்மைகளைத் தெளிவாகச் சொல்ல வேண்டும். தான் சொல்லுகின்ற சைவ உண்மை, பிற சமயத்தாரும் உயர்ந்தது என்று போற்றும்படி அன்போடு அணைத்து அறிவுரை கூறவேண்டும். இந்தக் கடமைகளைச் செய்வதற்குத்தான் என்னைப் போன்றவர்களை இந்த இடத்தில் அமர்த்தி இருக்கிறார்கள். சைவ மடங்களிலே தலைவர்களாய் இருப்பவர்கள் அனைவரும் ஒழுக்கமும், பிரசாரமுமாகிய இவ்விரு கடமைகளையும் குறைவின்றி நிறைவேற்றினார்களானால் தமிழ் நாடு முழுதும் ஏன்

உலகம் முழுதும்கூட சைவம் தழைத் தோங்கும்''

"இடைக் காலத்திலே, பிற சமயத் தவர் இவ்விரு முறைகளையும் கடைப் பிடித்துதான் நம்மவரைப் பிற சமயத் தவராக மாற்றினார்கள். ஏன்? ஆயிரமாயி ரம் ஆண்டுகட்கு முன்னும் ஞானசம்பந் தர், திருநாவுக்கரசர் போன்ற அருளா ளர்கள் காலத்திலும், பிற சமயத்தினர் பேச்சாலும் நடையாலுமே நம்மவரை மாற்றிஇருந்தமையைவரலாறுஉண்மைப் படுத்துகிறது. ஆகையால் கடமைகளைச் செய்வதைக் குறைத்து, கட்டுப்பாட்டைப் பெரிதென மதித்தால் சமயம் வளராது; சமய வாழ்வு மக்களிடம் மலராது'' என்று கூறித் தெளிவு செய்தார்கள். கேட்டி ருந்த அன்பர்கள் அனைவரும், புறங்கூறி னோர் உட்பட மெய்ம் மறந்து, கண்ணீர் வார்ந்து, இன்பக் கடலில் திளைத்து, அன்று ஓர் அரிய விளக்கம் பெற்றோம் என்று மன நிறைவு பெற்றனர். இங்ஙன மாக அடிகளார் சமய ஒழுக்கத்தைப்பற்றி யும், சமயப் பிரச்சாரத்தைப் பற்றியும் தெளிந்த உள்ளம் உடையவர்களாய் வாழ்ந்தார்கள்.

இன்னும் ஒன்று. அடிகள் மடாதி பதிகளாய் இருந்தபொழுது தாமே போதகாசிரியராய், உரையாசிரியாராய், நூலாசிரியராய், சமயப் பிரசாரகராய். சமயத் தலைவராய் விளங்கினார்கள் என்பது நாம் அறியவேண்டுவது. அவர்கள் காலத்தில் அவர்களைப் போன்ற அவர்களினும் பன்மடங்கு சிறப்புடைய மடாதிபதிகள் அனைவரும் அவர்களுடைய தொடர்பு வேண்டும் என்று கருதும்படி வாழ்ந்து காட்டின ஒரு பெரியவர்களாய் விளங்கினார்கள்.

போதகாசிரியர்:— அவர்கள் காலத் திலே உயர்நிலைப் பள்ளி, கல்லூரி மாணவர்களும், இல்லறத்தார் துறவறத் தார்களும், பிரவேச பண்டிதம், பாலபண் டிதம், பண்டிதம் படிக்கும் புலவர் பெரு மக்களும், சமய உண்மைகளைத் தெரிந்து கொள்ளும் ஆர்வமுடைய சந்நியாசிக ளும், வரிசை வரிசையாக இலக்கணம், இலக்கியம், தர்க்கம் சாத்திரம், புராணம் காவியம் இவற்றை முறையாகப் பாடம் கேட்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சி யாக விளங்கும். மடத்திலேயேபாடசாலை அமைத்து, சமய உண்மைகளோடுகூட மொழி அறிவையும் வளர்த்து, வார வழி பாடு, கூட்டு வழிபாடுகளைக் குழந்தை களுக்குக் கற்பித்து, அதனைத் தன்னிடம் பயின்ற மாணவர்களைக் கொண்டே நடத்தி வந்தார்கள். அப்பாடசாலை இன் றும் சிறு அளவில் நடந்துவருகிறது.

ஒரு மடாதிபதியாய் இருப்பவர் தாமே பாடம் சொல்லியும், தாமே பிரச் சாரம் செய்தும், தாமே ஆசிரியனாய், தீட்சை முதலியன செய்தும் வாழ்ந்து காட்டிய பிற்காலப் பெரியவர்களில் ஞானியாரடிகளைத் தவிர வேறுயாரையும் சொல்லமுடியாது. அடிகள் அங்கலிங்கம் தரித்து வீர சைவர்களாய் விளங்கின போதும் சைவசித்தாந்தப் பிடிப்புடை யவர்கள். சைவசித்தாந்த சமாஜம் அவர் களால் தோன்றி வளர்ந்ததென்பது நாடறியும்.

தமிழ்நாட்டில் அவர்கள் எழுந்தரு ளித் தலைமை தாங்கிச் சிறப்புச் செய்யாத பெரிய சமய சபைகளோ, மொழிக்கழகங் களோ அக்காலத்தில் இல்லை என்றே சொல்லலாம். நம்முடைய இந்துமதாபி மானசங்கமும் அவர்களுடைய தலைமைப் பேச்சைப் பெற்றுச் சிறப்புப் பெற்ற சங் கங்களுள் தலை சிறந்த ஒன்றாகும்.

உரையாசிரியர்:— அடிகள் பல நூல் களுக்கு உரை சொல்லுவார்கள். தொல் காப்பியம், நன்னூல்போன்ற இலக்கணங் களுக்கும், சங்க இலக்கியங்களுக்கும், இதிகாச, புராண காவியங்களுக்கும்

உரை வகுக்கும் போது புதிய திட்ப நுட்பங்கள் விளங்கும்படி இருக்கும். திருப்போரூர் சந்நிதி முறைக்கு அடிகளார் கொடுத்துள்ள குறிப்புரை ஒன்றே போதுமானது.

நூலாசிரியர்: அடிகளார் பல நூல்களைச் செய்திலராயினும், தாம் வழிபடு கடவுளாகிய முருகப் பெருமானைக் குருவாக வைத்து, "சிவ சண்முக ஞான தேசிக மாலை" என்ற பெயரோடு ஆசிரிய விருத்தப்பாவினுல் ஒரு நூல் இயற்றி உள்ளார்கள். அந்நூல்இலக்கிய நயமும், சாத்திரக் கருத்துக்களும், அன்பின் நெகிழ்ச்சியும் உடையதாய் அடிகளாருடைய வாழ்க்கையின் குறிக்கோளை விளக்கிக்கொண்டு நிற்கிறது.

இறுதியாக, அடிகளாரைப் பற்றித் தமிழ் உலகம் இருபதாவது நூற்ருண்டு முற்பகுதியில் வாழ்ந்த, ஒரு உயர்ந்த பேச்சாளர் என்றேதான் அறிந்திருக்கிறது. அடிகள் சிவத்தலங்களைத் தரிசிப்பது என்ற குறிக்கோளோடு, நாடு முழுதும் சிவிகை ஊர்ந்து, நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தர் நாவுக்கரசரைப் போல, நாளும் இன்னிசையால் தமிழொடு சமயம் பரப்பி, சமயத் தொண்டும், மொழித் தொண்டும் செய்த சமயத் தொண்டர்களையும், மொழித் தொண்டர்களையும் வழிவழியாக வாழும்படிச் செய்த ஒரு நல்லார், பெரியார் என்றும் அறிந்து மகிழ வேண்டும். அவர்களிடம் பயின்ற மாணவர்களில் மணம்பூண்டி ம. ராகுமாரசாமிப் பிள்ளை அவர்களையும் தமிழுலகம் நன்கறியும். இன்றும் வாழ்கின்ற காஞ்சீபுரம் சிவகாமி தேசிகர், க. வச்சிரவேல் முதலியார், எளியேனைப் போன்றவர்களையும் தமிழுலகமும், சமய உலகமும் அறிந்துதான் இருக்கிறது. அடிகளாருடைய வாழ்வு, மொழி உலகுக்கும், சமய உலகுக்கும் வழிவழி நின்று வளர்ந்தோங்குகிறது. வளர்ந்து ஓங்கும் என்று கூறி அடிகளாருடைய திருவடிகளுக்கு வணக்கம் செலுத்தி அமைகிறேன்.

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன்
திருவடி வாழ்க!



ஈசானசிவாச்சாரியார்

## ஈசான சிவாச் சாரியார்

'தமிழ்க்கடல்',
'சிவமணி'
'சிவம் பெருக்கும் சீலர்'
ராய. சொ.



ராய. சொ.

சிவக்கடலில் திளைத்திடுவார்;
செய்யதிரு ஐந்தெழுத்தே
திகழும் நாவார்;
சுவைத்தமிழும், வடமொழியும்
தய்த்துணர்ந்தார்; வெண்ணீறு
துதைந்த மெய்யார்;
தவத்துஉயர்ந்தார்; தண்ணளியார்;
சிவபூசைக்கு உறுதுணையார்;
தன்னேர் இல்லார்;
பவக்கடல்நின்று எமைஏற்றும்
ஈசான குருபாதம்
பணிந்து வாழ்வாம்.

ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் சைவ உலகத்தில் பெரும் புகழ் பெற்று விளங்கினர்கள். தமிழ்நாடு முழுதும் மிகப் பல அன்பர்கட்குச் சிவபூசை எழுந்தருளுவித்துச் சிறப்புப் பெற்றுர் கள். அவர்களை ஞானகுருவாக ஏற்ற அறிஞா பலர். ஞாசிரிய நிலைக்குத் தகுதி பெற்றவர், அவர்களைவிட வேறு எவருமிலர் என்று சொல்லுதல் மிகை யாகாது.

சிவாச்சாரியார் சிறந்த சிவவேடப் பொலிவு உடையவர்கள். அதற்கு ஏற்ற உள்ளமும் பெற்று விளங்கினுர்கள். "தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியும், தாழ்வடமும், நாயகன் சேவடி தைவருசிந்தையும்" என்று சேக்கிழார் அடிகள் அப்பர் பெருமானை அலங்கரிப் பார். அது சிவாச்சாரியாருக்குச் சாலவும் பொருந்துவதாகும்.

சிவாச்சாரியார் வடமொழியும், தென்தமிழும் நன்கு பயின்றவர்; சிவாகம நூற்கு எல்லை கண்டவர்; சீலத்தில் நிகரற்றவர்; பண்பாட்டின் சிகரம்; எவரும் நோகப்பேசி அறியார்; திரு முறைகட்கு உள்ளத்தைப் பறி கொடுத் தவர்; சிறப்பாகப் பெரியபுராணத்தில் மிக்க ஈடுபாடுடையவர்; சித்தாந்த சாத் திரங்களை நன்கு கற்றுத் தெளிந்தவர்; அப்பர் சுவாமிகளிடம் தீராத காதல் கொண்டவர்; தம் பிள்ளைகட்குத் திருநா வுக்கரசு, அருள்நந்தி, மெய்கண்டான் எனப்பெயர் சூட்டி மகிழ்ந்தவர்; அழுத்த மானசைவப்பற்றுஉடையவர்;நாயன்மார் களிடம் பெருமதிப்புக் கொண்டவர்.

பேயன்ன புறச்சமயப் பிணக்குநூல்
வழியனைத்தும் பிழையே அன்றி,
வாய்அன்மை தெளிந்து,சைவ சித்தாந்த
வழிதேறி, அதீத வாழ்வில்
போய்அண்மி, அஞ்செழுத்தும் திருநீறும்
கண்டிகையும் பொருளாக் கொண்ட
நாயன்மார்திருக்கூட்டம்பணிந்து
இறைஞ்சும்
பெரும்பேறு நான்பெற் றேனுல்.

என்ற பாடலைச் சொல்லித்தான் சொற் பொழிவைத் தொடங்குவார்.

அப்பெரியாரோடு நம் சங்கம் தொடர்புடையதுஎன்ற செய்தி பெருமை தரத்தக்கது. சங்கம் எனக்கு நடாத்திய மணிவிழாவில் சிவாச்சாரிய சுவாமிகள் தலைமை தாங்கி என்னைப் பெருமைப் படுத்தி, 'தமிழ்க்கடல்' என்ற பட்டத்தை அவர்கள் சூட்டியதை நான் என்றும் மறக்குமாறு இல்லை. மணிவிழாத்தவிர, சங்கத்தின் மற்றொரு ஆண்டு விழாவில் சிவாச்சாரியார் தலைமை தாங்கி அருளி னர்கள்.

நான் இன்று சிவபூசை செய்து சிறப்பு உறுகின்றேன் என்றால் அதற்குக் காரணர் சிவாச்சாரிய சுவாமிகளே. இவர்களைப்போன்ற பெரும் தகுதி யுடைய குரு இல்லை என்றால் நான் சிவபூசையைப் பற்றிச் சிந்திக்கவே போவதில்லை. என்பொருட்டு, இறைவ னுக்கு ஏற்ற தனிப்பதி என மணிவாசகப் பெருமான் பாராட்டியருளிய உத்தர கோசமங்கைக்கு எழுந்தருளி, சிவபெரு மானுக்கு உற்றநாள் எனக் கருதத்தக் கதும், திருஞானசம்பந்தப் பெருமானைப் பெற்றுச் சிறந்ததும், கூத்தப்பெருமான் அபிடேகம் கொள்ளும் நாட்களில் சிறந் ததுமான மார்கழிமாதத்துத் திருவாதிரை நாளில் எனக்குத் திருஐந்தெழுத்தை ஓதி,சிவபூசை வாழ்வளித்த வள்ளலாகிய ஞானத்தந்தை ஈசான சிவாச்சாரியா ருக்கு வணக்கம் செலுத்துகின்றேன்.

மேலும், இவ்வமயம் என் பூசைக்குக் காரணராக இருந்த இரண்டு பேரன்பர் களை நான் மறக்க முடியாது. அவ்விரு வரின் தூண்டுதல்தான் என்னைச் சிவ பூசைச் செல்வனாக ஆக்கியது. ஒருவர், என் பெயரர் என நான் அன் புடன் அழைக்கும் முத்த வெ. சொக் கலிங்கனார். இன்னொருவர் என்னிடம் பெருமதிப்புக்கொண்ட தமிழ் வள்ளல் சேவு. மெ. மெய்யப்பனார். இவ்விருவரும் அண்மையில் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்து விட்டனர். 'இறைவ னார் திருவருளைத் தடுப்பார் யாரே?' முத்த வெ. சொ. சிவபதவி அடைந்த ஞான்று நான் பாடிய பாடல்களில் ஒன்றைக் கீழேதருகின்றேன். அப்பாடல் இரண்டு அன்பருக்குமே முழுதும் ஒத்தி ருக்கின்றது.

பாடல்பெறு கோயில்எலாம் பரவிவிட்டேம்;
கயிலையையும் பணிவேம் என்றே
ஓடி,இம வான்பயந்த உமையவளோடு
உடன் உறையும் ஒப்பில் ஈசன்
தேடரிய திருவடியே வீடருளும்
எனநொடியில் தெளிந்தே, ஐயா!
கூடொழித்துச் சிவலோகம் கூடினையே!
கும்பிட்ட பயன்கண் டாயே.

சிவாச்சாரிய சுவாமிகள் சிவபூசை யின் சிறப்பைப் பேசக் கேட்கும்போதே உள்ளம் உருகி விடுவார். குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தில் கம்பர் பேசிய வாலியின் சிவபூசையைப் பற்றி நான் விரிவுரையாற்றியபோது, அந்தச் சிவ பூசைத் தவச் செல்வர் கண்ணீர் உகுத்த காட்சி என் மனக் கண்ணில் தோன்றிக்கொண்டேயிருக்கிறது.

செல்கதிக்கு வழியாவார்;
செம்மேனி வெண்ணீற்றர்;
சிவாக மத்தின்
எல்லையெலாம் கண்டுணர்ந்தார்;
கண்டிகையார்; அஞ்செழுத்தே
இசைக்கும் நாவார்;
தில்லையிலே ஆடுகின்ற
சேவடியே தைவருநல்
நெஞ்சர்; சீர்சால்
நல்லறிஞர்; எமையாளும்
ஈசான ஞானகுரு
நளினம் போற்றி!


சொக்கலிங்க ஐயா

# சொக்கலிங்க ஐயா

ராம. திருநாவுக்கரசு செட்டியார்


ராம. திருநாவுக்கரசு செட்டியார்

ஐயா அவர்கள் நமது இந்து மதாபிமான சங்கத் தொடக்க முதல் சங்க ஸ்தாபகர்களாகிய ஸ்ரீ சொ. முருகப்பா, தமிழ்க்கடல், சிவமணி ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் முதலாய அன்பர்களிடம் பேரபிமானம் கொண்டு, அவர்களுடைய சீர்திருத்தக் கொள்கைகளைப் பாராட்டி, அடிக்கடி அவர்களைச் சந்திக்கும் போதெல்லாம் பல அறிவுரைகளைப் போதித்து வந்திருக்கிருர்கள். சுப்பிரமணிய பாரதியார் முதலிய பெரியோர்களால் பாராட்டப் பெற்று, பெரிய ஸ்தாபனமாக விளங்கி, ஐம்பது ஆண்டுகளைக் கடந்து பொன் விழாக் கொண்டாடும் நிலையில் சங்கம் வளர்ந்திருக்கிறது.

இந்தப் பொன்விழா மலரில் ஐயா அவர்களைப்பற்றி எழுதும்படி எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தமைக்குப் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். ஐயா அவர்கள் எனது தந்தையாரின் ஆசிரியராகவும் சிநேகிதராகவும் இருந்தார்கள். என் தந்தையார் பேரன்பின் காரணமாக என்னை எனது பதினன்காம் வயதில் ஐயா அவர்களிடத்திலே பாடம் கற்றுக் கொள்ளும்படி கொண்டுவந்து விட்டார்கள். ஐயா அவர்களிடத்தில் அப்பொழுது நானும், ஐயா அவர்கள் மகன் திரு. ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியார் அவர்களும் ஒன்ருகச்சேர்ந்து பாடம் படிக்கத் தொடங்கினேம். சுமார் இரண்டாண்டு வரை ஆரம்பப் பாடம் முதல் இலக்கியம் இலக்கணம் முதலாய பாடங்களை முறையாகப் பயின்றபின், நான் கோனுபட்டுக் கற்பக விநாயக கலாசாலையில் இரண்டாண்டுகள் தமிழ்ப் படித்தேன். பிறகு ஐந்தாறு மாதகாலம் திருப்பெருமணநல்லூர் என்ற ஆச்சாபுரத்தில் ஐயா அவர்களுடன் இருந்து திருவிளையாடல் முதலிய புராணங்கள் பாடம் கேட்டுப் படித்தேன். பிறகு, எனது மதிப்பிற்குரிய பெரியாரும் எனது அத்தை மகனுமான திரு ராய. சொக்கலிங்க அத்தானுடன், தமிழ்ப் பண்டிதர் சு. சிதம்பர பாரதி அவர்களிடம் தமிழ் இலக்கிய பாடங்கள் படித்தேன்.

ஐயா அவர்கள் இளமைப் பருவத்தில் யாழ்ப்பாணத்துக்குத் தங்கள் தொழில் நிமித்தமாகச் சென்றிருந்த பொழுது, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்களிடமும், அன்னுர் மருகரும், மாணுக்கருமாகிய பொன்னம்பலப் பிள்ளை அவர்களிடமும் தமிழ் இலக்கண இலக்கிய பாடங்கள் கேட்டும், அதன்பின் தேவகோட்டை வன்தொண்டச் செட்டியார் அவர்க

ளிடமும் என் தாயாரின் பாட்டனுரான காரைக்குடி, சாலைக்கரையார் வீட்டில் அவதரித்து, மதுரை எல்லை கடவா விரதம் பூண்டு தமது வாழ்நாள் முழுமையும் மதுரையிலே சிவத்தொண்டு செய்து கொண்டிருந்த தவத்திரு மெய்யப்ப ஸ்வாமிகளிடமும் தமிழ் இலக்கண இலக்கியங்களும், புராணங்களும், சைவ சித்தாந்த சாத்திரங்களும் முறையாகப் பயின்று தமிழ்ப் பேரறிஞராயும் சைவ சித்தாந்த சாத்திர வல்லுநராயும் திகழ்ந்தார்கள்.

ஐயா அவர்கள் இளமையில் யாழ்ப்பாணம் போயிருந்த காலத்தில் சமய தீட்சை, விசேட தீட்சைகள் பெற்றும் அதன் பிறகு திருப்பெருமண நல்லூர் என்னும் ஆச்சாபுரத்தில் வசிக்கும் பொழுது சிவபூசையும பெற்றுக்கொண்டார்கள்.

ஐயா அவர்கள் காரைக்குடி அறுபத்து மூவர் குருபூஜை மடத்தில் நீண்டநாளிருந்து தினந்தோறும் தவருது சிவபூசை செய்து, ஒரே வேளை பகலுணவு உண்டு, சற்று இளைப்பாறிய பின் தம்மிடம் பாடம்கேட்க வந்திருக்கும் மாணுக்கர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பார்கள்.

ஐயா அவர்கள் பாடம் சொல்லிக் கொடுக்கும் தன்மையில், மாணுக்கரிடம் பொருள் விருப்பம் சிறிதுமின்றி மிக உயர்ந்த முறையில் தமிழ் ஆரம்பக் கல்வி முதல், இலக்கணம், இலக்கியம், புராணம், சைவ சித்தாந்த சாத்திரம் வரை சலியாமல் முகமலர்ச்சியோடிருந்து விளக்கமாய்ப் பாடம சொல்லுவார்கள்.

ஐயா அவர்கள் பெரிய புராணம் பாடம் சொல்லும் போது பார்த்தால் மிக உணர்ச்சியோடும் சிவ பரத்துவம் ததும்பக் கேட்போர் பரவசப்படும்படியும் இருக்கும். ஐயா அவர்களிடம் பாடம் கேட்டுக் கொண்டவர்கள், தமிழ்ப் பண்டிதர்களாகவும், சிவபூசைச் செல்வர்களாகவும் சிறப்புற்றிருக்கின்றனர். ஐயா அவர்கள், பல ஸ்தல புராணங்கள் அந்தாதிகள், மான்மியம், பதிகம் முதலிய 108 நூல்கள் பாடியிருக்கின்ருர்கள். அவர்கள், திருநீறு உருத்திராக்கத் தாரணராய் சிவவேடப் பொலிவோடு கம்பீரமாக இருந்து, கடல் மடை திறந்தாற்போல எவ்வளவு நேரமானுலும் கேட்போருக்குச் சலிப்பு ஏற்படாவண்ணம் சொற்பொழிவு செய்வார்கள். சிவத்திரு முத்த. வெ. சொக்கலிங்கன் செட்டியாரின் தந்தையாரான வெள்ளையன் செட்டியார் அவர்களுடன் முயன்று, நமது ஐயா அவர்கள் காரைக்குடி ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர் வித்தியாசாலை ஸ்தாபித்து அதில் தமிழே பிரதானமான மொழியாக வைக்கும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். இப்போது அதே வித்தியாசாலை கால தேச வர்த்தமானங்களை முன்னிட்டு ஆங்கில உயர்நிலைப் பள்ளியாக நடைபெற்று வருகின்றது.

ஐயா அவர்கள் ஆச்சாபுரத்தில் அறுபத்துமூவர் குருபூசை மடமும் தேவாரப் பாடசாலையும் வைத்து நடத்தி வந்தார்கள். சிவநேசத் திருக்கூட்டம் என்ற சங்கம் ஒன்றைத் தோற்றுவித்து அதன் தலைவராகவுமிருந்து மாதந் தோறும் உயர்ந்த சொற்பொழிவுகள் நிகழ்த்திச் சைவ சமயத்தை வளர்த்து வந்தார்கள். சிதம்பரத்தில் மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை ஏற்படுத்தி, கட்டிடம் முதலியன கட்டுவித்து, அது என்றும் நடைபெற்று வருவதற்கு வேண்டிய மூலதனப் பெருக்கமும் ஏற்படுத்தி யிருக்கின்ருர்கள்.

மேலும் அவர்கள், தமக்குத் தெரிந்தவர்களிடத்திலும்சிவநேசசெல்வர்களிடத்திலும் அவரவர் தகுதிக்குத் தகுந்தபடி

இன்னின்ன சிவதருமங்கள் செய்யுங்களென்று இதமாகச் சொல்லிச் செய்வித்த சிவாலயத் திருப்பணிகளும், அறுபத்து மூவர் குருபூசை மடங்களும், வேதசிவாகமபாடசாலைகளும், தேவாரப் பாடசாலைகளும், திருநந்தனவனங்களும் ஆகிய சிவதருமங்கள் ஏராளமாக உள்ளன.

காரைக்குடியில், ஐயா என்றால்...... சிவம் பெருக்கும் அறவாழ்வு வாழ்ந்த பெரியார் ராம. சொ. சொக்கலிங்க ஐயாவையே குறிக்கும்.

அந்நாளில் இந்துமத அபிமான சங்கம் கண்ட, "சால உத்தமராம் தன வணிகர் குலத்துதித்த இளைஞர்களின் பெருமதிப்பிற்குரியராக வாழ்ந்த சொக்கலிங்க ஐயா" அவர்கள் ஐம்பதாண்டு நிரம்பிய சங்கப்பொன்விழா மலரில் இடம் பெறுவது பொருத்தமே!





கவிமணி

# கவிமணி

எஸ். மகராஜன்



எஸ். மகராஜன்

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்களைத் திருநெல்வேலியில் சந்தித்தேன். அப்பொழுது அவர்கள் கல்வெட்டு ஆராய்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்து, "கல்வெட்டு ஆராய்ச்சிக்கு எத்தனையோ பேர் தமிழ்நாட்டில் இருக்கிறார்கள். தாங்களோ அபூர்வப் பிறவி; கவி எழுதுவதற்காகவே பிறவி எடுத்திருக்கிறீர்கள்; ஆகையால், கல்வெட்டு ஆராய்ச்சியையெல்லாம் சற்று ஒதுக்கிவைத்துவிட்டு, தாங்கள் அடிக்கடி கவி எழுதவேண்டும்; கவி எழுதித் தமிழுக்கு உதவ வேண்டும்" என்று விண்ணப்பம் செய்து கொண்டேன். இதைக் கேட்டுக்கொண்டிருந்த கவிஞர் சரேல் என்று சிரித்துவிட்டார்கள். பிறகு, அவர்களுக்கே உரிய பரிவோடும் இரக்கத்தோடும் என்னைப் பார்த்து, "நீரிழிவு நோய் என்னைக் கொஞ்சகாலமாக அல்லற் படுத்தி வருகிறது. ஒரு வெண்பாவை நான் எழுதி முடிப்பதற்குள், நீரில் இனிப்பு மிகுந்துவிடுகிறது. ஆகவேதான், கவி எழுதும் தொழிலை நான் மட்டுப் படுத்திக்கொண்டிருக்கிறேன்" என்று சொன்னார்கள். அப்பொழுதுதான் தெரிந்தது, உண்மையான, உணர்ச்சிமிக்க கவி ஒன்று நமக்குக்கிடைக்க வேண்டுமென்றால், கவிஞன் தன் உடம்பையும் உயிரையுமே பிழிந்து அதில் கொட்ட வேண்டியிருக்கிறது என்று.

சிலந்திப் பூச்சி தனக்கு வீடு கட்டுகிறது என்றால், கடைக்குப்போய்ச் சுண்ணாம்பும் செங்கல்லும் வாங்கியா வீடு கட்டுகிறது! தன உடம்பினுள்ளிருந்து ஒரு பிசினைப் பிதுக்குகிறது; அதைக்கொண்டு குறுக்கும் நெடுக்குமாக ஒரு அற்புத வலையைப் பின்னுகிறது. பசுவின் பால் நமக்குச் சுவையாக இருக்கிறது. ஆனால் தன் இரத்தத்திலிருந்தல்லவா பாலைப் பசு நமக்கு உற்பத்தி செய்து கொடுக்கிறது. அதைப்போலவே நமக்கு ஆனந்தம் கொடுப்பதற்காகக் கவிஞன் தன் உடல் சத்தையும் உயிர்ச் சத்தையுமே தன் கவிதையில் பெய்து வைக்கிறான்.

கவியென்பது பலசரக்குக் கடையில் வாங்கக் கூடிய பொருளல்ல; சப்பாத்திக் கள்ளியில் படரக்கூடிய பொருளுமல்ல. இதைக் கருத்தில்கொண்டே போதெலெயர் (Baudelaire) என்ற ஃப்ரெஞ்ச் கவிசொன்னார்:– "ஒரு உருவமற்ற கருத்துக்குக் கலையுருவம் கொடுப்பதற்குள்

கலைஞன் உடம்பையும் உள்ளத்தையும் வருத்தி வேலை வாங்க வேண்டியிருக்கிறது'' என்று.

ஆனால், கவியை அல்லது கலையைத் துய்க்கும் ரஸிகனுக்குக் கிடைப்பதெல்லாம் கலப்படமில்லாத ஆனந்தம். வேதனை என்பது அவன் ஏட்டிலேயே கிடையாது.

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களுக்கும், கவிமணியைப் போலவே, நீரிழிவுநோய் இருக்கத்தான் செய்தது. ஆனால் அவர்கள் கவியையனுபவிக்கத் தொடங்கிவிட்டால் அவர்களைப் பற்றியிருந்த நோய்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தோடிவிடும். ஒருநாள் அவர்களுக்குக் கடுமையான காய்ச்சல் அடித்துக்கொண்டிருந்த போது, அவர்களைப் பார்க்கக் குற்றாலம் போயிருந்தேன். என்னைக் கண்டதும் அவர்கள் படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்து கொண்டார்கள். நாக்கிலே தெர்மா மீட்டரை வைத்துப் பார்த்தேன்; 103 டிக்ரி இருந்தது. "உடம்பை அலட்டிக்கொள்ள வேண்டாம். நன்றாக ஒய்வு எடுத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி மெல்ல நழுவப் பார்த்தேன்; ஆனால், அவர்கள் விடுவதாக இல்லை. ‘‘கவியை அனுபவிக்கும்போது நான் என்னை மறந்துவிடுகிறேன். நோயும் என்னை மறந்துவிடுகிறது. உங்களோடு சேர்ந்து அனுபவிக்கும்போது கவிதை எனக்கு ஒரு டானிக்காகவே இருக்கிறது. ஆகையால், இருங்கள், ஒருபாடலைக் கேளுங்கள்'' என்று சொல்லி, தேசிக விநாயகம்பிள்ளையவர்களுடைய கவி ஒன்றை எடுத்துப் பாடினார்கள். பாட்டைப் பாடப்பாட அவர்கள் முகத்திலே ஒரு பொலிவு தோன்றியது. சோர்வு பறந்தோடிவிட்டது.

நீக்கப் பநியுடையான் சிற்றம் பலந்தன்னில்
அத்தும் பகுர்நின் றுடிநின்றன்-அல்லைக்கண்
அண்ணா மலைமன் அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு களித்து.

என்ற பாடலை விளக்கினார்கள். அண்ணா ஆ ஆ ஆ மலைமன் என்ற வாய்நிறைந்த சொல்லை எப்படிக் கவிஞர் அனுபவித்துவிட்டார், பாருங்கள், என்று சொல்லிப் பலமுறை பாடலை ஆர்வத்தோடு பாடிக்காட்டினார்கள் பாடலுக்கு விளக்கம் ஒரு மணிநேரம் கிடைத்தது. விளக்கம் முடிந்ததும், காய்ச்சலைப் பற்றிய நினைவு எனக்கு வந்தது. மறுபடியும் தெர்மாமீட்டரை எடுத்து அவர்களுடைய நாக்கடியில் வைத்துப்பார்த்தேன். 98.45டிக்ரிக்கு இறங்கிவிட்டது சூடு.

ஒத்த உணர்ச்சியோடு டி. கே. சி.யைப் போல் அனுபவிக்கக் கூடிய ரஸிகனுக்காகவே தவங்கிடக்கிறான் கவிஞன். அப்படி ஒரு ரஸிகன் கிடைப்பதற்குப் பல நூற்றாண்டுகள் ஆகலாம். கம்பனைப் போன்ற ஒரு ரஸிகன் கிடைப்பதற்கு வள்ளுவர் எழு நூறு ஆண்டுகள் காத்திருந்தார். டி. கே சி. யைப்போன்ற ஒரு ரஸிகன் கிடைப்பதற்குக் கம்பன் ஆயிரம் ஆண்டுகள் காத்திருக்க வேண்டியிருந்தது. ஆனால், கவிமணிக்கு ஏற்பட்ட அதிர்ஷ்டம் என்னவென்றால், தம் வாழ்நாளிலேயே அத்தகைய ரஸிகனைப் பெற்று அந்த ரஸிகனோடு நெருங்கி உறவாடும் வாய்ப்பையும் பெற்றார்கள். இவ்வாறு ஒரு ரஸிகன் கிடைத்த மாத்திரத்தில் கவிஞனுக்குப் பிறவிப் பெரும் பயனே கிட்டிவிடுகிறது; படைக்கும் போதுகூட இல்லாத ஆனந்தம், ஸஹிருதயனைப் பெற்றவுடன் கவிஞனுக்குக் கிடைத்துவிடுகிறது. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் நிலைபேற்றை அடைந்து விடுகிறான் அவன்.

1944ல் தென்காசி திருவள்ளுவர் கழகத்தில் கவிமணிக்கு ஒரு பாராட்டு விழா நடந்தது. விழாவுக்குத் தலைமை வகித்தது டி. கே. சி. கவிமணிக்கு ஒரு

பொன்னுடையைப் போர்த்தி, அவர்களை ஏற இறங்கப் பார்த்து அனுபவித்துக் கொண்டே யிருந்தார்கள். டி. கே. சி. பாராட்டுரை "கவிஞரேறே" என்ற சொல்லோடு தொடங்கியது. ரே றே என்றஒலிகளில் ஒருஅழுத்தம் கொடுத்து கவிஞரோடு தமக்கிருக்கும் தோழமையை ரஸிகமணி வெளியிட்டார்கள். பிறகு கவி மணியின் பாடல்களைப் பாடிக்காட் டினார்கள். கவிஞருடைய இதயத்தோடு ஒட்டிப்பாடலோடு கரைந்துவிட்டார்கள். பேசியது டி. கே. சியா கவிமணியா என்று தெரியாத வகையில் உணர்ச்சி வசப்பட்டுப் பேசிமுடித்தார்கள்.

பாராட்டுரையைக்கேட்டுக் கொண் டிருந்த கவிமணி அப்படியே உருகிவிட் டார்கள். "என்னைப் போன்ற கவிஞ னுக்கு உயிர் மூச்சைக் கொடுப்பது பாராட்டுத்தான். ஏதோ, எத்தனையோ கவிக் குழந்தைகளை நான் பெற்றுப் போட்டுவிட்டேன். அவைகளின் அருமை எனக்குத் தெரியாமலிருந்தது. ஆனால், டி. கே. சி. அந்தக் குழந்தைகளை யெடுத் துக் குளிப்பாட்டி, உச்சிமோந்து, தலை சீவி, பொட்டிட்டு, முத்தமிட்டுக் கொஞ்சிக் குலாவும்போதுதான், நான்பெற்றபிள்ளை களுக்கும் இவ்வளவு அழகிருக்கிறதா என்று உணர்ந்தேன்" என்று சொல்லி வியப்பும் களிப்பும் அடைந்தார்கள் கவிமணி.

நல்லதொன்றைக் கண்டுவிட்டால் தலைமேல் வைத்துக் கூத்தாடும் வஞ்சக மற்ற குழந்தையுள்ளம் படைத்தவர்கள் டி. கே. சி. "கன்னரைக் காண்பதற்கு ஒரு கவிஞர் நமக்குக் கிடைத்துவிட்டார்" என்று கவிமணியைப்பற்றி ஊர் ஊராய்ப் பிரச்சாரம் செய்தார்கள் டி. கே. சி. பாலசரஸ்வதியின் அற்புதமான அபி நயக்கலையையும் வியந்து வியந்து பாராட்டி உலகெலாமறியச் செய்தார்கள். இவ்விரண்டு கலைஞர்களையும் கண்டெடுத் தவர்கள் டி. கே. சி. என்று சொல்ல வேண்டும்.

இந்த அபூர்வமான சீலத்தை உட னிருந்து உணர்ந்து அனுபவித்த கவி மணி பாடினார்கள்:—

"என்னருமை நண்பா! இனிய கலைரசிகா!
தென்னன் தமிழ்வளர்த்த தேசிகா! நன்னயச்
சீலம் சிறந்த சிதம்பர நாதவள்ளால்
சாலநீ வாழ்க தழைத்து"

என்ற மேற்கண்ட வெண்பாவிலிருக்கும் எளிமையும், அருமைப்பாடும், நன்றி யுணர்வும், நிறைவும் அபூர்வமானவை. பாடலை எழுதிய கவிமணியும் பாட்டுடைத் தலைவரான ரஸிகமணியும் மறைந்து விட்டார்கள். ஆனால் கவிஞனுக்கும் ரஸி கனுக்கும் இருந்த, இருக்கவேண்டிய ஆனந்தப் பேருறவை, பாடல் என் றென்றும் உணர்த்திக் கொண்டு நிற்கும்.



# இரசிகமணி டி. கே. சி.

திரு. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார்



டி. கே. சி.

குழந்தையன் செட்டியார்

நமது இந்து மதாபிமான சங்கப் பொன்விழா மலரில் நம்மோடு நெருங்கிப் பழகி, தென்றல் வீசும் குற்றாலத்தில் இருந்து தமிழ் வளர்த்த இரசிகமணி டி. கே. சி. அவர்களைப்பற்றி நான் ஒரு கட்டுரை எழுதவேண்டும் என்பது என் அருமைத் தந்தையார் தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களின் கட்டளை. தமிழ்க் கடல் அவர்களையும் நம் சங்கத்தையும் பிரித்துக் கூறுவ தென்பது இயலாத காரியம். தந்தையார் அவர்கள் தன் மகளை அவையத்து முந்தி இருக்கச் செய்யவேண்டும் என்ற ஆசையால் இந்தப்பணியை எனக்கு இட்டிருக்கலாம். ஆனால் அறிஞர்கள் பலர் இம் மலரில் கட்டுரை எழுதும்போது, இடையே எனது கட்டுரை, கழுவாத காலைப் படுக்கையில் வைத்த மாதிரி எனது பேதைமையைப் பளிச்சென்று எடுத்துக்காட்டி விடுமோ என்ற ஐயப் பாடு எனக்கு எற்படுகிறது. ஆயினும் குற்றாலத்து முனிவர், முறைப்படி தமிழ் படிக்காத தமிழ் இரசிகர்களிடம் மாறாத அன்பு கொண்டவர்கள்; அவர்களை முன்னணிக்குக் கொண்டுவர வேண்டும் என்ற ஆவலும் உள்ளவர்கள். அவர்களை மனத்தில் நினைத்து அவர்களைப் பற்றிய எனது முதல் கட்டுரையைத் தொடங்கு கின்றேன்.

ரசிகமணி அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்களில் நானும் ஒருவன். அவர் களின் நல்விருந்தையும், சொல்விருந் தையும் நிறைய அனுபவித்தும் இருக் கிறேன். குற்றாலத்திற்கு, ஓரளவு தமிழில் ஆர்வம் உள்ளவர்கள் யார் சென்றாலும் ரசிகமணி அவர்களைப் பார்க்காமலும் அவர்களிடம் தமிழ்ப் பாடல்கள் கேட்காமலும் அவர்கள் அன்போடு அளிக்கும் அறுசுவை உணவை ரசிக்காமலும் வர இயலாது. அருவியில் சுகமாகக் குளித்து வருபவர் களை அன்போடு ''வாருங்கள்'' "வாருங்கள்" என்று மலர்ந்த முகத் தோடு வரவேற்பார்கள். பருவகாலத்தில் அவர்கள் இல்லத்தில் ஒரு தமிழ்ச் சங்கமே நடக்கும். காலையிலும், மாலை யிலும் தமிழ் மணம் கமழும். யாவரும் புரிந்துகொள்ளும் முறையில் பாடல் களைப்பற்றி ஒரு பெரிய கதையைச் சொல்லிப் பிறகு பாடல்களை அழகாகத் தனக்கே உரிய பாணியில் பன்முறை சொல்லி, அவர்கள் சொல்லும்போதே கேட்போர் மனத்தில் அப் பாடலை நிலை

யாக இருக்கும்படி செய்துவிடுவார்கள் நமது ரசிகமணி அவர்கள். பாடல்களை அனுபவிக்க வேண்டும் என்ற நினைப்பு உள்ளவர்கள் போய் அவர்களுடன் அமர்ந்துவிட்டால் போதும். தமிழ்ப் பாடல்கள் குற்ருலத்து அருவியைப் போல் தங்கு தடையின்றி வந்து கொண்டே இருக்கும். அருவியில் குளித்தால் களைப்புத் தீர்வதுபோல் இவர்கள் பாடல்களில் திளைத்தால் ஒரு மன நிறைவு ஏற்படும். தமிழ்க் கடல் ராய. சொ. அவர்களும் நானும் குற்ருலம் சென்று ரசிகமணி அவர்களுடன் சில தினங்கள் தங்கி, அவர்களையும் அழைத்துக்கொண்டு தமிழ் நாட்டில் உள்ள மடாலயங்கள் சிலவற்றிற்குச் சென்று திரும்பினேம். அப்போது நடந்த நிகழ்ச்சிகள் பற்றியும், ரசிகமணி அவர்கள் கூறிய பாடல்கள் சிலவற்றையும் இக் கட்டுரையில் குறிப்பிட விரும்புகிறேன்.

குற்ருலத்திற்குச் சென்றதும் ரசிகமணி அவர்களைப் பார்த்து எங்கள் வணக்கத்தைத் தெரிவித்துவிட்டு, அருவியில் சுகமாகக் குளித்துப் பசியோடு ரசிகமணி அவர்கள் வீட்டிற்குச் சென்ருேம். உடனே எங்களை அழைத்துக் கொண்டு அடுத்த அறைக்குச் சாப்பிடச் சென்ருர்கள். அங்கு புகழ்ந்து பரிந்து, உபசரித்து "படை", "படை" என்று சொல்லி, நிறைய இலையில் படைப்பார்கள். முப்படையையும் கண்டு அஞ்சாதவர்களும் அவர்கள் "படை" "படை" என்று கூறும்போது அஞ்சத்தான் வேண்டிவரும். சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போதே சாப்பாட்டைப் பற்றிய பாடல்கள் சில கூறுவார்கள். இப்படி வயிற்றிற்கும், செவிக்கும் விருந்து முடிந்து எழக் குறைந்தது ஒருமணி யாவது ஆகும். அன்று சாப்பிடும் போது வந்த இரண்டு பாடல்கள்:

"வெய்தாய் நறுவிதாய்
வேணளவும் தின்பதாய்
நெய்தான் அளவி
நிறம்பசந்தும்-பொய்தான்
அடகென்று சொல்லி
அமுதத்தை இட்டார்
கடகம் செறிந்த
கையார்" 1

"வரகரிசிச் சோறும்
வழுதுணங்காய் வாட்டும்
முரமுரென வேபுளித்த
மோரும்-உரிமையுடன்
புல்வேளூர்ப் பூதன்
புகழ்ந்துபரிந் திட்டஅது
எல்லா உலகும்
பெறும் 2

என்று கூறி, உரிமையோடு புகழ்ந்து பரிந்து, இட்டு உபசரிப்பார்கள். அய்யா அவர்களும் அவர்கள் குடும்பத்தாரும் சாப்பிடுவது வரகு (OATS) அரிசிதான். ஆனல் மற்ற விருந்தினர்களுக்குப் படைப்பது என்னவோ அவர்கள் சொந்த நிலத்தில் விளைந்த உயர்ந்த ரக ஆனைக் கொம்பன் அரிசிதான்.

சில தினங்கள் தங்கியிருந்து காரில் புறப்பட்டுச் சென்ருேம். வழியில் தென்காசிக் கோவில். உள்ளே இராச கோபுரம் வழியே சென்ருேம். இடியால் தாக்குண்டு சேதமுற்ற அக் கோபுர வாயிலில் நிற்கும்போது வருகிறது ஒரு பாடல். அக்கோவிலைக் கட்டிய பாண்டிய மன்னன் கும்பாபிஷேகம் முடிந்ததும் பாடியது அப்பாடல்:

ஆரா யினும்இந்தத் தென்காசி
மேவுபொன் ஆலயத்து
வாராத தோர்குற்றம் வந்தால்அப்
போதங்கு வந்ததனை
நேராக வேதிருத் திபுரப்
பார்களை நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன்
பராக்கிரம பாண்டியனே.

என்பது அப்பாட்டு. இம் மாதிரி பின்னல் நடக்கும் ஒரு நிகழ்ச்சிக்கு முன்னமேயே நன்றி தெரிவிப்பதுதான் இதன் கருத்து எனத் திரும்பத் திரும்ப இதனைக் கூறிச் சீக்கிரம் புதுப்பிக்க வேண்டும். என்ற கருத்தினையும் வலியுறுத்திக் கூறினர்கள். அங்கிருந்து புறப்பட்டோம். வழியில் ஒரு ஜமீந்தாரின் ஊர். அங்கு வந்ததும், வந்தது ஒரு பாட்டு:

கள்ளிக்கேன் முள்வேலி? கழுதைக்கேன்
கடிவாளம்? களிப்பி லாத
உள்ளிக்கேன் பரிமளங்கள்? உவர்நிலத்துக்
கேன்உழவு? ஒடித்துப் போடும்
சுள்ளிக்கேன் கோடாலி? துடைப்பத்துக்
கேன்கவசம்? சும்மா போகும்
பள்ளிக்கேன் அதிவீர மழவரங்க
பூபன்எனும் பட்டந் தானே.

என்று ஹாஸ்யமாகச் சொல்லிக் கூத்தும் கும்மாளமுமாகப் பிரயாண அலுப்பே தெரியாமல் இராயவரம் வந்து சேர்ந்தோம். அங்கு இரு தினங்கள் தங்கினர்கள். எனது சிறு குடிலில் தமிழ் மணம் கமழ்ந்தது.

அய்யா அவர்கள் சாதாரணமாக வழக்கத்தில் இல்லாத பழந்தமிழ்ச்சொற்களை யாராவது உபயோகித்தால் திரும்பத் திரும்ப அதனையே சொல்லிச்சொல்லி ரசிப்பார்கள். ஆகையால் தானே நாம் அவர்களை ரசிகமணி என்கிறோம். நான் என் தாயாரிடம் சாயுங்காலகாப்பிஅனுப்பும்படி கூறினேன் அதற்கு அவர்கள் "சமையல்காரன் ஊருணிக்குப்போயிருக்கிறன்; வந்ததும் அனுப்புகிறேன்" என்றர்கள். உடனே அய்யா அவர்கள் "ஒகோ" "ஒகோ" ஊருணிக்குப் போயிருக்கிறன? "பலே" "பலே" எனக்கூறி ஊருணி என்ற பதத்தைப் பலமுறை திரும்பத் திரும்பச் சொல்லி ரசித்தார்கள். செட்டிமார் நாட்டில்தான் இப்பதம் வழக்கத்தில் உள்ளது என்றும்மற்ற பகுதிகளில் "குளம்" "குட்டை" என்று தான் கூறுவார்கள் எனவும் அன்று முழுவதும் அதைப்பற்றியே பேசி "ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம் பேரறி வாளன் திரு" என்றகுறளையும் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார்கள். சில மணி நேரத்தில் மழை தொடங்கியது. என் தாயார் பணியாளிடம் "கூடல்வாயிலில் அண்டாவை வை; தண்ணீர்நிரம்பட்டும்; பிறகு வீட்டைக் கழுவி விடலாம்" என்கிருர்கள். கூடல்வாய் என்ற பதத்தையும் பன்முறைகூறி மகிழ்ந்தார்கள் அய்யா அவர்கள்.

தன் நெருங்கிய நண்பர்களிடம் தன் மனத்தில் இருப்பதை ஒளிவுமறைவு இன்றிப் பளிச்சென்று கூறி விடுவார்கள். எங்களோடு தங்கியிருக்கும் போது எங்கள் ஜில்லா கலெக்டர், அய்யாஅவர்களைப் பார்க்க வந்தார்கள். அப்போது அவர்கள் தன்மகளை அமெரிக்க நாட்டிற்குக் குடும்பக்கலை பயிலஅனுப்பப்போவதாகக் கூறினர்கள். உடனே டி. கே. சி. அவர்கள் சிறிதும் தயங்காமல இது ஐந்தாம் மாடியில் இருந்து தாவர நூல் ஆராய்சி செய்வதுபோல் இருக்கிறது என்றுர்கள். குடும்பக்கலை கணவனுடன் இருந்து கற்று அனுபவிக்க வேண்டியது அல்லவா? என்றும் கூறினர்கள். இப்படித் தனக்கு வேண்டியவர்களிடம் தான் நினைப்பதை, தயங்காதுகூறிவிடுவார்கள்.

அய்யா அவர்கள் பாடல்களை வெகு அழகாகத் திருத்திவிடுவார்கள். இம் மாதிரித் திருத்தங்களை முறைப்படி தமிழ் கற்ற புலவர்குழாம் ஒத்துக்கொள்வதில்லை. அதைப்பற்றி அய்யா அவர்கள் கவலைப்படுவதும் இல்லை. அழகாகக் கருத்தோடும் சந்தத்தோடும் அமைய வேண்டும் என்பதற்காகவே வரிசையையும் வார்த்தைகளையும் மாற்றிவிடுவார்கள். இராயவரத்தில் ஒரு பாடல்

கூறினார்கள். அதில் பல திருத்தங்கள் செய்துள்ளார்கள்.

ஆழியான் ஆழி;
அரன்மழுததான் என்பான்;
கோழியான் குன்றெறிய
வேலென்பான்; -- ஊழியான்;
அங்கையெழுத் தாணி
அருள்என்பான் மாவண்டூர்ச்
சிங்கன் உலைக்களத்தில் சென்று.

இத் திருத்தங்களுக்குக் காரணம் கூறும்போது மாவண்டூர்ச்சிங்கன் உலைக களத்தில் திருமால், சிவன, முருகன், பிரமன் காத்திருந்தார்கள் எனவும் அவர வர்களின் ஆயுதம் செய்து வாங்கக்காத் திருந்ததாகவும சக்கரம் செய்வது மிகக் கடினம்; அதற்கு அடுத்தது திரிசூலம்; அதற்கு அடுத்தது வேல்; மிகவும எளியது குண டெழுத்தாணி; ஆகையால் அந்த வரிசையில் சீக்கிரம் செய்து கொடுத்து விடலாம் எனக்கூறிக்காத் திருக்கின்றார்கள் என்றுபாடலைத்திருத்தி அமைத்த காரணம் கூறினார்கள். இதே போல் ஆழ்வார் பாசுரம் ஒன்றை வெகு அழகாகத் திருத்தி அமைத்தார்கள்.

"ஒன்றும் மறந்தறியேன்
ஓதநீர் வண்ணனையான்"

என்பது ஆழ்வார் பாடல். இதனை ரசிக மணி அவர்கள்:-

என்றும் மறந்தறியேன்
ஏமநீர் வண்ணனையான்
இன்று மறப்பனோ ஏழைகாள்—அன்று
கருவரங்கத் துட்கிடந்து
கைதொழுதேன் கண்டேன்
திருவரங்கம் மேயான் திசை,

என மிக அற்புதமாகத் திருத்தி யமைத்தார்கள். இப்பாடல் அந்தாதி வரிசையில் உள்ளது. முன்பாடலின் முடிவுக்குச் சரியாக அமையவேண்டு மானால் "ஒன்றும்" என்றுதான் ஆரம் பிக்கவேணடுமென அய்யா அவர்களின் நண்பர் எடுத்துக் கூறியபோது, அவர் கள் அதற்கு 'ஒன்றும் மறந்தறியேன்' என்னபுளியோதரையையாமறக்கவில்லை! கருத்தரித்த நாள் முதல் கைகூப்பித் தலை கீழாகத் தென் திசை நோக்கி வணங்கி வந்த நான், என்றும் உன்னை மறந்தறி யேன் என அமைவது தான் சிறப்பு. தனிப்பாடலாக வேண்டுமானாலும் வைத் துக்கொள்ளுவோம் பாட்டு, கருத்துடன் இப்படியே இருக்கட்டும் என உறுதியாகக் கூறினார்கள். இதேமாதிரி யார் பாடலா யினும் அழகாகக் கருத்துடன்அமைவதற் காக மிகவும் துணிவுடன் யார் குறைகூறு வதையுமே பொருட்படுத்தாது திருத்தி அமைத்து விடுவார்கள்.

தருமபுரம் சென்றோம். அங்கு பெரிய வரவேற்பு. திருக்கடவூரில் ஒருதிருமுறை மகாநாடு. மகாசந்நிதானம் அவர்களும் வந்து கலந்து கொண்டார்கள். காலசம் ஹாரம் செய்த ஊர் அல்லவா அது அங்குக் கற்றைச் செஞ்சடையான் இருக் கும்போது காலனைக்கண்டு ஏன் அஞ்ச வேண்டும எனக் கூறி, கீழ்க்கணட பாடலை எல்லோர் மனத்திலும்பதியும்படி பாடினார்கள்.

இட்டுக் கொள்வன நீர்உள பூஉள
கற்றுக் கொள்வன நீஉள நாஉள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமு-
[ளோம்
எற்றைக் கோநம னால்முனிவு உண்பதே.

என்பது அப்பாடல்.

தருமபுரத்தில் இருந்து திருப்பனந் தாள் மடம் சென்றோம்.தவத்திரு அருள் நந்தித் தம்பிரான் அவர்கள் பிரமாதமாக விருந்து செய்து பெரிய தாட்டெலை போட்டு, வகைக்கறிகள் வைத்துவிருந்து வைத்தார்கள். அந்தமிகப்பெரிய குருத்து இலையைக் கண்டதும் சாப்பிடும்போதே வந்தது ஓர் அழகான பாடல்:

அவனிமுழு தண்டும் அயிரா வதத்துன்
பவனி தொழுவார்ப் படுத்தும்—புவனி
உருத்திரா உன்னுடைய ஒரங்க நாட்டில்
குருத்திரா வாழைக் குழாம்.

திருப்பனந்தாளிலிருந்து ஊர் திரும்பினோம். வழியில் தஞ்சாவூர்ப்பெரிய கோவிலைக் கண்டோம். வானோங்கி நிற்கும் கோபுரம் கண்டதும் வந்தது காதல் பாட்டு.

இல்லென்பார் தாம்அவரை;
யாம்அவர்தம பேரறியோம்;
பல்லென்று செவ்வாம்பல்
முல்லையையும் பாரித்து,
கொல்லென்று காமனையும்
கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனார்என்
நெஞ்சைவிட்டுப் போகாரே.

இப்படி மிக அழகாகத் தமிழ்ப்பாடல்களைச் சிறந்த முறையில் திருத்திஅமைத்துத் தமிழ் உலகுக்குத் தந்த குற்றாலத்து ரசிகமணி நம்மை விட்டுப் பிரிந்து சென்று விட்டார்கள். ஆயினும் அவர்களுடைய பெயரும், புகழும், அவர்கள் தந்த தமிழ்க் கவிகளும், தமிழர்களுடைய நெஞ்சைவிட்டுப் போகவே மாட்டா. இது உறுதி. வாழ்க டி. கே. சி. யின் திருநாமம். வளர்க அன்னாரின் தமிழ்த் தொண்டு.





# பண்டிதமணி
# மு. கதிரேசச் செட்டியார்

லெ. ப. கரு.
இராமநாதன்
செட்டியார்

தமிழ்ப்பேராசிரியர்,
அண்ணாமலைப்
பல்கலைக் கழகம்.



கதிரேசச் செட்டியார்

இராமநாதன் செட்டியார்

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் தொடரினைக் குறிப்பிடாத சொற்பொழிவாளர் எவரும் இலர்; எழுத்தாளரும் இலர். கற்றவரும் மற்றவரும் இத்தொடரினைத் தமிழரின் மறைமொழியாகக் கருதுகின்றனர். இத்தொடர் அமைந்த பாடலினை இயற்றிய புலவர், கணியன் பூங்குன்றனார் என்பவர்; இவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். பூங்குன்றம் என்னும் ஊரினர்; இவ் ஊரே இப்போது மகிபாலன்பட்டி எனப் பெயர் வழங்கப் பெறுகின்றது இரண்டாயிரம் ஆண்டுக் கால வரலாற்றுச் சிறப்புப் பெற்ற இவ் ஊர், மீண்டும் வரலாற்றுப் புகழ் பெற்ற ஊராகத் திகழ்கின்றது. இச் சிறப்பிற்குக் காரணம், இவ் இருபதாம் நூற்றாண்டில் தலைசிறந்த தமிழறிஞராகத் திகழ்ந்த மகாமகோபாத்யாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள், இவ் ஊரில் பிறந்தமையே ஆகும்.

பண்டிதமணி அவர்கள், இம் மகிபாலன்பட்டியில் முத்துக்கருப்பன் செட்டியார் அவர்களுக்கும், அவரது இல்லறத் துணைவியாரான சிவப்பி ஆச்சி அவர்களுக்கும் மகனாக 16—10—1881ல் தோன்றினார்கள். உலகத்தில் வாழும் உயிர்கள் மகிழ ஞாயிறு கடலிலே தோன்றுகின்றது என்பதனை,

> "உலகம் உவப்ப வலனேற்பு திரிதரு
> பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு"

என நக்கீரனார் பாடியுள்ளார். அஞ்ஞாயிறே போலக் கதிரேசனார் அவர்களும் அறிஞர்கள் மனம் மகிழப் பிறந்தார்கள்.

இவர்கள், தம் ஏழாம் ஆண்டில், அக் கால வழக்கத்திற்கு ஏற்பத் திண்ணைப் பள்ளிக்கூடத்திற்குச் சென்றார்கள். ஏழு திங்கள் பயின்றார்கள். ஆத்தி சூடி, உலக நீதி போன்ற சிறு நூல்களைக் கற்றார்கள். அவற்றை மனப் பாடம் செய்துகொண்டார்கள். இந் நூல்கள் தரும் இன்பத்தினைத் துய்த்த இவர்கள், மேலும் பல நூல்களையும் கற்றல் வேண்டும் என எண்ணினார்கள். அதற்கேற்ப அப்போது தமக்குக் கிடைத்த திருத்தொண்டர் புராணம், கம்பராமாயணம் முதலிய நூல்களைக்கற்றார்கள். முன்னைப் பிறப்பின் நற்பயனால் அந் நூல்கள், முன்பே கற்கப்பெற்ற நூல்கள் போன்று

இவர்களுக்குப் பொருள் விளக்கி நின் றன. ஆசிரியர் துணையின்றித் தாமே அவற்றைக் கற்றார்கள்; கற்றதைப் பிறருக்கு எடுத்துச் சொல்லிக் கழிபேரு வகை கொண்டார்கள்.

திரைகடல் ஓடித் திரவியம் தேடுதல் நாட்டுகோட்டை நகரத்தார்களின் சிறப் புத் தொழிலாகும். அத் தொழிலில் பண்டிதமணி அவர்கள், தம பதினொன் ரும் ஆண்டில ஈடுபட்டார்கள்; அதனுல் இலங்கைக்குச் சென்ருர்கள். சென்றபின மூன்று ஆண்டுகளில், இவர்களின் தந் தையார் விண்ணுலக வாழ்வினை அடைந் தார்கள். அதனுல் இவர்கள் தாய் நாட் டிற்கு வந்தார்கள், குடும்பப் பொறுப் பினை ஏற்றுக் கொண்டார்கள், அறிவுத் துறையில் நாட்டம் செலுத்தினூர்கள்; யாருடைய உதவியுமின்றித் தாமாகவே மேலும் பல நூல்களைக் கற்ருர்கள். கருவிலேயே கல்வித் திருவினைப் பெற்ற இவர்கள், கல்வி முற்றக் கற்றவர்களும் பாராட்ட விளங்கினுர்கள்; சோழவந் தான் அரசர் சண்முகனுருடன் நட்புக் கொண்டார்கள். அரசஞ் சண்முகனுர், பண்டிதமணி அவர்களின் கல்வியறிவிற் குப் பெருந் துணையாக இருந்தார்கள். இவ் இருவரது நட்பும் வளர்பிறை போல் வளர்ந்தது.

அந் நாளில் மதுரையில் வித்தியா பானு என்னும் பெயர் உடைய அச்சகம் ஒன்று இருந்தது. அவ் அச்சகத்தின உரிமையாளரான மு. ரா. கந்தசாமிக் கவிராயர் என்பவர் சிறந்த புலவர். இப் புலவருடனும் பண்டிதமணி அவர்கள், அரசஞ் சண்முகனுரின் தொடர்பால் நணபராயினுர்கள். இந் நட்பால் வித்தி யாபானு என்னும் இதழில் இலக்கியக் கட்டுரைகள் பல எழுதினுர்கள். இவற் றைப் படித்த அறிஞர்பெருமக்கள், இவர் களை மிகவும் பாராட்டினர். இக்காலத் தில், புலமை நலம் சிறந்த வெள்ளக்கால், ப. சுப்பிரமணிய முதலியாரின் தொடர்பும் இவர்களுக்கு உண்டாயிற்று.

பண்டிதமணி அவர்களும் இவர்கள் காலததில் செட்டிமார் நாட்டில் செல் வாக்குப் பெற்றிருந்த பீமகவி என்பவ ரும் நண்பர்களாக இருந்தனர். இடையே இருவருக்கும் கருத்து வேறுபாடு ஏற் பட்டது. அதனுல் பீமகவிராயர், பண்டித மணி அவர்களைப் பற்றிப் பல இடஙக ளில் குறைகூறத் தொடங்கினுர். தம் மைப் பற்றிப் பீமகவிராயர் குறை கூறுவ தனைப் பண்டிதமணி அவர்கள் அறிந் தார்கள். அதனுல் பீம கவிராயர் இயற் றிய கீழைச்சிவற்பட்டித் தல புராணம் என்னும் நூலிலும், அவர் நிகழ்த்திய சொற்பொழிவுகளிலும் கண்ட குறை களைத் தொகுத்து, வித்தியாபானுவில் கட்டுரைகளாக வெளியிட்டார்கள். இதனைக் கண்ணுற்ற பீமகவிராயர், வழக்கு மன்றத்தில் பண்டிதமணி அவர் களின்மீது மான நட்ட வழக்குத் தொடுத்தார்.

அப்போது மதுரையில் சிறந்த வழக்குரைஞராக நாவலர், ச. சோம சுந்தர பாரதியார் திகழ்ந்தார்; பண்டித மணி அவர்கள், பாரதியாரையே தம் வழக்குரைஞராகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். இதன் வாயிலாகப் பண்டிதமணி அவர்களுக்கும் பாரதியா ருக்கும் ஏற்பட்ட நட்பானது, பண்டித மணி அவர்களின் இறுதிக் காலம் வரை-நாற்பதாண்டுக் காலம் வரை இடையா றுது நீடித்தது. இந் நட்பின் ஆழத் தினைப் பற்றி 'நாவலர் பாரதியார்' 1941ல் நடைபெற்ற பண்டிதமணி அவர் களது மணி விழாவில், "ஆங்கில மன்றித் தமிழிற் பேசி அறியாத என்னைத் தாய் மொழியில் தமிழர் கூட்டத்தில் பேச வைத்து, அத் துறையில் ஊக்கித் தமக்கு இனியர் குழுவில் என்னையும் சேர்த்து அன்புகாட்டிப் பண்டிதமணி அவர்கள்,

அறிஞர் உலகில் எனக்கும் இடம் தந்தார்கள்" என்று குறிப்பிட்டார்கள்.

பின்னர் மறைமலையடிகள், ஞானியாரடிகள், ரா. இராகவையங்கார் அவர்கள் முதலிய அறிஞர் பெருமக்களுடன் பண்டிதமணி அவர்கள் தொடர்பு கொண்டார்கள். சொற்பெருக்காற்றும் திறம் மிக்க பண்டிதமணி அவர்கள், சொற்பொழிவிற்கு உரிய குறிப்புக்களை ஒழுங்குபடுத்தி எழுதி வைத்துக் கொண்டு, பின்னரே பேசத் தொடங்குவார்கள். இவர்களது சொற்பொழிவில், நகைச்சுவை மிளிரும். தனித்து உரையாடும்போதும் இவர்கள் பேச்சில் அமையும் நகைச்சுவைகளை இன்று நினைத்தாலும் அவை மகிழ்ச்சி தருகின்றன.

தமிழ் இலக்கியங்களைக் கற்றுச் சுவைத்த கதிரேசனர், வடமொழி இலக்கியங்களையும் அறிதல் வேண்டும் என விரும்பினர்கள். அதனல் வட மொழியில் வல்லுநராக விளங்கிய தருவை நாராயண சாஸ்திரியார் என்பவரிடம் ஐந்து ஆண்டுகள் வடமொழி பயின்ருர்கள்; இருமொழிப் புலமையும் பெற்ருர்கள். இவர்களின் வடமொழிப் புலமை கண்டு வியந்த இவர்களின் ஆசிரியரான தருவை நாராயண சாஸ்திரியார், இவர்களுக்கு மாணவரைப் போலப் பிற்காலத்தில் இருந்தார்.

மேலைச் சிவபுரியில் வ. பழ. சா. பழநியப்ப செட்டியார் அவர்கள், தமிழ்ப் புலவர்களிடத்தில் பேரன்புடையவராக விளங்கினர்கள். அவர்களது வண்மையினல், பண்டிதமணி அவர்கள், 13—5—1909ல், மேலைச்சிவபுரியில் சன்மார்க்க சபையை நிறுவினர்கள். ஒவ்வொரு ஆண்டு விழாவிலும் தக்க தமிழறிஞர்களை அழைத்துச் சொற்பெருக்காற்றுவித்துத் தமிழ் மணம் கமழச் செய்து அச் சபையினை வளர்த்து வந்தார்கள். அப் பணியினை அவர்களின் தலையாய மாணவராகிய டாக்டர் திரு. வ. சுப. மாணிக்கம் அவர்கள் தொடர்ந்து நடத்தி வருதல் குறிப்பிடத் தக்கது. இச் சன்மார்க்க சபையினரே கதிரேசனருக்கு 1925ல் பண்டிதமணி என்னும் பட்டத்தினை வழங்கினர்கள். இச்சிறப்புப் பட்டமளிப்பு விழாவிற்கு மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே சாமிநாத ஐயர் அவர்கள் தலைமை தாங்கினர்கள். அப்போது மகாவித்துவான், ரா. இராகவையங்கார் அவர்கள், பண்டிதமணி அவர்களின் புலமைத் திறனைப் புகழ்ந்து பாராட்டினர்கள். அவ்விழாவில் யானும் கலந்துகொண்டேன். அப்போது பண்டிதமணி அவர்கள் கூறிய நன்றியுரை, இன்னும் என் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கின்றது.

பண்டிதமணி அவர்கள், நன்றி சொல்லும்போதும், வரவேற்புக் கூறும்போதும் நூற்றுக்கு நூறு பொருத்தமாகச் சொல்லும பேராற்றல் படைத்தவர்கள். அதன் உச்ச நிலையினைப் பண்டிதமணிப் பட்டம் வழங்கப் பெற்றபோது அறிஞர் உலகிற்குக் காட்டினர்கள். குழந்தை கையில் தாய், பொன்னுலான கிண்ணத்தைக் கொடுக்கின்ருள். குழந்தையும் வாங்கிக்கொள்கின்றது. ஆனல் மீண்டும் அத்தாய் கேட்டாலும் அக குழந்தை அக் கிண்ணத்தினைக் கொடாது. கிண்ணமோ பொற்கிண்ணம். அதனல் அக்குழந்தையின் தாய், அப் பொற்கிண்ணத்தினைக் குழந்தை எவ்வாறு காப்பாற்றுகின்றது என்பதில் கண்ணும் கருத்துமாக இருத்தல் வேண்டும். இதனை மணிவாசகப் பெருமான், "மையிலங்கு" என்று தொடங்கும் திருச்சதகப் பாட்டில், 'மழக்கை இலங்கு பொற்கிண்ணம்" என்று குறிப்பிட்டுள்ளார். திருவாசகத் தேனை மாந்தி மாந்தித் திளைத்த பண்டிதமணி அவர்கள் இத்தொடரின் சிறப்பினைத் தம் நன்றி

யுரையின் வாயிலாக நிறுவினர்கள். "எனக்குப் பண்டிதமணிப் பட்டம் கொடுத்தது, குழந்தையின் கையில் பொற் கிண்ணம் கொடுத்ததைப் போன்றது. குழந்தை பொற்கிண்ணத்தினைக் கேட்டால் தராது. அதுபோல நானும் இப் பட்டத்தினைத் திருப்பித் தர உடன்படேன். குழந்தை கிண்ணத்தைக் காப் பாற்றுவதைத் தாய் எவ்வாறு பொறுப் புடன் பார்த்து வருவாளோ, அவ்வாறு நான் இப்பட்டத்தினைக் காப்பாற்றுவதில் கண்ணும் கருத்துமாக இருந்து வரும் பொறுப்பு, அறிஞர் பெருமக்களாகிய தங்களைச் சேர்ந்தது" என விளக்கினர்கள்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம், தமிழறிஞர்கள் வாழும் பெருங்கழகமாக மிளிர்தல் வேண்டும் என்பது, இப் பல் கலைக் கழகத்தினை நிறுவிய பெருங் கொடை வள்ளல் செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட் டியார் அவர்களின் குறிக்கோள் ஆகும். இதனல், தக்க தமிழறிஞர்களாகத் திகழ்ந்தவர்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு அரசர் அவர்கள், விரும்பி அழைத்தார்கள். தமிழ்ப் புலவர்களும் பழுமரம் தேரும் பறவைபோல அண்ணா மலைப் பல்கலைக் கழகத்தினையே நாடினர்கள்.

இந்நிலையில், இருமொழிப் புலவராக விளங்கிய பண்டிதமணி அவர்களும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குப் பயன்பட வேண்டும் என அண்ணாமலை அரசர் அவர்கள் எண்ணினர்கள். எண்ணம் நிறைவேறியது. 1934-ல் பண்டிதமணி அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு வந்து பணி ஏற்றார்கள். 1946 வரை தமிழ் விரிவுரை யாளராகவும், தமிழ்ப் பேராசிரியராகவும், தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவராகவும் பணியாற்றினர்கள். இக்காலம், பண்டித மணி அவர்களது வாழ்வின் பொற்காலம் என்று கூறலாம். பின்னர்ப் பண்டிதமணி அவர்கள், உடல்நலக் குறைவினல் பல்கலைக்கழகப் பணியிலிருந்து விலகிக் கொண்டார்கள். அவ்வாறு விலகும் போது, தமக்கு உடல் நலம் இன்மை யால் பல்கலைக் கழகப் பணியிலிருந்து விலகிக்கொள்ள அனுமதி தருதல் வேண்டும் என அண்ணாமலை அரசர் அவர்களுக்கு எழுதினர்கள். அப்போது அரசர் அவர்கள், "தங்களின் கடிதம் கண்டேன். உடல நலக் குறைவால் தாங்கள் விலகுவதாகச் சொல்லும்போது என் செய்ய இயலும். தாங்கள் விலகிக் கொள்வதால், அண்ணாமலைப் பல்கலைக் கழக மணிகளில் ஒன்று பிரிந்துவிட்ட தாகக் கருதுகின்றேன்" என்னும் பொருள் அமைய மறுமொழி எழுதி னர்கள். இதனல் அரசர் அவர்கள் கதிரேசரிடம் கொண்டிருந்த பெரு மதிப்புப் புலனகும்.

அப்போது நாடாண்ட ஆங்கிலேய அரசினர், மொழிப்பணி செய்யும் அறிஞர் களுக்கு மகாமகோபாத்தியாய என்னும் பட்டம் கொடுத்துப் பாராட்டினர். அப் பட்டம் இருமொழிப் புலமையும் பெற்ற பண்டிதமணி அவர்களுக்கு வழங்கப்படா திருந்தது. இதனைக் கண்ட செட்டி நாட் டரசர் (அப்போது குமார ராஜாவாக விளங்கிய) டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள் அரசினரிடம் எடுத்துக் கூறிப் பண்டிதமணி அவர் களுக்கு 'மகாமகோபாத்தியாய' பட்டம் வழங்குமாறு செய்தார்கள். இப் பட்டம், 11—6—1942ல் பண்டித மணி அவர் களுக்கு வழங்கப் பெற்றது. அறிஞர் பெருமக்களும், பொதுமக்களும் பட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர்.

சிறந்த அறிவும், உயர்ந்த பதவி களும், மதிக்கத்தக்க பட்டங்களும்பெற்ற பண்டிதமணி அவர்கள், தம் 73 ஆம்

ஆண்டில் (21—10—1953ல்) விண்ணுலகு எய்தினர்கள்.

கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையரராகத் திகழ்ந்த கதிரேசனர் அவர்களுடன் இருந்து பணியாற்றுகின்ற பேற்றினைப்பெற்ற ஆசிரியர்கள் சிலருள் யானும் ஒருவன். அப்போதெல்லாம் அவர்களின் நுண்மாண் நுழைபுலத்தினைக் கண்டு வியந்திருக்கின்றேன். அரிய கருத்துக்களை யார்கூறினலும் அக் கருத்தின் ஆழம் கண்டு பாராட்டுதல் அவர்களது இயல்பு. வகுப்பில் பாடம் நடத்திய நேரம் நீங்கலாக எஞ்சிய நேரங்களில். அவர்களது இல்லத்திலும் தமிழ் ஆராய்ச்சி நடைபெறும். அவர்களைச் சூழ்ந்து புலவர்கள் எந் நேரமும் வீற்றிருப்பர். தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனவரையர் உரையினை அவர்களது இல்லத்தில் அவர்களுடன் இருந்து கந்தசாமியார், வித்துவான் திரு. மு. அருணசலம்பிள்ளை முதலியோர் ஆராய்ந்த பொழுது யானும் கலந்து கொள்ளும் பேற்றினைப் பெற்றுள்ளேன். அக் காட்சி, பழங்காலத்தில், அறிஞர்கள் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்த செய்தியினை நினைவூட்டத்தக்கது.

இவர்களின் சைவ சித்தாந்தப் புலமைத் திறத்தினை அறிதற்குத் திருவாசகத்தில் திருச்சதகம், நீத்தல்விண்ணப்பம் திருவெம்பாவை ஆகியவற்றிற்கு இவர்கள் எழுதிய உரைகளே தக்கசான்ருக மிளிர்கின்றன. இவ் உரையினைப் பாராட்டாத தமிழ் அறிஞர்கள் யாரும் இலர். இவர்கள் சிறந்த மொழிபெயர்ப்பாசிரியரும் ஆவர். வட மொழியிலிருந்து பல நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்கள். இவர்களதுமொழிபெயர்ப்புத்திறனைக் குறிப்பிட்ட பெரும் புலவர் ரா. இராகவையங்கார், "பொருள் பெயர்த்திலன் மொழி பெயர்த்தனன் புலமைப் புவி புகழ்தல் தக்கதே" என்று பாராட்டியுள்ளார்.

இத்தகைய பெரும் புலவரான பண்டிதமணி அவர்கள் கலந்துகொள்ளாத தமிழ் விழாக்களும் மன்றங்களும் தமிழ்நாட்டில் இல்லை. அவர்களின் புகழ் தமிழ் உள்ளளவும் வாழும்.

---



# வள்ளுவர்-அறத்தின் குரல்

(பி. ஸ்ரீ)

இயற்கைப் பொருள் நுட்பங்களை எடுத்துக் காட்டும் விஞ்ஞானிகளுடன் வாழ்க்கையின் வழி நுட்பங்களைத் தெளிந்து உணர்த்தும் மெய்ஞ்ஞானிகளும் இன்றியமையாத வழிகாட்டிகளாவர். இத்தகைய மெய்ஞ்ஞானிகளை வாழ்வியல் விஞ்ஞானிகள் என்றும், வாழ்வியல் கலைஞர்கள் என்றும் குறிப்பிடலாம். இவர்களில், 'சமயக்கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் பொருள் இது என்ற' திருவள்ளுவருக்கு ஒரு வகைத் தனிச்சிறப்பு உரியதாகும். எல்லாச் சமயத்தினரும் ஒப்புக்கொள்ளத் தக்க இந்த வாழ்க்கை நூலை 'உலகப் பொது மறை, எனப் போற்றுவதும் பொருத்தமே. சோவியத்விஞ்ஞானப் பேரவையின் கீழ்த்திசைக் கழகப் பேராசிரியர் அலெக்ஸாந்தர் பியாதிகோர்ஸ்கி, "திருக்குறளில் பொதுவான மானிடக்குரல் மிக்க சக்தி வாய்ந்ததாக முழங்குகிறது" என்கிருர். மொழி-இன எல்லைகளையும் சமயவெறியையும் குறுகிய நோக்கங்களையும் கடந்து காலத்தை வென்று வெற்றிக் கொடி நாட்டியது திருக்குறள் என்கிருர்' ஆல்ப்ரட் ஸ்வைட்சர் என்ற ஜெர்மன் நல்லறிஞர், உலக இலக்கியத்துள்ளேயே இத்தகைய உயர்ந்த மெய்யறிவுடைய நீதிக் கருத்துக்கள் இருப்பது மிக அருமை' என்று கூறியுள்ளார்.

### வாழ்க்கையென்னும் போர்க்களம்

வள்ளுவரின் வாழ்க்கைத் தத்துவம் எது? அதைச் சுருங்கக் கூறி விளங்க வைப்பது எப்படி? இந்த வினக்கள் என்னுள்ளத்தில் எழுந்ததும், வள்ளுவர் காலத்துப் போர்க்களம் ஒன்று அகக் கண்ணுக்கு இலக்காயிற்று. பகைவர்கள் படையெடுத்திருக்கிருர்கள். 'நம்முடைய யானைப் படையைக் கொண்டு இந்த நாட்டுக் காலாட்படையை நசுக்கி வெற்றி சூடுவோம்' என்பது அவர்கள் திட்டம். அந்த யானைகளோ போருக்கென்றே பழக்கப்பட்ட கொலையானைகள்; பாகர்களால் உந்தப்பட்டு மதம் பிடித்தவைகளைப்போல முன்னேறி வருகின்றன. ஆயுதபாணிகளான வீரர்கள் பின்வாங்கிச் சிதறியோட அவர்களை அங்கும் இங்கும் மிதித்து நசுக்கிக் கொண்டு வருகின்றன.

திடீரென்று நாட்டுப்பற்று மிகுந்த சில வீரர்கள் முன்னணிக்குப் பாய்ந்து வருகிருர்கள், வேலாயுதங்களுடன். யானைகள் அந்த எதிர்ப்புக்கு அஞ்சிப்

பின்னேக்கி ஓடி பகைவர் சேனையிலேயே குழப்பம் உண்டாக்குகின்றன வேலாளர் தலைவன் தானே முன் நின்று தன் கை வேலால் எத்தனை யானைகளைப் பயமுறுத்தித் துரத்துகிருன்! இந்த நிலையில் பளிச்சென்று ஒரு பெரிய முரட்டுயானைவந்துவிடுகிறது தலைவன் தன் கைவேலை விசையாக அதன்மேல் வீசி எறிகிருன். அந்தமுழுப் பலத்தால் எறியப்பட்ட வேல், யானையை அலறி வீறிடச் செய்கிறது. அது திரும்பி ஓடித் தன்னைச் சேர்ந்த படையையே துவைத்துப் பெருங் குழப்பம் விளைத்து விடுகிறது.

இந்தத் தைரிய சாகசச் செயலைப் செய்து முடித்த வீரன் வெற்றிப் பெருமிதத்துடன் தன் படையை நோக்கித் திரும்பி வருகிருன். ஆனல் வேறொரு பகையானை இப்பொழுது குறுக்கிடுகிறது. ஒரே யானைதான்; ஆனல் இவன் கையில் வேல் இல்லையே; என்ன அதிசயம்!— திடீரென்று ஒரு வேலைக் காண்கிருன். அது இவன் உடம்பிலேதான் இருக்கிறது. எதிரிகளில் ஒருவன் மறைந்திருந்து குறிபார்த்து வீசிய வேல்தான். போர் வெறியால் தன் நெஞ்சுக்குப் பக்கத்திலே வேல் தைத்திருப்பதும் இவனுக்குத் தெரியவில்லை. தன்னைக் கொல்லவரும் யானை மேல் எறிய வேல் வேண்டுமே என்று தேடும்போதுதான் இந்த வேல் கண்ணுக்குப் படுகிறது; கைக்கும் எட்டி விடுகிறது.

ஆ! வேலை பளிச்சென்று இழுக்கிருன் வீரன். அப்போது அவனுக்கு ஒரு சிரிப்பு வருகிறது. அந்த உவகையையும் வியப்பையும் பதிவு செய்து காட்டும் குறளைப் பாருங்கள்:

> கைவேல் களிற்றொடு போக்கி, வருபவன்
> மெய்வேல் பறியா நகும்."

அது என்ன நகைப்பு? அதன் முழுப் பொருளும் இன்னதுதான் என்று எந்த உரையாசிரியரே விளக்க வல்லார்? சரி, பிறகு என்ன நடக்கிறது? அந்த வீரன் அந்தவேலை அந்தயானைமீதுஎறிந்தான? அவன் படையைச் சேர்ந்தவர்கள் அந்த யானையைத் துரத்தி இந்த வெற்றி வீரனைக் காப்பாற்றிவிடுகிருர்களா? இவ் வினக்களுக்குக் குறளில் வெளிப்படையாகப் பதில் இல்லை. விடையைப் பேசாத பேச்சாக விட்டு விட்டு நகைத்துக்கொண்டேமறைந்து விடுகிருர் திருவள்ளுவரும். போர்க்களம் மறைந்து போகிறது; ஆனல், இது 'வாழ்க்கைக்களம்!' என்ற குரல் என் காதில் ஒலிக்கிறது.

தமிழர்களது பழைய சங்ககாலவீர உலகத்தை அளந்து காட்டுகிறது இந்தக் குறள். ஓதிஓதி உணர்ந்து கொள்ளுங்கள். இதற்குள்ளேதான எவ்வளவு பொருட்பெருக்கம்!எவ்வளவுமனேபாவச் சிறப்பு!—என்ன நாடகத்திறன், என்ன ஓசையின்பம், என்ன மந்திரவித்தை, கடுகுக்குறள் ஒரு கடலா?—என்று வியக்கிறோம். இக்குறளில் அலையெறியும் சுத்த வீரம்நம் வாழ்க்கைப்போராட்டத்திற்கும் இன்றியமையாததே என்ற எண்ணமும் தோன்றுகிறது நமக்கு. ஆனல் இது, தரும வீரமாகத்தான் வெளிப்பட வேண்டும் என்ற வள்ளுவருள்ளமும் இனிது புலனுகிறது.

போர் வீரத்தையும் பாராட்டுகிருர் வள்ளுவர். பீரங்கிக் குண்டுகள் தன் முகத்திற்கு அருகில் பறந்து கொண்டிருந்த போதும் நெப்போலியன் தன் நெஞ்சின் அமைதியை இழந்து விடுவதில்லையெனக் கூறுவதுண்டு. எதிரிவேல் கொண்டெறியும்போது விழித்த கண்ணை இமைப்பதும் வீரத்திற்கு இழுக்கெனக் கருதும் போர் வீரரைக் குறித்துக் கூறுகிறது குறள். இத்தகைய வீரர்களைச் 'சான்ருேர்'(போர்முனையில் அமைதியாக நிற்கும் சால்புடையவர்கள்) எனத் தமிழர்கள் போற்றி வந்த காலமும் உண்டு. ஆனல்,

"இன்றுசெய் தார்க்கும் இனியவே [செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு?"

என்றும்

"இன்றுசெய் தாரை ஒறுத்தல், அவர் [நாண
நன்னயம் செய்து விடல்"

என்றும் வள்ளுவனர் போற்றும் சான்ருண்மை தரும வீரத்தையே வாழ்க்கையின்உயிர்நிலையாகச்சுட்டிக் காட்டுகிறது.

'பகை, பகையால் அழியாது; பகை அன்பிலேயே அவிந்துபோகும், என்ற புத்தர்பிரானின் பொன்னுள்ளம் வள்ளுவர் திருவுள்ளமும் ஆகும். இத்தகைய உள்ளமும் குரலும் திருக்குறளினூடே முழங்குவதைச் செவியுள்ளவர்கள் இன்றும் கேட்கலாம். "சத்தியமும்அஹிம்சையுமேநான்உரிமை கொண்டாடும் சால்பு" என்றும், 'மனிதகுலத்தில் எனக்குள்ள கணிக்கமுடியாத, அன்பிலிருந்தே அவை எழுவதாயின' என்றும், 'நான் யாரையும் பகைவர் எனக்கருதுவதில்லை' என்றும் நவீன புத்தரான காந்தியடிகள் கூறியுள்ளார். இந்த நெறிமுறையும் வள்ளுவரின் நெறிமுறைதான்; தரும வீரம்தான்.

### வள்ளுவரின் சமுதாயம்

இந்தத் தருமவீரர், தம் அறநெறியைச் சமயபோதனைகளின் அடிப்படையில் முறைப்படுத்தவில்லை; தம் சமயக் கொள்கையையும் அறநெறியின் அடிப்படையிலேயே நிலைநிறுத்தப் பார்க்கிருர். இவரது ஆதிபகவன், 'அறவாழி அந்தணன்', 'பொறிவாயில் ஐந்து அவித்தான்'. இக்கடவுளை அடைவதற்கு உரிய பெருநெறியைப் 'பொய்தீர் ஒழுக்க நெறி' என்கிருர். இந்த அறப்பெருநெறி பகுத்தறிவுக்கும் பக்திக்கும் ஒருங்கே இசைந்தது என்பது இவர் குறிப்பு. அறநெறிக்கும் அறிவுநெறிக்கும், பக்திநெறிக்கும், பண்பாட்டுக்கும் உள்ள தொடர்பினை வள்ளுவரைப் போல் உணர்ந்திருப்பவர், உலகிற்கு வழிகாட்டும் உத்தமர்களிலும், மிகச்சிலரேயாவர். வெகு காலமாகத்தமிழ் நாட்டிலே வேரூன்றிப் பல்வேறு சானறோர் சிந்தனைகளிலும் கவிஞர்–கலைஞர் பொற்கனவுகளிலும் வளர்ந்துவந்த அறநெறியின் பெருவடிவை குறள் வடிவில் காண்கிருேம?

"தனி மனிதன்" என்ற நிலையில் நம்மைத் திருத்தி அமைத்துக் கொள்வதுதான் சமுதாயச் சீரமைப்பிற்குச் சீரான வழியாகும் என்பது வள்ளுவருள்ளம். இவரும் புரட்சியாளரே; ஆனால் இவருக்கு அகப்புரட்சியே புரட்சியைக் காட்டிலும் முக்கியமானது. இவரும் ஒரு சமதர்ம சமுதாயத்திற்குத்தான் வழி காட்டுகிருர். முதலாளித்வமோ, வன்முறைப் பொதுவுடைமையோ நிலவாத சமுதாயம். கமபன் வாக்கிலே,

> நீதியால் வந்ததொரு
> நெடுந்தரும நெறியல்லால்
> சாதியால் வந்தசிறு
> நெறி யறியா'(ச்)

சமுதாயம் இது. 'அன்பு அரும்பித் தருமம் மலர்ந்து, போகம் கனி ஒன்று பழுத்தது போலும்' என்று கம்பன் வருணிக்கிருனே, அந்த இராம ராஜ்யத்தில் எல்லாரும் இன்புற்று வாழும் சமதர்ம சமுதாயத்தின் வித்தினை அவன் கண்டது திருக்குறளிலேதான். 'எலலோரும்' எல்லாப் பெருஞ் செல்வமும்' எய்துமாறு கம்பன் படைத்திருக்கும் இராம ராஜ்யம், 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும்' வள்ளுவ ராஜ்யத்தின் வளர்ச்சிதான்; மறுமலர்ச்சிதான்.

பழுத்த பண்பாட்டையும், அறம் நிரம்பிய அருள் வாழ்க்கையையும், வற்ருத செல்வத்தையும், செயற்கருஞ் செயல்களையும் வள்ளுவரின் சமுதாயத்தில் காண்கிருேம். இங்கே சமயக் கணக்கர்களின் முரண்டுகளுக்கு இட

மில்லை; ஆனால் முரண்பாடுகள் உண்டு. இம் முரண்பாடுகளுக் கிடையே, சமரச நன்னெறி கண்டு காட்டுகிறது, வள்ளுவரின் மேதை. உதாரணமாக, அறம் மலர்ந்து போகம் (இன்ப வாழ்வு) கனிவுடன், யோகமும் இச் சமுதாயத்தின் உன்னதக் குறிக்கோளாகப் புலனாகிறது. உறவும், துறவும் வள்ளுவனார் பெருநெறியில் இணைந்து போவதையும் காண்கிறோம். ஒரு குடும்பத்தைத் துறப்பவன் உலகத்தையே தன் குடும்பமாகக் கண்டு அருளாளனாகத் திகழ்கிறான். முழு வாழ்க்கையையும் உள்ளபடி அனுபவிக்க உறவைப்போல் துறவும் தேவைதான். பகுத்தறிவைப் போல் நம்பிக்கையும் பக்தியும் இன்றியமையாதவைதாம்.

'விதி பெரிதா, மதி பெரிதா?' என்ற முரண்பாட்டு பிரச்னையையும் வள்ளுவர் தமக்கே உரிய சிறப்பு முறையில் தீர்த்து வைப்பதைக் காண்கிறோம். விதியின் பெருஞ்சக்தியை வற்புறுத்தும்போது,

'ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்'

என்கிறார். ஆகவே, விதியை மதியால் வெல்ல முடியாது என்பதுதான் வள்ளுவர் உள்ளமா? இந்த வாக்குடன்,

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
'தாழாது உஞற்று பவர்'

என்ற இவர் வாக்கையும் ஒப்பிட்டு ஆராய்ந்து பாருங்கள்.

சாதாரண மதியோ முயற்சியோ விதியின் பெருவலியை வென்று விடுவதில்லை. தோல்வியை ஒப்புக்கொள்ளாது மேலும் மேலும் முயன்று கொண்டே இருப்பவன் அந்த மதிவலியால் ஊழையும் முதுகுகண்டு வாழ்க்கையில் வெற்றி காண்பான் என்பது 'விதியா, மதியா?' என்ற முரண்பாடுகளுக்கிடையே வள்ளுவர் கண்டு காட்டும் சமரச நன்னிலை.

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய் வருந்தக் கூலிதரும்

என்ற வாக்கும் ஆழ்ந்த சிந்தனைக்கு உரியது. முயற்சிக்குக் கூலி உண்டு என்பதும் விதிதான். 'உலைவின்றித் தாழாது உஞற்றுபவர்'களான பகீரதர்களின் முயற்சிக்குக் கூலி, விதியையும் வென்று, வலியழித்து வெற்றி சூடுவது என்பது வள்ளுவரின் முடிந்த முடிவு எனலாம்.

### சத்தியமா? அகிம்சையா?
### (வள்ளுவரும் காந்தி அடிகளும்)

சத்தியத்திற்கும் – அஹிம்சைக்கும் இடையே முரண்பாடு காணும் நெருக்கடி நிலையும் வாழ்க்கையில் நேரக் கூடும். உதாரணமாக, ஒரு குழந்தையைச் சிலர் கொன்று அதனால் பெருலாபம் அடையப் பார்க்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அக் குழந்தை தக்க வயதில் பெருஞ் செல்வத்திற்கு எசமானன் ஆவான் என்பதை அறிந்திருந்த தாயாதிக்காரர்கள் அவர்கள் ஒருவனது பாதுகாப்பில் அக்குழந்தை இருப்பதாகத் தெரிந்து அவனிடம் வருகிறார்கள். அவன் பொய்சொல்ல மாட்டான். என்பது அவர்களது நம்பிக்கை. குழந்தையைப் பற்றித்தனக்கு ஒன்றும் தெரியாது எனச் சொல்லிவிட்டால், அவர்கள் திரும்பிப் போய்விடுவார்கள். இந்த நிலையில், அவன் உண்மையைச் சொல்லத்தான் வேண்டுமா? அஹிம்சா தர்மத்தைமுன்னிட்டு ஒரு பொய்சொல்லி விடலாமா?

"பொய்மையும் வாய்மை இடத்த, புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்"

என்ற குறள், இத்தகைய சந்தர்ப்பத்தில் பொய் கூறுவதற்கு இடம் கொடுக்கிறது என்று கருதுவோர் உண்டு.

வாய்மை என்ருல் என்ன? திருவள்ளுவர் கூறுகிருர்.

வாய்மை எனப்படுவது யாதெனின் [யாதொன்றும்
தீமை இலாத சொலல்

என்று. இப்படி வரையறுத்து வாய்மைக்குப் பொருள் கூறுவதையும் மேலே சொன்ன குறளுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம். திருவள்ளுவருக்கு அஹிம்சா தர்ம லட்சியம் சத்தியக் குறிக்கோளுக்கு உயிர் நிலேயாக உள்ளது என்ற குறிப்பை இந்த இரண்டு குறட்பாக்களிலும் காண்கிருேம். ஒரே வார்த்தையில் அறத்தின் உயிர் நிலேயைக் குறிப்பிடச் சொன்ருல், வள்ளுவர் அதைக் 'கொல்லாமை' (அஹிம்ஸை) என்பார். இரண்டாவதாகத் தான் பொய்யாமையைக் கூறுவார்.

ஒன்ருக நல்லது கொல்லாமை, மற்றுஅதன்
பின்சாரப் பொய்யாமை நன்று

காந்தியடிகளோ, ஒரே வார்த்தையில் தம் அறநெறியைச் 'சத்தியாக்கிரகம்' என்றே குறிப்பிடுவார். இவருக்குச் சத்தியமே உயிர்நிலே; அதன் உயிர் நிலே அஹிம்சை. பொய்மை ஒருபோதும். "புரைதீர்ந்த நன்மை" விளேப்பதில்லே காந்தியடிகளுக்கும், ரஷ்யப் பேறிஞரான டால்ஸ்டாய்க்கும் மேலே குறிப்பிட்ட குழந்தையின் உயிரைக் காப்பதற்கும் பொய் சொல்லக் கூடாது என்பதே காந்தி—டால்ஸ்டாய் சிந்தனேகளின் தனிப்பெரும் போக்கு. காந்தியடிகள் தம் வாழ்க்கையைச் "சத்திய சோதனே" என்று குறிப்பிடுகிருரல்லவா? வள்ளுவரின் வாழ்க்கையோ அஹிம்சா தர்ம சோதனே. வள்ளுவர் காணும் சமுதாயத்தைச் சத்திய சமுதாயம் என்று கூறுவதைக் காட்டிலும் அஹிம்சா தர்ம சமுதாயம் என்று குறிப்பிடுவதே பொருத்தமாகும். ஆம்; வள்ளுவரின் தருமம் முழுக்க முழுக்கத் தயாமூல தர்மம்தான். அருளே வேராக உடையது.

இச்சமுதாயம், 'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற வாக்கிற்கு இணங்க அமைந்திருப்பது. சாதி சமயங்களேக்கடந்து எல்லா வகுப்பினரும் சகோதர நேசத்துடன் பகுத்து உண்டு உறவாடும் சமுதாயம். எனவே, இச் சமுதாயத்தில் 'வாரி வளேத்து அடக்கும்' கபந்த முதலாளித்துவத்தைக் காண முடியாது. எங்கே பார்த்தாலும் செவிக்கு உணவு கிடைக்குமாறு அறிவு நிலேயங்கள், பள்ளிகள், கல்லூரிகள், கலேக் கூடங்கள், வாசக சாலேகள், பட்டி மன்றங்கள் முதலியன அற நிலேயங்களாக நடைபெற்றுவரும் சமுதாயத்தை வள்ளுவர் கண்டு காட்டுகிருர் என்று ஊகிக்கலாம்.

செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்

என்ற குறளேச் சிந்தித்துத் தியானித்துப் பாருங்கள்.

பேரறிவாளரான ஸாக்ரடிஸ் "நான் அறியேன்!" என்றுதான் சொல்லிக் கொண்டிருந்தார். அக்காலத்துப் போலி அறிஞர்களோ தாங்கள் எல்லாவற்றையும அறிந்துவிட்டதாகப் பறைசாற்றி வந்தனர். அவர்களில் யாரையும் 'அறிஞர்' என்று ஒப்புக்கொள்ளாத கிரேக்க தெய்வம் (டெல்பிக் ஆரகிள்) ஸாக்ரடிஸே அறிஞர் என்று உறுதி கூறியதாம். 'தெய்வம் பொய்சொல்லுமா?' என்று திகைத்தவர்களே நோக்கி ஸாக்ரடீஸ், 'தெய்வமும் பொய் சொல்லவில்லே; நானும் பொய் சொல்லவில்லே; 'நான் அறியேன்,என்பதை அறிந்திருக்கிறேன். அவர்களுக்கோ இந்த, அறிவும் இல்லே என்று விடை கூறினர். அறியாமையை அறிவது அறிவு என்ற ஸாக்ரடீஸின் சித்தாந்தத்தை நம் வள்ளுவரும் ஒப்புக்

கொண்டு 'அறிதோ றறியாமை கண்டற்ருல்' என்ற குறட்பகுதியில் ஒரு சூத்திரம் போல திட்ப நுட்பமாக கூறியுள்ளார்.

இப்படி அறிவுக்கு இலக்கணம் கூறியவர், அறியாமை இன்னதென்றும் வரையறுத்துக் கூறியுள்ளார். 'யாம் சால நுண்ணறிவுடையோம்' என்று ஒருவன் தன்னைத் தானே மதிக்கும் அந்தச் செருக்கே அறியாமை என்கிருர்.

வெண்மை எனப்படுவது யாதெனின் ]ஒண்மை
உடையம் யாம் என்னும் செருக்கு.

அறிவாளி அறியாமை காண்பதும், அறியாதவன் அறிவுடையவனுகத் தன்னைக் கண்டுகொள்வதுமாகிய இந்த முரண்பாட்டு நிலையைச் சுட்டிக் காட்டும் வள்ளுவன் அறிவைப்போல் அடக்கமுமுடையவராய், இத்தகைய மெய்யுணர்வினல் தனி மனிதனுடைய வளர்ச்சியும், சமுதாய வளர்ச்சியும் ஒருங்கே உறுதிப்படும் என்பதை உய்த்துணர வைத்திருக்கிருர்.

இப்படி யெல்லாம் வள்ளுவரின் வாழ்க்கைக் குறிப்புகளையும் பொன்னுரைகளையும் ஆராய்ந்து கொண்டே போகலாம். திருக்குறளிலேயே வள்ளுவரின் ஆத்ம சரித்திரத்தையும் ஆத்ம சித்திரமாகிய ஞானத்திருவுருவையும் கூட நாம் காண முடியும்.

மழித்தலும் நீட்டலும் வேண்டா, [உலகம்
பழித்தது ஒழித்து விடின்.

என்று கூறியிருப்பவர் தாடியும் சடையுமாகக் காட்சியளித்தார் என்று கருத வேண்டியதில்லை. நம்மாழ்வாரை ஒரு பக்தர் அகக்கண்ணுல் கண்டு வருணிக்கும்போது,

மோனமாகிய வடிவமும் மார்பமும்
முத்திரைத் திருக்கையும்,

ஆகத் தமக்குக் காட்சியளித்ததாய்ப் பாடுகிருர். குணமென்னும் குன்றேறி நின்றதிருவள்ளுவரைக் கூனிக்குறுகாது நிமிர்ந்த உடம்புடனும் உள்ளத்துடனும் பரந்த மார்புடனும் நீண்டு தொங்கும் கைகளுடனும், அகத்தின் அழகை அப்படியேபுலப்படுத்தும் முழுமதி முகத்துடனும் நெற்றியுடனும் கருணையூற்றுக்களான கண்களுடனும், எடுப்பான மூக்குடனும், தரும சிந்தனைகளைத் திருக்குறளாக நெய்து கொண்டிருக்கும் ஞான பரவசநிலையில் கண்டு களிப்பதே தஇரசிகர் உள்ளங்களுக்குத் திருப்தியளிப்பதாகும்.

பேரறிஞரும், பரமரசிகருமான இவரது பரந்த மார்பில் குடிகொண்டிருக்கும் விசாலமான வைர நெஞ்சிலே வீரத்தைப் போல் ஈரத்திற்கும் சிறப்பாக இடம் உண்டு. இந்த நெஞ்சு எத்தனை சிந்தனைகளை, எத்தனை முரண்பாடுகளைச் சமரசப் படுத்திக் காட்டுகிறது ! எத்தகைய தூய அன்பிற்கும், அமைதிக்கும் நிலைக்களனுகவும் காண்கிறது! இந்த இதயக்கோயிலில் அறமே ஆதிபகவனுக அமர்ந்து நமக்கெல்லாம் வழிகாட்டக் குரல் கொடுக்கிறது. இக்குரல் திருக்குறள் அறத்தின் நல்லிசைப் புலமைக் குரல்.



# சைவம்

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

முன்னுரை

இந்த நூற்றாண்டு விஞ்ஞான நூற்றாண்டு என்று பாராட்டப்பெறுவது. மனித உலகத்தில் அறிவியல் வளர்ச்சி மிகவும் வேகமாக வளர்ந்து வருகிறது. இதன் பயனாக இயற்கைச் சக்திகளை அடக்கியாண்டு அனுபவிப்பதும் வெற்றி பெறுவதும் நிகழ்ந்து வருகின்றன. இவ்வழி மனிதர்களின் அனுபவ ஆற்றல் பெருகி வளர்ந்துள்ளது. அதன் காரணமாக நுகர்பொருள்களின் எண்ணிக்கையும் பெருகி வளர்ந்துள்ளன. எனினும் ஏதோ ஒருவகை அமைதியின்மை, வெறிப்புடன் கூடிய பகைமை உணர்ச்சி, போராட்டச் சூழல்கள் ஆகியவை எங்கணும் உலகத்தைச் சூழ்ந்து கொண்டிருக்கின்ற இரங்கத்தக்க நிலையைப் பார்க்கின்றோம்.

சமயம்

ஏன்? எதனால் மாறுபட்ட இந்தநிலை? என்று ஆராய்தல் யாவர்க்கும் இன்றைய உடனடியான கடமை. மனிதன் புறப்பொருள்களைத் திறமையாகக் கையாளுகிறான். தன்னுடைய நுகர்வுக்கேற்றவாறு பக்குவப்படுத்திப் பயன்படுத்த முயல்கிறான். ஆயினும், தன்னை, புலன்களை, உணர்வுகளைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று உணர மறக்கிறான்; மறுக்கிறான். பெரிய விபத்துக்கள் நிகழ்கின்றன. சரக்குப் பேருந்து வண்டியும் (லாரி) மனிதச் சுற்றுலாச் சிற்றுந்து வண்டியும் (பிளசர்) மோதிக்கொள்கின்றன. அவை மோதிக் கொள்வதற்குக் காரணம் அவ்வண்டிகள் அல்ல; அவற்றைச் செலுத்தும் வலவர்களின் திறமையின்மை, அல்லது கவனக் குறைவு ஆகியவையேயாம் அதுபோலவே மனித உலகத்தில் ஏற்படும் பிணக்கு, பகை, போர் முதலியவைகட்கு மனிதர்களிடையே நிலவும் மக்கள் நிலைக்கு வேண்டிய தகுதியின்மையே காரணமாகும். மனிதர்களின் உள்ளுணர்வுகளைச் சமைத்துப் பக்குவப் படுத்தும் உயரிய வாழ்க்கை முறையே சமயம். பச்சையாகச் சுவைத்து நுகர்தற்கு உரியனவாக இல்லாத பொருள்களைச் சுவைத்தற்குரியனவாகப் பக்குவப்படுத்தும் வினையைச் சமைத்தல் என்று கூறுவது தமிழ் மரபு. இன்ப நுகர்வுக்குரிய கன்னிமைப் பருவத்தை ஒரு பெண் எய்தினாள் என்பதற்கும் “சமைதல்” என்று கூறுதல் தொன்றுதொட்டுள்ள தமிழ் வழக்கு அதுபோலவே, உயிரும் இன்ப அன்பினை நுகர்தற்குரிய நிலையினை எய்தும் வழிவகைகள் எய்துதற்குரிய வாழ்க்கையே சமயவாழ்க்கை'

இந்தச் சமயவாழ்க்கையில் இன்று மனித உலகம் போதிய அக்கறை காட்ட வில்லை. ஒரோவழி காட்டப்பெறும் இடத்திலும்கூட வெற்று ஆரவாரச் சடங்குகள்மீது அக்கறை காட்டப் பெறுகிறதே யொழிய, உண்மையான சமய வாழ்க்கையில் அக்கறைகாட்டப் பெறவில்லை. மனித உலகம் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல்" என்ற சமய நெறியின் வழி நின்று ஒழுகினுல் மட்டுமே இன்பமும் அமைதியும் கலந்த சீரிய வாழ்க்கை மலரும்.

சமய ஒருமை

இந்நிலவுலகம் அளவிடப் பெருத அகற்சியை யுடையது. உலகின்கண் பல்வேறு மொழிகள் பேசப்பெறு கின்றன; அதுபோலவே பல்வேறு சமயங் களும் வழக்கில் உள்ளன. வேறுபடு சமயங்கள் பலவாயினும் அவையனைத் திற்கும் குறிக்கோள் ஒன்றேயாம். ஆயி னும் தத்துவக் கட்டுக்கோப்பால் வழி நடத்தும் நெறிமுறைகளால் அவை தம்முள் பள்ளி வகுப்புப் போன்ற வேறு பாடுகள் இருக்கின்றன அங்ஙனமிருப் பது இயற்கையும் கூட. இந்த வேறு பாடுகள் செயற்கையாகக் கற்பிக்கப் பெற்றவையல்ல. திருவருளால் பெறப் பெறும் மெய்யுணர்வு முதிர்ச்சியினுலும், மெய்ப்பொருள் காணும் திறனுலும், அநுபூதியின் பயனுலும் தோன்றியவை ஆகும். இந்த வேறுபாடுகள் வேறு படுத்தும் இயல்புடையன வல்ல. அப்பரடிகள் அருளிச் செய்தது போல "அறுவகைச் சமயத்து அவரவரைத் தேற்றுந் தகையன; தேறிய தொண்ட ரைச் செந்நெறிக்கே ஏற்றுந் தகையன" என்பதே இந்த வேறுபாட்டின் இயல்பு. இதனை மறந்து சமரசம் என்ற பேரால் கலப்படம் செய்வது தத்துவ அறிவின் வளர்ச்சியையும், ஒன்றியிருந்து அனுப விக்கும் திருவருள் அனுபவத்தையும் எய்தி இன்புற வொட்டாமல் தடை செய்யும். தன்னுடைய தத்துவச் சார்பில் தன் சமயத்தில் பற்றுக கொள்ளுதலும் பிறிதொரு சமயத்தின்மீது வெறுப்புக் கொள்ளாது அந்நெறிக் கேற்ற உதவி புரிதலுமே சமரச ஒழுக்கமாகும்.

சித்தாந்த சமயம்

சித்தாந்தம்—அதாவது, சிந்தையின் முடிந்த முடிபு என்று பொருள். சித்தாந் தமே முடிந்த முடிபு; மற்றையது "பூர்வ பக்கம்" என்பது இரத்தினத் திரையம். தமிழ், காலத்தால் மூத்த மொழி; கருத் தாலும் மூத்த மொழி. தமிழினம் பல நூறு ஆண்டுகட்கு முன்பே நாகரிகத்தில் சிறந்து, பண்பாட்டில் மேம்பாடுற்று விளங்கியமை போன்று, விழுமிய சமய நெறியினும் சிறந்து விளங்கியது. "தமி ழரது பேரறிவின் முதிர்ச்சியின் விழுமிய பயன் சித்தாந்த சமயம்" என்று மேனுட்டு அறிஞர்கள் எடுத்துக் கூறி யுள்ளனர். சித்தாந்த சமயம் பரசிவத் தாலேயே அருளிச் செய்யப்பெற்றது. ஆதலால் அது தமிழரது பேரறிவின் பயன் என்று கூறுதல் பொருந்தாது என்பர் சிலர். பரசிவமே தமிழ் நாட்டா னுக — தமிழனுக — சைவனுகத் தன்னைக் காட்டிக் கொண்டது என்பதை,

"தண்ணுர்தமிழ்அளிக்கும் தன்பாண்டி
நாட்டான்"
"தென்னுடுடைய சிவன்"
"ஐயாறதனிற் சைவன்"

என்ற மணிமொழி மறைகளை நோக்கும் பொழுது,பரசிவத்தைத் தமிழனுக ஏற்றுக் கொள்வதில் என்ன குறை? இந்திய நாட்டில் வழங்கும் பல்வேறு சமயங்க ளுள்ளும் சைவ சித்தாந்தமே சிறப்புடை யது. ஆயினும், இந்து சமயம் என்ற ஒரு பொதுப் பெயரும் ஒரு முடிச்சும் தோன் றிய பிறகு சித்தாந்த சமயத்தின் உண் மைச் சிறப்பினைப் பலரும் உணரமுடி யாமல் போயிற்று. ஏன்? சித்தாந்த சம

யத்தின் மெய்ம்மை விளக்கும் செந்தமிழ்ப் பண்ணைகளாக விளங்கிய திருக்கோயில் களிலும் திருமடங்களிலும் கூட அகப் புறச் சமயங்களின் செல்வாக்கும் சிறி தளவு புறச் சமயங்களின் செல்வாக்குங் கூடப் புகுந்து ஆட்சி செய்கின்றன. இச் செல்வாக்குப் புகுந்துள்ள நிலைமை, மரத் தில் புல்லுருவி போன்று இருப்பதால் தெற்றென விளங்கவில்லை. சித்தாந்த சைவம் மிகப் பழைய நெறி; தொன்மை நெறி என்று அருள் நூல்கள் பேசும். காலத்தால் பழமையாக இருந்தாலும் மிகப் புது நெறியாகவும் காட்சியளிக்கும் இயல்பு இச் சமயத்திற்கே உண்டு. "முன்னைப் பழைமைக்கும் பழைமைத் தாய்ப் பின்னைப் புதுமைக்கும் பெயர்த் தும் அப் பெற்றியதாய்" என்று மணி மொழி காட்டும் அவ்வியல்பு பெருமா னுக்கு மட்டுமன்று; அப் பெருமான் திரு வடியிணையினை எளிதாகவும் இனிதாக வும் எய்துவிக்கும் இந்தப் பெரு நெறிக் கும் பொருந்தும். இன்றைக்கும் அறிவி யல் உணர்வுக்கு இயைந்ததாக, அனுப வத்திற்கு உகந்ததாக, நம்பிக்கைக்கும் நல்வாழ்வுக்கும் ஏற்றதாக இருக்கும் சமயம் இது என்று கூறினல் நடுநிலை யாளர் யாரும் மறுக்க முடியாது.

உலகியல் துறையிலும்கூட மார்க்ஸ் மாமுனிவர் தத்துவக் கோட்பாடுகளுக்கு ஏற்ற விளக்கம் தரக்கூடிய சமயமாக இது விளங்குகிறது. தெளிவாகச் சொல்வதென்றால் இனிமேல் கேள்வி கேட்க முடியாத சமயமாக இது விளங்கு கிறது. சிந்தனையின் உச்ச வரம்பில் நிற்கும் மெய்ந்நெறி இச் சிவநெறி. குமர குருபர சுவாமிகள்.

"ஒரும் வேதாந்தமென்னும் உச்சியிற்
பழுத்த, ஆரா இன்ப அருங்கனி
சைவ சித்தாந்தத் தேனமுது"

என்று பாராட்டினர்.

# ஸ்ரீ வைணவம்

D. இராமசாமி அய்யங்கார்

(1) இறைஇலக்கணம்

"உலகம் யாவையும் தாமுள ஆக்கலும் நிலை பெறுத்தலும், நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டு"டைமை இறைவனுக்கு இலக்கணம். இது தமிழ்க் கவியரசன் கம்ப நாடன் வகுத்தது. இச் சொற்களின் வடமொழியாக்கமோ என்று தோன்றும் சொற்கள் கொண்டு வைணவ சமயாசிரியராம் இராமானுசன் இதே இலக்கணத்தை அறிவிக்கிறார், "அகிலபுவன ஜன்மஸ்தேம பங்காதி லீலே" யென்ற ஸ்ரீபாஷிய மங்களச் சுலோகத்தில். வியாச மஹரிஷி உபநிடத அர்த்தங்களைச் சுருக்குச் சூத்திரங்களாக அமைத்தவிடத்து இரண்டாவது சூத்திரத்தில் இதே இலக்கணம் தான் கூறப்படுகிறது. உலகனைத்தையும் ஆக்கி, அழித்துத் துடைக்கும் பரம் பொருளே முழுமுதற் கடவுள் என்று இவற்றால் தேறுகிறது.

(2) ஸ்ரீ வைஷ்ணவம்

"உயர்வற உயர் நலமுடையவன் எவன், அவன் உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்து உளன்" என்றும் மெய்ப்பொருளின் தன்மையை விவரித்துக் காட்டுகிறார் நம்மாழ்வார். எங்கும் பரந்து அனைத்தையும். அனைவரையும் வியாபிப்பவன் என்பது "விஷ்ணு" என்னும் வடமொழிச் சொல்லுக்குப் பொருள். அந்த விஷ்ணுவே பரதெய்வம்என்ற கொள்கையுடையோர் வைஷ்ணவர்கள். அவர்களுடைய சமயம் வைஷ்ணவம் வைஷ்ணவம் என்பது அச்சொல்லின் தமிழ் வடிவம்.

விஷ்ணுவே மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் என்று கருதுவோர் அனைவரும் வைஷ்ணவர்களே தாம். மத்வமதம், வல்லபமதம், சைதன்ய மதம் போன்ற மதத்தினர்களனைவரும் வைஷ்ணவர்கள் என்பது உண்மையே. ஆயினும் தமிழ் நாட்டில் வைணவம் என்னும் சொல் ஆழ்வார்களாக இந் நாட்டில் தோன்றி இறைவனை நேரில் அவன் காட்டக் கண்டு அனுபவித்து அவ்வனுபவத்தைத் தமிழில் இன்பப் பாடல்களாக நமக்குத் தந்துதவிய பெருமக்களின் கொள்கையையே குறிக்கும். ஆழ்வார்கள் மதத்துக்குத் தனிச்சிறப்பு "இலக்குமியுடன் சேர்ந்த நாரணனே பரதெய்வம், நாரணன் (விஷ்ணு) மட்டுமன்று" என்ற கொள்கை. இது கொண்டு இவர்களுக்கு ஸ்ரீ வைஷ்ணவர்கள் என்றும், இவர்கள் சமயத்துக்கு ஸ்ரீ வைஷ்ணவம் என்றும் பெயர் வழங்கும்.

(3) ஆயிர நாமன்

"மால், அரி, கேசவன், நாரணன் சீமாதவன், கோவிந்தன்" என்பவன போன்ற திருநாமங்கள் விஷ்ணுவுக்குப் பல பல உண்டு. விஷ்ணு ஸகஸ்ரநாமம் என்று உலகம் போற்றும் ஆயிரநாமங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குணத்தை வெளிப்படுத்த வல்லதாக அமைந்துள்ளது. அத்துவைத மதத்தை உலகுக்குத்தந்த ஆதிசங்கரர் இந்த ஆயிரநாமங்களில் பல பெருமைகளைக் கண்டு வெளியிட்டிருக்கிறார். ஸ்ரீபராசரபட்டர் என்னும் பெருமை வாய்ந்த வைணவ ஆசிரியர் பெருமான் "ஆயிரநாமங்களும் எண்ணிறந்த நற்குணங்களைக் காட்டுகின்றன" என்று அவர் எழுதிய விரிவுரையில் விளக்கியுள்ளார். ஆயிரம் என்று இறைவனது நாமங்களை அளவுபடுத்திப் பேசுவது பொருத்தமன்று என்றுணர்த்த

"பேரும் பல பலவே" என்று பாடிப் போந்தார் நம்மாழ்வார்.

(4) நாராயண நாமம்

இப்படியிருக்கச் செய்தேயும் "நாராயணன்" எனும் திருநாமத்தில் மிகுந்த இனிமையையும், ஆழ்ந்த பல பொருள்களையும் கண்டு இன்புறுகிறார்கள் வைணவர்கள். "எனக்கென்றும் தேனும் பாலும் அமுதமாகிய திருமால் திருநாமம் நானும் சொன்னேன். நமரும் உரையின் நமோ நாராயணமே" என்ற திருமங்கை யாழ்வார் பாடல் காண்க. இதற்கு முக்கிய காரணம் இந்த "நாராயண" என்ற திருநாமம் வைணவத்துக்கு அடிப்படையான விசிட்டாத்துவைத சித்தாந்தத்தைநன்கு தெரிவிக்கிறது. எல்லாப் பொருள்களும் நாராயணனுள் அடக்கம். எல்லாப் பொருள்களிலும் நாராயணன் உறைகின்றான் என்ற இரு பொருட்களையும் தரும் வல்லமையுடையது அச்சொல். இதை வெகு அழகாகக் கூறுகிறார் திருமழிசை ஆழ்வார். "நன்றாக நான் உன்னையன்றி யிலேன் கண்டாய் நாராயணனே! நீ என்னையன்றி இலை". நமது உடலுக்கு உயிர்போல உலகத்திலுள்ள எல்லா (அறிவுடைய) ஆன்மாக்களுக்கும், (அறிவில்லாத) ஜடப் பொருள்களுக்கும் நாராயணனே உயிர். சித்து, அசித்து, இறைவன் என்று தத்துவங்கள் (என்றுமுள வஸ்துக்கள்) மூவகைப்படும். சித்தும் அசித்தும் இறைவனுக்கு உடல். சித்துக்கும், அசித்துக்கும் இறைவன் ஆன்மா. இவ்வகையில் உடல், உயிர் தொடர்பு (சரீர சரீரி சம்பந்தம்) தான் வைணவர்களுடைய முக்கியமான சித்தாந்தம்.

(5) உபநிடத ஒற்றுமை

உபநிடதங்கள் உலகம் வேறு தெய்வம்வேறு என்றுசில இடங்களிலும், தெய்வம்தான் உண்டு, உலகம் என்பது உண்மையான தொன்றில்லை; மன மருட்சியால் அப்படியொரு உலகம் (நாம் உள்பட) இருப்பதாகத் தோற்றம் ஏற்படுகின்றதேயன்றி. அது மெய்யன்று என்று சில விடங்களிலும் ஒன்றுக்கு ஒன்று முரண்படுவதுபோல் பேசிப் போந்தன. உடலும், உயிரும் போல் என்ற உவமையால் ஒன்றே யெனினும் பல வெனினும் இரண்டும் கூடும் என்று உபநிடதங்களில் ஒற்றுமையைக் கண்டவர்கள் வைணவர்கள். இந்த உடல்-உயிர் உவமையை இயம்பினதும் ஒரு உபநிடதந்தான். அதன் உதவியைக் கொண்டு உபநிடதங்கள் ஒருமிடறாகவே ஓதியுள்ளன என்று உபநிடத வாக்கியங்களுக்குள் ஒற்றுமையைக் காட்டினார்கள் வைணவ ஆச்சாரியர்கள்.

அவ்வாறே பரம்பொருளுக்குக் குணம் உண்டா, இல்லையா என்ற விஷயத்திலும் உண்டு என்று கூறும் சில உபநிடதங்கள்; இல்லையென்று கூறும் வேறுசில உபநிடதங்கள். இவ்விரண்டு வகைப்பட்ட மறைகளையும், எல்லா நற்குணங்களும் உண்டு என்பது உண்டு எனும் உபநிடதங்களின் கருத்து; தீய குணம் எதுவுமில்லை யென்பது மற்றைய வைகளின் கருத்து என்று பொருள் படுத்தி மீண்டும் மறையில் முரண்பாடு என்ற குற்றம் இல்லாமல் செய்துவைத்தார்கள். "உயர்வற உயர்நலம் உடையவன்" என்ற நம்மாழ்வார் திருவாய்மொழியின் முதற் சொற்கள் காட்டிக் கொடுக்கும் பேருண்மையிது. ஸகுணன் (குணத்தோடு கூடியவன்), நிற்குணன் (குணமில்லாதவன்) இரண்டும் இறைவனுக்கு இரு அடையாளங்கள். (உபய லிங்கம்)

குணம் என்று பொதுவாகச் சொல்லப்பட்டிருப்பினும் உருவம், பெயர் முதலியவைகளெல்லாம் அதனுள்

அடக்கம். இவைகளெல்லாம் திருமாலுக்கு உண்டு. நற்குணங்களும், பேரழகு பொருந்திய வடிவங்களும், இனிய பல திருநாமங்களும் (பெயர்களும்) உடைய திருமால்தான் பரதெய்வம். அவனிடத்து அன்பு பூண்டு அவனுக்குத் தொண்டு புரிவதே நாம் பெறவேண்டிய பேறு. அப் பேற்றை நாம் அடைவதற்கு அவனருள் ஒன்றே வழி (உபாயம்)–இவைகள்தாம் வைணவத்தில் முறையே தத்துவமும், புருஷார்த்தமும், இதமும்.

(6) ஐவகை வடிவங்கள்

பேரழகு படைத்த பல வடிவங்களுடையவன் திருமால் என்று சொன்னோம் அவ் வடிவங்கள் ஐவகைப் பட்டனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

(1) பரம்: இது கலங்காப் பெருநகரான வைகுந்தத்தில் விளங்கும் ரூபம்.

(2) வியூஹம்; வாசுதேவன், சங்கர்ஷணன்' பிரத்துயும்னன், அநிருத்தன் என்று பிரிந்து விளங்கும் நான்கு வடிவங்கள் பாற்கடலுள் பையத்துயிலும் பரமனது வடிவமும்' கேசவன், நாராயணன், மாதவன் முதலிய பன்னிரண்டு வடிவங்களும் வியூஹ வடிவங்களாகும்.

(3) அந்தரியாமி (உட்புகுந்து நிற்கும் வடிவம்: ஒவ்வொருவருடைய இதயத்தினுள் விளங்கும் வெகு சிறு வடிவம். “தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை” என்று இதைப் போற்றுவார் திருமங்கை யாழ்வார். அடிநீயனுள்ளான் என்பார் நம்மாழ்வார்.

(4) விபவம்: இதைப் பொதுவாக அவதாரம் என்று கூறுவார்கள். இம் மண்ணுலகில் பிறந்து, மக்களனைவரும் உட்கண்கொண்டு காணும்படி இறைவன் எடுக்கும் வடிவங்கள் இவை. ‘பிறப்பில்லாப் பெருமானே பல் பிறவிப் பெருமானகத் திகழ்கிருன்!’ என்று ஒரு உபநிடதம் கூறும். ‘பிறந்து பிறந்து புகர் மிக்கு விளங்குமவன்” என்று வேெருரு உபநிடதம் பேசும். “உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய், இமையோர் தலைவா!’ என்று இப்பெருமையை யெண்ணி அதனல் வெளியாகும் எளிமைக்கு மனமுடைந்து கூப்பிடுகிருர் நம்மாழ்வார். கணக்கற்ற பிறவிகள் எடுத்திருப்பினும், அவற்றுள் மீன், ஆமை, கேழல், அரி, குறள், மூன்று இராமன்கள், (பரசுஇராமன், இராமன், பலராமன்), தாமோதரன், (கண்ணன்). கற்கியென்று பத்து அவதாரங்களைத் தனிப்பட்ட “தசாவதாரம்” என்று போற்றுவது மரபு.

(5) அர்ச்சை: (விக்கிரஹ வடிவங்கள்):- ஆலயங்களில் ஆகமவிதிப்படி பிரதிஷ்டை செய்யப்பட்டு பூஜையில் இருக்கும் வடிவங்கள். இவைகள்தாம் இக்காலத்தவர்களுக்கு நன்கு பயன்படக் கூடிய இறைவனது திருவடிவங்கள். தாகத்தால் பீடிக்கப்பட்டு தண்ணீர், தண்ணீர், என்று தவிக்கும் ஒருவனுக்கு அண்டத்துக்கப்பால் ஓடும் நீரும், பூமிக்குள் ஊற்ருகப் பாயும் நீரும், மழைகாலத்தில் வெள்ளமிட்டோடி இப்போது வறண்டு கிடக்கும் ஆறுகளும் எப்படிப் பயன்படாவோ, அப்படி முதல் நான்கு வடிவங்களும் கடவுளைக் காணவேண்டும் என்று பேரவா படைத்தோருக்குப் பயன் படமாட்டா. தாகத்தைத் தணிக்க அருகிலிருக்கும் ஏரிகளும், குளங்களுமே உபயோகப்படுவது போல் நமது அவாவைப் பூர்த்தி செய்து விடாயைத் தணிக்க ஆலயங்களில் உறையும் எம்பெருமான்களே வல்லமையுடையவர்கள்.

இவ்வைந்து ரூபங்களையும் நம்மாழ்வார் ஒரு பாசுரத்தின் முற்பாதியில்

சுருக்கிக் காட்டியிருக்கிறார். "விண் மீதிருப்பாய், மலை மேல் நிற்பாய், கடல் சேர்ப்பாய், மண்மீதுழல்வாய், இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்'' இவை முறையே பரம், அர்ச்சை, வியூஹம், விபவம், அந்தரியாமி என்ற ரூபங்களைக் குறிப்பன.

(7) இலக்கிய வடிவங்களும் ஐந்து

திருமால் எடுக்கும் ரூபங்களுக்குச் சேர, திருமாலை நமக்குக் காட்டிக் கொடுக்கும் வேதமும் வடிவமாறிக் காட்சியளிப்பது காணலாம். பரரூபத்தை வேதமும், வியூஹ ரூபத்தை பாஞ்சராத்திர சாத்திரமும், அந்தரியாமி ரூபத்தை தருமசாத்திரங்களும், விபவரூபத்தை இதிஹாஸ புராணங்களும், அர்ச்சா ரூபத்தை ஆழ்வார் பிரபந்தங்களும் முறையே நன்கு விளக்கி வைப்பதால் வேதம் பல்வேறு வேடம்பூண்டு விளங்குகிறது என்று கொள்ளப்பட்டிருக்கிறது.

(8) ஆலய வழிபாட்டின் பெருமை

ஆழ்வார்கள் அருளிச் செயல்களாகிற திவ்வியப் பிரபந்தங்களை நன்கு பயின்றவர்களுக்கே ஆலயங்களில் விளங்கும் இறைவன் தனது முழு மஹிமையையும் ஒன்றும் ஒளிக்காமல் காட்டியருள்வான். இராமனுடையவும், கிருஷ்ணனுடையவும், திருமேனிகள் அக்காலத்தவர்களால் எப்படி எப்படி யெல்லாம் அனுபவிக்கப்பட்டனவோ, அப்படி அப்படி யெல்லாம் ஆலய எம்பெருமான்கள் இவர்களுக்கு அனுபவ விஷயமாகின்றனர். இது பொன்னால், வெள்ளியால், செம்பினால், சிலையால் ஆகிய உரு என்ற எண்ணத்தை அறவே ஒழித்தவர்கள் இவர்கள். இதுமிக உயர்ந்த கொள்கை; மிகவும் வியக்கத்தக்க மனநிலை. "இந்த எம்பெருமானை நான் இங்கே காதலித்துக் கண்ணாரக் கண்டு அவனுக்கு நான் எல்லாவிதமான தொண்டுகள் புரிவதைக காட்டிலும், இனிப்போய் வைகுந்தத்தில் அவனை வழிபடுவது இனிது என்று எனக்குத் தோன்றவில்லை — என்பதே இவர்கள் எண்ணம், பேச்சு, செயல்.

முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே! தானாக அசைவதில்லை, பேசுகிறதில்லை என்பதால் செயலற்ற மூர்த்தியென்று எண்ணவேண்டா. திருமழிசையாழ்வார் கட்டளைப்படி பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு ஆழ்வார் பின் சென்றும், மறுபடி அப்பைந்நாகப்பாய் விரித்துப் படுத்தும் திருவெஃகா எம்பெருமான் செய்தருளிய பெருமையையும் திருக்கச்சி நம்பிகளோடு கச்சித் திருப்பதியில் வாழும் கரிகிரிக்காவலனம் வரதராஜப் பெருமாள் வார்த்தையாடினதையும், இன்னும் இவைபோன்ற பல நிகழ்ச்சிகளையும எண்ணி யெண்ணி, மனம் பூரித்து நிற்பார்கள். இம்மெய்யடியார்கள் தமக்கும் அப்படியே அருள்புரிய வேண்டுமென வேண்டுவார்கள். "நம்மை யொருகால் காட்டி நடந்தால் நாங்களுய்யோமோ'' என்று இறைஞ்சி மன்றூடுவர் மங்கை மன்னன் எள்ற திருமங்கையாழ்வார். ஆழ்வார்களுக்குள் இவரும், ஆசார்யர்களுக்குள் வேதாந்த தேசிகனும் "இச்சுவை தவிரயான் போய் வைகுந்தமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்'' என்றுமிக மன உறுதியுடன் பேசியிருப்பதும், அந்த உறுதிப் பாட்டை ஆணையிட்டுச் சொல்லியிருப்பதும் நன்கு கவனிக்கவேண்டிய விஷயங்கள். ஆழ்வார்கள், ஆசார்யர்களனைவருமே அப்படிப்பட்ட எண்ணம் மேலிட்டவர்கள். அவர்களை அடியொற்றி இம்மையிலேயே பேரின்பம் பெறுவது வைணவர்கள் அனைவருக்கும் கிட்டக் கூடிய வாழ்ச்சி.

(9) அடைக்கலம் அடைதல்

இப்படிப் "பெறுவதெல்லாம் இங்கேநாம் பெற்றுவாழப்'' பாரித்தோமாயின் அப்பேற்றை நமக்குத் தந்துதவுவது அவனதின்னருளே. அவனருளாலேதான்

அவன் தாள் வணங்கப் பெறலாம். அவ்வருள் நம்நற்கதிக்கு ஒருஉபாயமாகிறது. "நின்னருளாம் கதியன்றி மற்றென்றில்லேன்" என்ற உறுதியும் நீயே புகல் என்ற துணிவும் ஏற்பட்டு, மன்னிருளாய் நிற்கும் நிலையைத் தீர்த்து, வானவர் தம் வாழ்ச்சியை நமக்குத்தர திருமாலேயே உபாயமாக வரிப்பது, பிரபத்தியென்றும், சரணகதி யென்றும் சொல்லப்படும். அடைக்கலம் புகுதல்என்பதே அச்சொற்களுக்குப் பொருள். ஆருகக் கருதப்படும் அருங்கருமம் (கருமயோகம்) ஞானம் (ஞானயோகம்) காதல் (பக்தியோகம்) என்பவைகளைப் பின்பற்ற அறிவும், ஆற்றலும் நம்மிடம் இல்லாதபடியால் அவைகள் ஒன்றும் நமக்குத் துணையாக மாட்டா என்று தெளிந்து எத்திசையும் உழன்றோடி, இளைத்து இராமன் திருவடிகளில் போக்கற்று விழுந்த அக்காகம் போல், நாமும் திருமால் திருவடிகளில் அடைக்கலம் புகுந்தோமானால், வருத்தம் பொருவருளால் அத்திருமால் நம்மை அடைக்கலப் பொருளாக ஏற்றுக் கொண்டு, நமக்கு இங்கேயே எல்லா நலன்களையும் அளித்து நம்மை வாழ்வித்தருள்வான்.

### (10) அடியார் மாண்பு

இதற்குமேலும் ஒருபடி வைணவம் ஓங்கி வளர்ந்திருக்கிறது. திருமாலுக்குத் தொண்டுசெய்வது உயர்ந்த பேறுதான். ஆனல் அதனிலும் உயர்ந்தபேறுதிருமாலடியார்க்குத் தொண்டு பூண்டு நிற்பது. இதுவே வைணவத்தில் மனிதன் பெற விரும்பும் பயன்களின் எல்லைநிலம் என்று காட்டப்பட்டிருக்கிறது. இராமாயணத்தில் இராமன் தம்பிகளான மூவருக்குள் சத்துருக்கனனுக்கு மிகுந்த ஏற்றம்சொல்வதுண்டு. இராமனிடத்தில் மிகுந்த காதல் பூண்டு நின்றவர்கள் பரத நம்பியும், இலக்குவனும். பரதனிடத்தில் பெருங்காதல் பூண்டு விளங்கினன் சத்துருக்கனன். இராமனுக்கு இலக்குவன் எப்படியோ அப்படிப் பரதனுக்குச் சத்துருக்கனன். "பரதனும் இளவலும் ஒரு நொடி பகிராது ..... எனையாள் வரதனும் இளவலும் என மருவினரே" என்று கம்பன் இதைப் பாராட்டுவான். சத்துருக்கனனைத் தான் வான்மீகி 'ஒரு குற்றமுமற்றவன்' (அநக:) என்று புகழ்ந்திருக்கிறர். அதேபோல் நம்மாழ்வாரிடத்து அடிமை பூண்டு நின்ற மதுரகவியாழ்வாருக்கு மிகப் பெருமை பகரப்படுகிறது. நம்மாழ்வார், "சொல்லினும், தொழிற்கணும், தொடக்கருத அன்பினும், அல்லும் நன் பகலினேடுமான மாலை, காலையும்" திருமாலையன்றி அறியாதவர். அந்த நம்மாழ்வாரையன்றித் "தேவு மற்றறியேன்" என்று இருந்தவர் மதுரகவி யாழ்வார். "திருமாலைக் காட்டிலும் குருகூர் நம்பி எனக்கு மிகவும் இனியராகிருர்" என்று தொடங்கிப் பதிகம் பாடிய மதுரகவிகள் இறைவனைப் பின்பற்றுவதிலும், இறைவனது மெய்யடியார்களைப் பின்பற்றுவது சாலச் சிறப்புடைத்து என்று காட்டிப் பாடிப் போந்தார். "அன்பர்க்கே அவதரிக்கும் ஆயன் நிற்க அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி" என்று இவருக்குப் பட்டமளித்தார் வேதாந்த தேசிகனும் ஆசிரிய வள்ளல். ஆழ்வார்களுக்குள் தலைவர் எனக் கருதப்படும் நம்மாழ்வார், அடியார்கள் பெருமையைப் பல இடங்களில் தமது நூல்களிலே பரக்கப் பேசியிருக்கிருர். இந்த அரும் பொருளையே நல்லுபதேசமாகக் கொண்டு, அந்த நம்மாழ்வாரையே தெய்வமாகவே மதித்து மாணபுற்ருர் மதுரகவிகள். இந்த முறையில்பின்புள்ள வைணவ ஆசிரியர்களனைவரும் "பகவானுக்கு ஆட் செய்வதில் சிறந்தது பாகவதர்களுக்கு ஆட் செய்வது" என்று அறுதியிட்டிருக்கிருர்கள். "வாய்க்கொண்டு மானிடம் பாடேன்" என்ருர் ஆழ்வார். அவர் மரபிலே வந்தவேதாந்த தேசிகன், "திரு

மாலிடம்நான் செல்வத்தையோ, மோகத்தையோ இரக்கமாட்டேன் எந்நாவினல்; ஆனால் திருமாலடியாருடைய உறவை யான் என்றென்றும் பெறவேண்டும்'' என்று ஓரிடத்தில் பாடியிருக்கிறர். பெரியார்க்கு ஆட்பட்டக்கால் பெருத பயன் பெறலாம் என்று நன்கு உணர்ந்தவர்கள் வைணவர்கள். இவர்களுடைய இந்த உயர்ந்த மனப்பான்மையை அழகாகச் சித்திரித்துக் காட்டும் ஒரு பாசுரத்தோடு இக்கட்டுரை முடிக்கப்பெறுகிறது

தனிமாப் புகழே எஞ்ஞான்றும்
நிற்கும் படியாத் தான்தோன்றி,
முனிமாப் பிரம முதல்வித்தாய்,
உலகம் மூன்றும் முளைப்பித்த,
தனிமாத் தெய்வத் தளிரடிக்கீழ்ப்
புகுதல் அன்றி அவனடியார்
நனிமாக் கலவி இன்பமே
நாளும் வாய்க்க நங்கட்கே.





மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

9-11-1919 இல் சங்க நிலையத்தில் எடுக்கப்பெற்றது.

# மகாகவி பாரதியாரின் காரைக்குடி வருகை.



காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் (9-11-1919) எடுக்கப்பெற்றது.

இடமிருந்து வலம் : அ. மு. க. மு. க. கறுப்பன் செட்டியார், ராய. சொக்கலிங்கன், மகாகவி சுப்பிரமணிய பாரதியார், சொ. முருகப்பர், கி. நாராயணன் செட்டியார், நிற்பவர் மு. நடராசன்.




## மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

### நம் சங்கத்திற்கு எழுதிய

# கடிதம்

ஓம் சக்தி

28.11.19

கடயம்
9 - நவம்பர் - 1919.

ஸ்ரீமான் செ. அ. ராம - முருகப்ப செட்டியாருக்கு
மஹாசக்தி அமரத் தன்மை தருக.

அன்று காரைக்குடியிலிருந்து மோட்டார் மதுரைக்கு வர இரவு நேரமாய் விட்ட படியாலும், மிஸ்டர் ராமசாமி செட்டியார் வெளியூருக்குப் போய்விட்டதினாலும், நான் வாக்குக் கொடுத்த படி மதுரையிலிருந்தே நமது சங்கத்தின் மீது வாழ்த்துப் பாட்டெழுதி யனுப்ப சௌகர்யப் படாமல் போயிற்று. பொறுத்துக் கொள்ளுங்கள்.

இன்று இக் கடிதத்துடன் ஒரு பாட்டெழுதி யனுப்புகிறேன். இது தங்கள் கைக் கெட்டிய செய்தியை உடனே எழுதித் தெரிவிக்கும் படி பிரார்த்திக்கிறேன். இப் பாட்டுக்களும் [illegible] பற்றி நான் எழுதிக் கொடுத்த தனிக் காகிதமும் அச்சான வுடன் எனக்குச் சில பிரதிகள் அனுப்பும் படிக்கும் அன்றியும் நம் நண்பர் எல்லோருக்கும் என்னுடைய ஆசீர்வாதம். வந்தனங்கள் கூறும் படிக்கும் வேண்டுகிறேன்.

தங்கள் அன்புடைய
சி. சுப்பிரமணிய பாரதி.

# வாழ்த்துப் பாக்கள்

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் பாடியவை

மண்ணுலகின் மீதினிலே
எக்காலும் அமரரைப் போல்
மடிவுஇல் லாமல்
திண்ணமுற வாழ்ந்திடலாம்;
அதற்குரிய உபாயம்இங்கு
செப்பக் கேளீர்!
நண்ணிஎலாப் பொருளினிலும்
உட்பொருளாய்ச் செய்கைஎலாம்
நடத்தும் வீருய்த்
திண்ணியநல் அறிவுஒளியாய்த்
திகழும்ஒரு பரம்பொருளை
அகத்தில் சேர்த்து; (1)

செய்கைஎலாம் அதன்செய்கை,
நினைவுஎலாம் அதன்நினைவு,
தெய்வ மேநாம்
உய்கைஉற நாமாகி
நமக்குள்ளே ஒளிர்வதென
உறுதி கொண்டு,
பொய்,கயமை, சினம்,சோம்பர்,
கவலை,மயல், வீண்விருப்பம்,
புழுக்கம், அச்சம்,
ஐயம்எனும் பேயைஎலாம்
ஞானம்எனும் வாளாலே
அறுத்துத் தள்ளி; (2)

எப்போதும் ஆனந்தச்
சுடர்நிலையில் வாழ்ந்துஉயிர்கட்கு
இனிது செய்வோர்
தப்பாதே இவ்உலகில்
அமரநிலை பெற்றிடுவார்;
சதுர்வே தங்கள்
மெய்ப்பான சாத்திரங்கள்
எனும்இவற்றால் இவ்உண்மை
விளங்கக் கூறும்
துப்பான மதத்தினையே
இந்துமதம் எனப்புவியோர்
சொல்லு வாரே. (3)

அருமைஉறு பொருளில்எலாம்
மிகஅரிதாய்த் தனைச்சாரும்
அன்பர்க்கு இங்கு
பெருமைஉறு வாழ்வுஅளிக்கும்
நல்துணையாம் இந்துமதப்
பெற்றி தன்னைக்
கருதி, அதன் சொற்படிஇங்கு
ஒழுகாத மக்கள்எலாம்
கவலை என்னும்
ஒருநரகக் குழிஅதனில்
வீழ்ந்துதவித்து அழிகின்றார்
ஒய்வுஇ லாமே. (4)

இத்தகைய துயர்நீக்கிக்
கிருதயுகம் தனைஉலகில்
இசைக்க வல்ல
புத்தமுதாம் இந்துமதப்
பெருமைதனைப் பார்அறியப்
புகட்டும் வண்ணம்
தத்துபுகழ் வளப்பாண்டி
நாட்டினில்,கா ரைக்குடியூர்
தனிலே சால
உத்தமராம் தனவணிகர்
குலத்துஉதித்த இளைஞர்பலர்,
ஊக்கம் மிக்கார். (5)

உண்மையே தாரகம்என்று
உணர்ந்திட்டார்; அன்புஒன்றே
உறுதி என்பார்;
வண்மையே குலதர்மம்
எனக்கொண்டார்; தொண்டுஒன்றே
வழியாக் கண்டார்;
ஒண்மைஉயர் கடவுளிடத்து
அன்புஉடையார்; அவ்அன்பின்
ஊற்றத் தாலே
திண்மைஉறும் "இந்துமத
அபிமான சங்கம்'ஒன்று
சேர்த்திட் டாரே (6)

பலநூல்கள் பதிப்பித்தும்,
பலபெரியோர் பிரசங்கம்
பண்ணு வித்தும்,
நலம்உடைய கலாசாலை
புத்தகசா லைபலவும்
நாட்டி யும்தம்
குலம்உயர நகர்உயர
நாடுஉயர உழைக்கின்றார்;
கோடி மேன்மை
நிலவுறஇச் சங்கத்தார்
பல்ஊழி வாழ்ந்துஒளிர்க
நிலத்தின் மீதே. (7)

## திரு. சொ. முருகப்பர்

அந்தணர் வாழ்ந்திடுக! அறமனைத்தும்
தழைவுறுக! அமரர் கோவாம்
இந்திரனும் வேண்டிநிற்கும் இந்தியநாடு
எந்நாளும் இனிது வாழ்க!
செந்தமிழின் மொழிவாழ்க! தேயமெலாஞ்
செழித்திடுக! செல்வம் ஓங்கி
இந்துமதக் கொள்கையுள்ளார் எந்நாட்டி
னும்வாழ்க இனிது மாதோ!

## கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

சங்கப் பலகையிலே—அன்று
தனியமர்ந்த நூலாம்
பங்கய நான்முகனே—தமிழில்
பகர்ந்த மாமறையாம்
ஆதி மனு நூலைத்—திருத்தி
அமைத்த நன்னூலாம்.
நீதி எடுத்தோதப்—புவியில்
நிகரிலா நூலாம்;

புத்தகக் காட்டினிலே—புகுந்து
புத்தி மயங்குவதேன்?
பத்தியோ டிந்நூலை—நிதமும்
படித்தல் போதுமையா!
ஓதி அறம்தெரிவீர்!—பொருளின்
உண்மை உணர்ந்திடுவீர்!
காதலின் காட்சியெல்லாம்—நன்கு
கண்டு களித்திடுவீர்!

தேவர் திருவள்ளுவர்—வாழி!
திருமறைச் செல்வர்வாழி!
பூவுல கம்புகழும்—செந்நாப்
போதார் வாழிவாழி!
செந்தமிழ் என்றும்வாழி—தெய்வத்
திருக்குறள் என்றும்வாழி
இந்து மதம்போற்றும்—சங்கம்
என்றுமே வாழிவாழி 1

இந்து மதத்தின் உண்மையெலாம்
இனிது போற்றித் தனவணிகர்
முந்து செல்வத் திருக்காரை
மூதூர் அதனில் அன்போடு
தந்த சங்கம் நீடூழி
தழைத்து வாழப் பிறைசூடும்
எந்தை பாத கமலங்கள்
ஏத்தி ஏத்தித் தொழுவோமே 2

## திரு ச. வையாபுரிப் பிள்ளை

தெய்வத் தமிழும்
சிறந்த சமயமுமே
உய்வைத் தருமென்று
உளங்கொண்டே—ஐயைந்து
யாண்டுகட்கு முன்னர்
இயைந்த இளங்கோக்கள்
ஈண்டமைத்தார் சங்கம் இனிது 1

அறிவு செழிக்க
அறஞ்செழிக்க அன்பர்
செறிவு செழிக்கத்
திகழும்—நெறிசெழித்து
மெய்வளர விள்ளுஞ்
சமயம் மிகவளர
எய்தியதால் வெள்ளிவிழா இன்று. 2

எங்கும் தமிழ்முழக்கம்
எங்கும் அறமுழக்கம்
எங்கும் இனிய
இசைமுழக்கம்—எங்கும்
திருவார் குலவணிகச்
சீராளர் போற்ற
வருவார் முழக்கம் மலிந்து. 3

தலைமை மணவழகன்
தாங்கத் தகைசேர்
புலமைப் பெருமக்கள்
போற்ற—அலகிலா
அன்பர்கள் ஆர்ப்ப
அணிகொள் நகரத்தார்
இன்ப விழாச்செய்தார் இன்று. 4

நீடுழி வாழ்கஇச்
சங்கம்! நிலவுதமிழ்
நீடுழி வாழ்க
நெறிபேணி!—நீடூழி
வாழ்க சமயம்!
மகிழ்ந்துயிர்கள் அன்புற்றே
வாழ்க இறைவனருள் வாய்த்து. 5

## திருச்செந்தூர் திரு. மு. கிருஷ்ண சர்மா

பன்னாட் டினும்சென்று
பத்திமுத லாயவெலாம்
இந்நாள் உபந்யசித்தற்
கேற்றவிஸ்வ நாதனும்ஃது
எந்நாளும் நின்றுலவ
ஈகைசெயுஞ் செல்வர்களும்
நின்னு தரம்பெற்று
நீடுய்யச் செய்முருகா!

## பரலி திரு சு. நெல்லையப்பர்

திருவளர் காரைக் குடிநகர் மேவும்
பெருவள இந்தும தாபி மான
சங்கம்பல் லாண்டாய்த் தக்க திருப்பணி
பங்கம் இன்றி ஆற்றி,இப் பார்மிசை
நிலவு கின்றது நிகழும்இச் சுபானுவில்
பலர்புகழ் அந்தச் சங்கம் தனக்கு
வெள்ளி விழாவை மேம்படு முறையில்
தெள்ளியோர் கூடிச் சிறப்பிக் கின்றார்;
வாழ்கசங் கம்என வாழ்த்திநிற் கின்றார்;
போழ்இள மதியன் பொன்னார் சேவடி
நாளும் பரவி நலமிகு சங்கம்
மாநிலம் தன்னில் வண்தமிழ் வளர்த்தும்
வான்உயர் இந்து மதத்தினை வளர்த்தும்
அன்பு வளர்த்தும் அறிவு வளர்த்தும்
இன்ப வாழ்க்கை இனிது வளர்த்தும்
ஏழை மக்கள் இதம்பெற வளர்த்தும்
தாழ்வு நீக்கிச் சமரசம் வளர்த்தும்
வாழ்கபல் லாண்டெனவாழ்த்துகின்றேனே.

## நாமக்கல் கவிஞர்

இந்து மதத்தின் ஏற்றம் போற்றித்
தந்திடல் ஒன்றே தன்குறிப் பாகக்
காரைக் குடிக்கொரு கனதையுண் டாக்கி
பேரும் புகழும் பெருகிடச் செய்த
இந்தும தாபி மானஇச் சங்கம்
செந்திரு மிகுந்த செட்டிமார் நாட்டின்
சோதியாய் விளங்கித் தீதிலா திருக்க
ஆதியும் நடுவும் அந்தமும் அற்றான்
ஊழியான் கருணையை உள்ளத் திருத்தி
வாழிய வென்றே வாழ்த்தி வணங்குவோம்.

## பண்டிதை அசலாம்பிகை அம்மையார்

சீர்க்காரைத் தளைப்படுத்தித்திகழ்காரைக்
குடிநகரில் செல்வம் ஓங்கிக்
கார்க்காரை ஒத்தகொடைக் கரவணிகர்
இந்துமதம் கதித்தே வாழப்
பேர்க்காத ஊக்கமொடும் பேணிவளர்த்
திடுசங்கம் பெரிதும் ஓங்கிப்
பார்க்கோரு தாரணமாய்ப் பரமனரு
ளால்ஒடிப் படர்ந்து வாழ்க!

## திரு. வெ. முத்துச்சாமியையர்

கான முந்து காரையில்
வான இந்து வளரொளி
மான இந்து மதஅபி
மான சங்கம் வாழ்கவே. 1

பொங்கிரு பொருளுஞ் சேரும்
புகழ்மிகு நகரத் தாரால்
இங்கெழில் ஓங்கும் காரை
இந்தும தாபி மான
சங்கமும் அதனைப் போற்றும்
தகைமைசால் மாந்தர் யாரும்
மங்கள முற்று வாழ்க
வண்தமிழ் வயங்க மாதோ. 2

## திரு. ம. கோபாலகிருஷ்ண ஐயர்

பீடுடைய ஸ்ரீராம கிருஷ்ணனெனும்
பரமஹம்ஸன் பிறப்புக் காதை
நாடியிவண் கேட்டுவக்கும் நலம்வாய்ந்த
நல்லோர்கள் நாளும் வாழி!
ஈடறநம் இந்துமத அபிமான
சங்கமென்றும் இசைமிக் கோங்கித்
தோடுடைய செவிப்பெருமான் திருவரு
நீடூழி துலங்கி வாழி! [ளால் 1

இங்கித மேசெய் காரை
இந்தும தாபி மான
சங்கமும் நடத்து வோரும்
தகைமைசால் தேச பக்த
துங்ககோ ளரிகல் யாண
சுந்தரன் ஆதி யோரும்
புங்கவன் அருளி னாலே
பொலிந்துநீ டூழி வாழி! 2

## பண்டிதர் இராமசாமியையர்

துன்மதியாம் பேய்கள்
தொலையக் குருவின்சீர்
நன்மதியோ னும்விஸ்வ
நாதனின்று – கன்மதியும்
நெக்குருகக் கேட்டோர்
நினைந்துருகக் கேளாரும்
புக்குருகச் சொற்றான்
பொழிந்து. 1

பொற்காரை நேர்கொடைக்கைப்
புண்ணியராம் நம்வணிகர்
நற்காரை மாநகரில்
நாட்டி,யிசை—அற்கா
இயல்பிற்றும் இந்துமதத்
தெம்மவர்சீர்ச் சங்கம்
செயல்பெற்று வாழி திகழ்ந்து. 2

## வித்துவான் பூ. அமிர்தலிங்கன்

செந்தமிழைப் புதுமுறையில்
பாடு கின்ற
சிறப்புடைய மறுமலர்ச்சிப்
புலவர் கூட்டம்

வந்தனைசெய் பாரதியார்
நேரில் வந்தே
வாயார வாழ்த்துரைக்கும்
பேறு பெற்ற

இந்துமத அபிமான
சங்கம் இந்நாள்
இசையோங்கும் பொன்விழா
எடுத்தல் கேட்டுச்

சிந்தைநிறை மகிழ்ச்சியினுல்
வாழ்த்து கின்ருேம்;
சிறந்தோங்கிப் பல்லாண்டு
வாழ்க! என்றே! 1

வற்ருத அருள்மனத்தால்
வாரி வாரி
வழங்கிநின்ற அழகப்பன்
வண்மைப் பேற்ருல்

கற்கோவில் பலஓங்கக்
கலைகள் ஓங்கக்
கல்விநகர் எனஓங்கும்
காரை தன்னில்

முற்போக்குச் சிந்தனையார்
ஐம்ப தாண்டின்
முன்ஞெருநாள் தோற்றுவித்த
முதலாம் சங்கம்

நற்பணிகள் பலசெய்தே
நாளும் ஓங்க
நாவார வாழ்த்துகிருேம்
வாழ்க! நன்றே! 2

திரு. வி. க, வ. உ. சி,
நாட்டார் ஐயா
செந்தமிழ்ப்பண் டிதமணியார்,
சேது மன்னர்,

திருநெறிய ஞானியார்
அடிகள், மற்றும்
சித்பவா நந்தரொடு,
விபுலா நந்தர்,

மருவினிய சொற்செல்வர்
சேதுப் பிள்ளை,
மற்றிருந்த அறிஞரெலாம்
மகிழந்து கூடி

அருவியெனச் சொற்பொழிந்த
ஆன்ற சங்கம்
அவனருளால் பல்லாண்டு
வாழ்க! வாழ்க! 3

தமிழ்த்தென்றல் தவக்கையால்
கால்கோள் செய்யத்
தண்முத்துப் போலெழுந்து
தவழ்ந்த சங்கம்,

தமிழ்த்தாயின் தவப்புதல்வன்
முருகப் பாவின்
சாந்திமணி விழாவெடுக்கும்
தகவின் ஓங்கி,

தமிழ்க்கடலாம் சொக்கலிங்கன்
தலைமைப் பேற்ருல்
தக்கதொருமண்டபமும்
பொலிவும் பெற்றுத்,

தமிழ்க்கோவில் எனவிளங்கித்
தக்கோர் போற்றும்
தன்னேரில் நற்சங்கம்
தழைத்து வாழ்க! 4

மாகவிஞன் பாரதியின்
பாடல் பெற்ற
மதிப்பரிய தனிச்சங்கம்
மன்னி வாழ்க!

நாகரிகப் பண்பாட்டை
நயந்து போற்றி
நற்சமயப் பணிபுரியும்
சங்கம் வாழ்க!

பாகனைய செந்தமிழ்க்குத்
தொண்டு செய்யும்
பாவாணர் போற்றுதமிழ்ச்
சங்கம் வாழ்க!

ஏகமுறும் சிவநெறியின்
ஏற்றம் போற்றும்
இணையில்லாப் பெருஞ்சங்கம்
இனிது வாழ்க! 5

## காவேரிப்பட்டணம், திரு. ச. விசுவநாதன் – திரு. ச. வேங்கடேசன்

எழுந்தழற்செஞ் ஞாயிறெனப்
புவியொளிரப் பொலிவருளும்
இயல்பும், திங்கட்

கொழுந்தசையும் முடிப்பரமன்
மொழிப்பணியும், மதப்பணியும்,
குழைந்து யாங்கள்

தொழுந்தகைய பெருஞ்சிறப்பும்
பெற்றவர்கள் தனவணிகத்
தூயோர்; நெஞ்சை

உழுந்தகைய சொற்பெருக்கின்
இலக்கியங்கள் உயர்த்துமவர்
உயர்வென் சொல்வேம்? 1

கம்பனுயிர் கொண்டருளும்
காரைநகர் வாழ்ந்திவர்கள்
கடல்க டந்தே

உம்பரினும் வளம்கொழிக்கும்
பலநாட்டும் பொருள்ஈட்டி
உவந்து சால

இம்பர்அறப் பணிக்களவில்
ஈந்துலகின் இசைமுழுதும்
இயல்பிற் கொண்டு

வம்பவிழ்பூங் கொன்றைமுடிப்
பரமனையே மனத்திருத்தும்
வாழ்வின் மிக்கோர். 2

வந்துலகின் தோன்றுமுயிர்
போதுமெனுஞ் சிந்தையொடு
வருத்தம் நீக்கி

உந்தியெலாப் பொருட்களினும்
உயிர்ப்பொருளாய் நீக்கமற
உறையும் தெய்வச்

சிந்தையினுல் அன்பறிவும்
உண்மையருள் ஊக்கமிவை
செழிக்கச் செய்யும்

இந்துமதக் கருப்பொருளை
எம்மருங்கும் பரப்பிடுவான்
இசைவு கொண்டார். 3

ஆரிவரென் றறியுமுனே
அவிழ்ந்தொழுகக் காதலெழும்
அறிஞர் மேலோர்;

பேரிவரென் றெண்ணுமுனம்
''தமிழ்க் கட'' லென் பார்இவரெம்
பெரிய தந்தை;

காரிவரென் றையமுறக்
கவிபொழிவார்; கம்பனையும்
கடக்குந் நீரார்;

சீரிவர்தம் நட்பைஉயர்
செயல்வல்ல முருகப்பச்
செம்மல் கொண்டு, 4

உரைபெருக்க வியலாத
அரியபல சான்ருேர்தம்
உறவும் பெற்றுக்

கரைபெருக்குங் காதலினுல்
இந்துமத அபிமான
சங்கங் கண்டார்;

நரைபெருக்கும் வயதினிலும்
இளைஞரெனச் செயல்புரிந்த
நகை முகத்தார்;

திரைபெருக்குங் கடலமுதத்
தமிழ்வழங்கும் முருகப்பச்
சீரோர் என்ப! 5

தனித்தமிழின் சுவைவழங்கு
''திரு. வி. க. வும்'' கவிதை
தழைத்த ஞானி,

பனித்ததமிழ்ப் பாரதியும்
கவிமணியும் சங்கமிதைப்
பரிந்து வாழ்த்த,

'இனித்தமிழும் தலையெடுக்கும்'
'இனிச்சமயம் தலையெடுக்கும்'
'இறையும் வாழும்'

எனத்தருக்கத் தமிழ்பயிலும்
பள்ளியுடன் நூலகமும்
எடுப்பித் தாரே! 6

ஆயிரத்தொன் பானூற்றுப்
பதினேழில் தொடங்கியஇவ்
அரிய சங்கம்,

பாயிரம்பா ஆயிரமாப்
பலர்வாழ்த்தப் பல்லாண்டு
வாழ்க! வாழ்க!!

மாயிருஞா லம்மகிழச்
செயலாளர், உறுப்பினர்கள்,
மதிப்பின் மிக்க

நாயகரும் பல்லாண்டு
செயல்புரிந்து வாழ்கவென
நவில்கின் றேமால்! 7

## வித்துவான் எஸ். கே. இராமராசன்

கங்கையினைச் சடைக்கணிந்த
முக்கண் மூர்த்தி
கடலினிலே கண்வளரும்
கருணை மூர்த்தி
பங்கமிலா ஆலின்கீழ்,
தேரின் மீது
பண்புடனே யிசைத்திட்ட
மெய்ம்மை தன்னைச்
சங்கையின்றி விளக்காக்கி
மாந்தர் நெஞ்சில்
சால்புடனே ஏற்றிவைத்துச்
சோதி நல்கும்
மங்கலமாம் இந்துமதம்
சிறக்க வந்த
மாண்புடைய கலைச்சங்கம்
வளர்க வாழ்க! 1

மாற்றலர்கள் திறையளக்கப்
புலவர் வாழ்த்த
வந்தியர்கள் ஏத்தெடுப்பக்
கலைஞர் போற்றச்
சாற்றரிய பெருமையொடு
கொலுவி ருக்கும்
தமிழரசி பொன்னனை
மடியின் மீது
வீற்றிருக்கும் பாரதியார்,
உணர்ச்சி பொங்கி
வீறுபெறு செந்தமிழால்
வாழ்த்த நின்ற
ஏற்றமுறு தமிழ்ச்சங்கம்,
கலைவாழ் சங்கம்,
இந்துமத அபிமான
சங்கம் வாழ்க! 2

போதமுறு தனவணிகர்
நெஞ்சில் தோன்றி,
பொலிவுமிகு பாரதியின்
வாழ்த்துப் பெற்று,
கோதகன்ற இமயம்போல்
வளர்ந்து சாடும்
கொடும்புயற்கும் அசையாமல்
நிமிர்ந்து நின்று,
பூதலத்துக்கு உணர்வூட்டி,
இன்பம் நல்கிப்
பொய்ஞ்ஞானம் தனைவீழ்த்தி,
உண்மை கண்டு,
பேதமுறு துயரத்தை
ஓட்டும் தெய்வப்
பெருமைபெறு பெருஞ்சங்கம்
பொலிக! வாழ்க! 3

கயவர்கள்தம் நெஞ்சமெனக்
கிடக்கும் கல்லிற்
கடவுளையே பிறப்பித்த
சிற்பி போல,
மயலனைய கருஞ்சேற்றுக்
குவிய லின்கண்
மணமலரைத் தோற்றுவித்த
இயற்கை போல,
நயமருவு சொற்பெருக்கால்
வழங்கும் நூலால்
நானிலத்தோர் நெஞ்சமெலாம்
தெய்வம் வைகும்
இயல்பெருகு கலைக்கோயி
லாகச் செய்யும்
எழிற்சங்கம் தமிழ்ச்சங்கம்
என்றும் வாழ்க! 4

மன்னுயிர்கள் அத்தனையும்
உணர்வு பாழாய்
மாசற்ற செவித்துளைகள்
தூர்ந்து சோர்ந்து
தன்னிகரில் அறிவிழந்து
துன்பம் விஞ்சித்
தனியிருளே எப்புறத்தும்
செறிந்த ஞான்று,
பொன்னொளிகொள் ஞாயிறென
மெல்லத் தோன்றிப்
பூதலத்துக் கவலையினை
முற்றும் ஓட்டி,
பன்னரிய சோதியளித்து
இன்பம் நல்கும்
பண்புடைய தனிச்சங்கம்
பல்க! வாழ்க! 5

வில்லிபுத்தூர் தனிற்பிறந்த
செல்வக் கோதை
விருப்பமொடு நாள்தோறுஞ்
சூடித் தந்த
மல்லலுறு மாலையினைச்
சூடிச் சூடி
மலைபோலப் பூரிக்கும்
வயிரத் தோளான்
நல்லருளாற் பொன்னியைப்போல்
கங்கை யைப்போல்
நாட்டிற்குக் குன்றாத
வளத்தை நல்கி,
தொல்லியயக் குன்றம்போல்
நிலைத்து நின்று,
சுகம்நல்கி அருட்சங்கம்
சுடர்க! வாழ்க! 6

## ரெ. முத்துக்கணேசன்

செந்தமிழே தெய்வமெனக்
கைகு வித்தே
திருமுறையைப் போற்றிசெயும்
சிறந்த நாட்டில்

வந்தனைக்கே திருக்கோயில்
பலவும் நாட்டி
வருமனிதர் பசிதீர்த்து
வாழும் மக்கள்

பந்தவினைப் பற்றறுப்பார்
பரம னென்றே
பகுத்துரைக்கும் இந்துமதம்
பரவக் கண்ட

இந்துமத அபிமான
சங்கம் இந்நாள்
எடுக்கின்ற பொன்விழாஅ
இனிது வாழ்க ! 1

கலையறிவார்; கண்நோக்கால்
வருவார் உள்ளக்
கருத்தறிவார்; சமுதாயம்
திருந்து தற்கு

நிலையறிந்தே இச்சங்கம்
கண்டார்; அந்த
நிலைத்தபுகழ் முருகப்பர்
நெஞ்சம் வாழ்க !

மலைவிளக்கின் ஒளியாவார்;
திருமு றைத்தேன்
மறைபயிலும்திருவாயார்;
தமிழ்கொழித்துக்

கலைவளர்க்கும் தமிழ்க்கடலார்
சொக்க லிங்கர்
கைதவழ்ந்து தலைமைகொளும்
சங்கம் வாழ்க ! 2

துடிக்கின்ற மீசையோ
வீரம் காட்டும்;
துலங்குதிருப் பார்வையோ
மலரைப் பூக்கும்;

வடிக்கின்ற கவிதையோ
வாழ்வு காட்டும்;
வரைந்திட்ட காப்பியமோ
நீதி காக்கும்;

தொடுக்கின்ற சொல்மாலை
தெய்வம் காட்டும்;
சோர்வறியாக் கவியரசை
அழைத்து வந்து

கொடுக்கின்ற பாரதியின்
பாடல் பெற்றே
கோக்கவிஞன் விழாவெடுக்கும்
சங்கம் வாழ்க! 3

செங்குமுதம் பொழிநிலவைச்
சிரித்துக் கூடிச்
செவ்விதழால் மணம்பரப்பும்
தன்மைபோலச்

சிங்கநிகர் அறிஞரெலாம்
ஒன்று கூடிச்
சிந்துகின்ற சிந்தனையால்
சிறந்த சங்கம்,

பொங்குகடல் நவமணியை
அளிப்ப தேபோல்
பொதுமைஒளிர் தமிழ்மணிகள்
பூத்த அம்மா !

இங்குலகில் நாம்காணும்
நான்காம் சங்கம்
இச்சங்கம் என்றுரைத்தால்
புகழ்ச்சி யாமோ! 4

மோனத்தால் வங்கமுனி
முயன்ற ளித்த
முதுரையாம் மொழியமுதம்
பரப்பும் சங்கம்

ஞானத்தார் காந்தியடி
நாளும் போற்றி
ஞானமொழி வாசகத்தை
நவிலும் சங்கம்

தேனகத்தே வைத்துமலர்
பிலிற்று மாபோல்
திரு. வி. க. தேன்தமிழைச்
சிந்தும் சங்கம்

வானகத்தைப் புகழ்ச்செயலால்
மாந்தும் சங்கம்
வாய்த்தபொன் விழாச்சங்கம்
வாழ்க ! வாழ்க !! 5

# கருத்துரை

இன்று சங்கத்தின் பிரசாரகர் விசுவநாத சாஸ்திரியார், திருவண்ணுமலையில் உபந்நியாஸித்ததைப் பார்க்கும்பொழுது, பல இடங்களில் பல பிரசங்கங்கள் செய்தால் இந்துமதாபிவிருத்தி உண்டாம் என்பது நிச்சயம்.

ஸ்ரீ விலக்ஷுணனந்த சுவாமி
திருவண்ணுமலை
6-12-1919

மேல்நாட்டுக் கிருஸ்தவப்பாதிரிகள், உண்மையான கிருஸ்துவையும் அவர் உபதேசங்களையும் மறந்து, தங்கள் போலிக் கிருஸ்துவை நமது நாட்டில் நிலைநாட்டப் பகீரதப் பிரயத்தனம் செய்துவரும் இக்காலத்தில், ஸ்ரீ சாஸ்திரிகள் போன்ற இந்துமதப் பிரசாரகர்களின் வேலை மிகவும் இன்றியமையாததாகும். நாட்டுக்குப் புத்துயிர் ஏற்பட வேண்டுமானல், நமது மதத்திற்கும் புத்துயிர் ஏற்பட வேண்டும். அதற்கு இத்தகைய மதப் பிரசாரகர்கள் ஆயிரக்கணக்காக இருந்தாலும் மிகுதியாகாது.

ஸ்ரீ பரலி சு. நெல்லையப்பன்.
'நேசபந்தன்' உதவி ஆசிரியர்
ரௌத்திரி ஹூ,
கார்த்திகை மீ 28 உ

ஹிந்துமதாபிமான சங்கமானது, ஹிந்து தர்மத்தின் அடிப்படையான உண்மைகளை நூல் வாயிலாகவும், அநுபவ வாயிலாகவும் ஆராய்ந்துணர்ந்த அங்கத்தினர், ஒருங்கு கூடுதற்குரிய நிலையமாகப் புத்துணர்ச்சியும், புதிய ஆற்றலும் பெற்று விளங்கும்படி, ஆண்டவனது திருவருளும், நல்லோரது ஆசிமொழியும் இச் சங்கத்திற்கு என்றும் உளவாகுக.

—சுவாமி விபுலானந்தர்,
30–8–39.

ஹிந்துமதாபிமான சங்கம், வரகவி ஸ்ரீசுப்பிரமணியபாரதிஅவர்களால் பாடப்பெற்று, பாடல் ஸ்தலம் போன்ற பாடல் சங்கமாகிறது. நந்தமிழ்நாட்டில் இது போன்று பல்லாண்டு ஜீவித்திருக்கும் சங்கங்கள் வெகு சிலவே. பெரியோர்களின் ஆசியால் நிலைபெற்றிருக்கும் இச் சங்கம், அதன் ஆர்வமுள்ள நிர்வாகிகளின் முயற்சியால் பாரதியாரின்கவியில் சொல்லிய பிரகாரம் எல்லா முயற்சியிலும் வெற்றி பெற ஈசனைப் பிரார்த்திக்கிறேன். பல அறிஞர்களை அளித்த இச் சங்கம், எதிர் காலத்திலும் அறிவாற்றலிற் சிறந்த தவப் புதல்வர்களை அளிக்குமென நம்புகிறேன்.

அ. வேதரத்னம்
29 - 9 - 40

மனிதனுடைய முன்னேற்றத்திற்கு ஏதுவான, அனைத்துக்கும், ஹிந்து மதத்தில் இடம் உண்டு. அத்தகைய மதத்தில் அபிமானம் கொண்டதாயிருக்கிறது இச் சங்கம். இது அரும்பெருங் காரியங்களைச் செய்திருக்கிறது. இது வளர்பிறை போன்று வாழ்க!

—சுவாமி சித்பவானந்தா,
9—12—40.

24-வது ஆண்டு நிறைவு நடைபெற்ற சமயம் எனக்குத் தலைமை வகிக்கப் பாக்கியம் கிடைத்தது. வேதாந்தமும் தேசத்தொண்டும் ஒன்றென்று அறிந்த பேரறிஞர்களுடன் நான் கூடிப் பேசி மகிழ்ந்த நாட்கள் நினைவுக்கு வந்தன. பாரத தேசத்தில் உதித்த அறிவுதான், ஹிந்துமதம் என்ற புதுப் பெயர் கொண்டிருக்கிறது. இதை நாம் இழக்காமல் முன்னேறவேண்டும். இந்த நோக்கத்திற்கு இச் சங்கம் இன்னும் ஒரு பிங்கள வருஷம் வரை ஊழியம், செய்து அதன்

பிறகும் நீண்டகாலம் உயிருடன் நடை பெற்றுவர வேண்டும். எனக்கு ஆண்டு நிறைவு விழாவில் செய்யப்பட்ட கௌரவத்திற்கு நன்றி செலுத்துகிறேன்.

சி. இராஜகோபாலாச்சாரி,
31—1—42

காரைக்குடியில் மிகப் பழமையான, இந்துமதாபிமான சங்கத்தின் புகழ் தமிழ்நாடெங்கும் பிரசித்தி பெற்றது. இச்சங்கத்தைச் சிறந்த தேசபக்தர்கள் நிர்வகித்து வருகிறார்கள். இச்சங்கம் நீண்டநாள் நின்று நாட்டுக்குத் தொண்டாற்றுமாறு பிரார்த்திக்கிறேன்.

காமராஜ்.
தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித்தலைவர்.
சென்னை. 1-2-42

சுமார் இருபத்தைந்து வருஷத்திற்கு முன்னர், செட்டிநாட்டில் மேடைமேல் பேசுபவர் மிக அருமை. அதிலும் அருமை சங்கங்கள். அக் காலத்திலேயே இச் சங்கம் ஸ்தாபிக்கப்பெற்று நடந்து வருகிறது.

சமயம், சமூகம், தமிழ் மொழி இத் துறைகளில் இயன்றவரைப் பணி செய்து வருகிறது.

யான் பொதுமேடையில் முதலில் ஏறியது காரைக்குடி இந்து மதாபிமான சங்க மேடையில்.

இச் சங்கத்தின் தொண்டுகள் விரிந்து தொடர்ந்து நடைபெற விரும்புகிறேன்.

கா. இராமநாதன்,
பள்ளத்தூர் 12-12-43

நமஸ்காரம்,

பாரதியார் "மண்ணுலகின் மீதினிலே" என்று பாடிய காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தின் வெள்ளி விழாவில் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் தலைமை வகிப்பார் என்றால் பெரிய பாக்கியம்.

விழா நன்கு நடைபெற்று "கோடி மேன்மை நிலவுற இச் சங்கத்தார் பல்லூழி வாழ்ந்தொளிர்க" என்று நானும் ஆண்டவனை வேண்டிக்கொள்ளுகிறேன்.

சக்கரவர்த்தி ராஜகோபாலச்சாரி
15—12—43.

அன்பார்ந்த ஐயா,

நலம். காரைக்குடி இந்துமதாபிமான சங்கத்தின் வெள்ளிவிழா அறிக்கை கிடைத்தது. விழாவில் கலந்துகொள்ள முயல்வேன். இருபத்தைந்து ஆண்டுகளாக இந்துமதாபிமான சங்கம் பொதுவாகத் தமிழ் நாட்டுக்கும் சிறப்பாகத் தனவணிகர் வாழும் செட்டிமார் நாட்டுக்கும் சிறந்த தொண்டு செய்திருக்கின்றது. தமிழ் ஏன் என்று கேட்பாரற்று இருந்த காலத்தில் அருந்தமிழ்த் தொண்டுபுரிந்த பெருமை இச்சங்கத்திற்குரியதாகும். இந்து மதத்தின் சிறப்பினை மேலைநாட்டினரும் உணரும்படி செய்த விவேகானந்த அடிகளையும், அவருடைய குருநாதனாகிய இராமகிருஷ்ண பரமஹம்ஸரையும், இச்சங்கம் குறிக்கோளாகக்கொண்டு தொண்டாற்றி வருகின்றது சிவமணமும். தமிழ் மணமும் கமழ்கின்ற இச்சங்கம் பல்லாண்டு வாழ்ந்து, பொன்விழா முதலிய நல்விழாக்கண்டு தமிழ் நாட்டார்க்கு நலம்பல புரியும் வண்ணம் இறைவன் திருவருளை வேண்டுகின்றேன்,

இரா. பி. சேதுப்பிள்ளை,
11—12—'43

தமிழுக்குச் செட்டிமார் நாடு எத்தனையோ விதத்தில் துணைபுரிந்து வருகிறது. தற்காலப் போக்குக்கு இயைந்தவாறாகத் தமிழைக் கற்பதென்பதும் தமிழைப் புகட்டுவதென்பதும் இப்போது கண்கூடாகக் காண்கிற காரியங்கள். இந்த முன்னேற்றத்துக்கு அடிப்படையாயிருந்து தொழில் செய்துவந்த சங்கம் காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கம். சென்ற பதினைந்து வருஷங்களாக இச்சங்கத்தோடு உறவாடும் பாக்கியம் எனக்கு உண்டு. சங்கத்தின் மூலமாகவே தமிழ் அபிமானிகள் நூற்றுக்கணக்காக எனக்கு உற்ற நண்பர்களாய் விளங்குகிறார்கள். சங்கம் நீடூழி வாழ்ந்து தமிழ்த் தொண்டு இயற்றுமாறு இறைவனது அருளை வேண்டுகிறேன்.

டி. கே. சிதம்பரநாத முதலியார்
17—12—43

இந்துமதாபிமான சங்கம் சமயத்திற்கும், மொழிக்கும், பெரும் தொண்டாற்றி வருகிறது. இது தழைத்தோங்க எல்லாம் வல்ல இறைவன் துணை புரிவானாக.

கருமுத்து. தியாகராசன்
31—1—65

இதை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன்.

அ. மு. மு. முருகப்ப செட்டியார்
31—1—65

இந்துமதாபிமான சங்கம் 48 ஆண்டுகள் நிறைவெய்தியது. "அறுநான்கிரட்டி ஆறினிற்கழிப்ப" எனத் திருமுருகாற்றுப்படை கூறுவதுபோல, இத்தனை ஆண்டுகளாகச் சமயத்திற்கும், மொழிக்கும், நாட்டிற்கும் நல்ல தொண்டுகளைச் செய்து வந்ததுபோல, மேலும் மேலும், சிறந்த தொண்டுகள் செய்து விளங்கவேண்டும் என எல்லாம் வல்ல சிவபெருமான் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன்,

மாணிக்கவாசகஞானதேசிகர்
கா. மேலையூர்
12—9—65

மனித சமுதாயத்திற்குத் தொண்டு புரிந்த பழம் பெரும் பெரியவர்களின் நினைவுச் சின்னமாக விளங்கும் இந்து மதாபிமான சங்கம் மேன்மேலும் வளர்ந்தோங்க எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவானாக.

இச்சங்கத்திற்கு இன்று நாங்கள் வந்தது கிடைத்தற்கரிய பேறு என்றே கருதுகிறேன்.

தி. க. சண்முகம்
14-6-66



# ஐம்பதாவது
# ஆண்டு அறிக்கை




# இந்து மதாபிமான சங்கம்

**சிவன் கோவில் மேலை வீதி**

**காரைக்குடி**

நிறுவியது. 1917 பதிவு எண். S. 11/64

பிலவங்க - ஆவணி உ௪.

*9-9-67*

## சங்கம் இருந்த இடங்கள்

| | | |
|---|---|---|
| 1 | திருவாசக மடம்<br>கீழ ஊருணி வடகரை | பிங்கள - ஆவணி - 26 ஆரம்பம்.<br>(10--9—1917) |
| 2 | தருமவித்தியாசாலை<br>சிவன்கோயில் வடக்கு ரத வீதி | காளயுக்தி - சித்திரை - 30<br>(12—5—1918) |
| 3 | சிவ. மெ. லெ. மு. கி. பங்களா<br>முனீஸ்வரன் கோயில் சந்து | ரத்தாட்சி - சித்திரை - 12<br>(24—4—1924) |
| 4 | ராம. மு. ராம. சொ. பங்களா<br>சிவன்கோயில் சந்நிதி வீதி | குரோதன - வைகாசி - 3<br>(16—5—1925) |
| 5 | சா. நா. அ. நா. தோட்டம்<br>பசுமடம் வீதி | பவ - பங்குனி - 5<br>(18—3—1935) |
| 6 | சு. சொ. கும. மேல்மாடி<br>அம்மன் சந்நிதி வீதி | வெகுதானிய - பங்குனி - 19<br>(1—4—1939) |
| 7 | பழனி. மெ. மெ. பழ. வெ. வீடு<br>ப. அ. லெ. வீதி | தாருண - ஐப்பசி - 1<br>(17—10—1944) |
| 8 | சி. மு. வீடு<br>முத்தாளம்மன் ஊருணி வடகரை | கர - புரட்டாசி - 1<br>(17—9—1951) |
| 9 | சொந்தக்கட்டிடம்<br>சிவன்கோயில் மேலைரத வீதி | நந்தன - ஐப்பசி - 8<br>(24—10—1952) |

ஓம்

# இந்து மதாபிமான சங்கம்

## காரைக்குடி

## ஐம்பதாவது ஆண்டு அறிக்கை

**தலைவர் அவர்களே! அவையோர்களே!**

வணக்கம், இச்சங்கத்தின் 50-ஆவது ஆண்டு பொன்விழா அறிக்கையை உங்கள் முன் படிக்கப் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

**தோற்றுவாய்**

நமது சங்கத்தைக் குறித்துப் 'பாட்டுத்திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வேண்டும்' என்று பாடிய மகாகவி சுப்பிரமணியபாரதியார் 1919-ம் ஆண்டில் சங்கத்திற்கு நேரில் வந்து கண்டு பொங்கும் உவகையுடன் பாடிப் புகழ்ந்தார். இத்தகைய தனிப்பெரும் பேறுற்ற நமது இந்து மத அபிமான சங்கம் பிங்கள ஆண்டு ஆவணித் திங்கள் இருபத்தாரும் நாள் (10—9—1917) "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற அப்பர் சுவாமிகளின் அருள்வாக்கின்படி இளைஞர் பலரால் தோற்றுவிக்கப்பெற்றது. 'செட்டிமார் நாட்டின் சீர்திருத்தத் தந்தை' என்று பாராட்டப்பெற்ற அறிஞர் சொ. முருகப்பனர் முன் நிற்க, அவர்க்குத் துணையாகத் தமிழ்க்கடல் ராய. சொ; திரு. அ. ராம. ராம. இராமனுதன் செட்டியார், திரு. அழ. அருணுசலம் செட்டியார், திரு. வை.சு. சண்முகம்செட்டியார் முதலியோர் நின்று ஊக்க, தோற்றுவிக்கப்பெற்ற நம்சங்கம், ஐம்பதாண்டுகள் வாழ்ந்து இன்று 'பொன் விழா'க் காண்கிறது. சங்கம் கண்ட மூலவர் முருகப்பனர்க்கு மணிவிழாக் கண்ட சங்கம், அன்னாரின் வலக்கரம் என்று போற்றத்தக்க ராய. சொ. அவர்கட்கும் மணிவிழாக் கண்டு, 'தமிழ்க்கடலை'த் தந்து பெருமையுற்றது. சங்கம், தன் பொன்விழாவைப் பெருமையுடன் நிறைவு செய்யும் இந்நாள் வரையும் தொடர்ந்து பதினன்கு ஆண்டுகளாகச் சங்கத்தின் தலைவராய் ராய. சொ. அவர்கள் அமர்ந்து இவ்விழாக் கோலம் கண்டு களிக்கின்ற நிலை - அரிதின் வாய்க்கின்ற பெரும் பேறு எனலாம். சங்க வளர்ச்சியிலேயே தம் கருத்தையும் காலத்தையும் செலவிட்டு - சங்கத்தின் புரவலராயும் - புலவராயும் - தலைவராயும் வீற்றிருந்து

சங்கப் பொன்விழாவைப் பொலிவுறச் செய்யும் அன்னுர் விருப்பின் வண்ணம், நம் நாட்டின் பல துறைகளிலும் சிறந்த பலர், இச்சங்கத்தில் உறுப்பினராகியும் பல்காலும் வருகை தந்து சிறப்பித்தும் உள்ளனர். விவேகானந்தர் நூல் நிலையமும், படிப்பகமும் இச்சங்கத்தின் முக்கிய உறுப்புக்கள்.

**நோக்கம்**

சமயப்பற்று, நாட்டுப்பற்று, மொழிப்பற்று, நல்லோர் கூட்டறவு, இலக்கியப் பயிற்சி முதலியவற்றை வளர்த்தல் இச்சங்கத்தின் நோக்கமாகும். அவை வளர்வதற் கேற்ற சூழ்நிலையை உண்டாக்குவதில் இச் சங்கம் பெருந் தொண்டாற்றி வருகிறது.

**உறுப்பினர்**

புரவலர் தொகை 90, ஆயுள் உறுப்பினர் தொகை 198, உறுப்பினர் 64, ஆகச் சங்கத்தின் மொத்த உறுப்பினர் தொகை 352 ஆகும்.

**நிருவாகம்**

இச் சங்கத்தின் நிருவாகம் தலைவர், துணைத் தலைவர், செயலாளர், துணைச் செயலாளர், பொருளாளர், ஆறு உறுப்பினர் ஆகப் பதினெருவர் அடங்கிய நிருவாகக் குழுவினரால் நடைபெற்று வருகிறது.

**சங்கநேரம்**

சங்கம் முற்பகல் 9 மணி முதல் 12 மணி வரையிலும், பிற்பகல் 4 மணி முதல் 8 மணி வரையிலும் திறந்திருக்கும்.

**சங்கக்கட்டிடம்**

சங்கம் தொடங்கிய நாள் தொட்டு வாடகைக் கட்டிடத்தில் இருந்து கொண்டே பணியாற்றி வந்தது. 31—12—1943ல் இச்சங்கத்தின் வெள்ளி விழா, தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் சீரிய தலைமையில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்ற பொழுது, அன்னுரைக்கொண்டே இச்சங்கத்தின் சொந்தக் கட்டிடத்திற்குக் கால்கோள் விழா நடைபெற்றது. செல்வத்துப் பயன் ஈதலே என்ற பொன்மொழியை நன்குணர்ந்த பல செல்வர்களின் பொருளுதவிகொண்டு இன்றுள்ள கட்டிடம் கட்டி முடிக்கப்பெற்றது. இது தமிழ் நாட்டின் தவப்புதல்வர் ராஜாஜியால் 24—10—1952ல் திறந்து வைக்கப் பெற்றது.

சங்கக் கட்டிடத்தின் மேன்மாடி 'ராய. சொ. உமையாள் மண்டபம்' சங்கத்தலைவர் தமிழ்க்கடல், சிவமணி, சிவம்பெருக்கும் சீலர், ராய. சொ. அவர்கள் பொருளுதவியால் கட்டப்பெற்று திரு. கருமுத்து. தியாகராசன் செட்டியார் அவர்கள் தலைமையில் திரு. அ. மு. மு. முருகப்ப செட்டியார் அவர்களால் 31—1—1965ல் திறந்து வைக்கப்பெற்றது.

### விவேகானந்த புத்தகசாலை

இச் சங்கத்தின் அங்கமாக அமைந்துள்ள இப்புத்தகசாலை காளயுக்தி ஆண்டு ஆவணித் திங்கள் ஐந்தாம் நாள் (21—8—1918) நிறுவப்பெற்றது. இலக்கியம், இலக்கணம், சமயம், பொதுஅறிவு பற்றிய நூல்களும், பல்வேறு பருவ வெளியீடுகளின் தொகுப்புகளும் நூல் நிலையத்தை அணி செய்கின்றன. இன்று இந்நூல் நிலையத்தில் தமிழில் **2617** புத்தகங்களும், ஆங்கிலத்தில் **437** புத்தகங்களும், வடமொழியில் **10** புத்தகங்களும், இந்தியில் **11** புத்தகங்களும் ஆக மொத்தம் **3075** புத்தகங்கள் உள்ளன.

### படிப்பகம்

இச் சங்கத்தின் ஆதரவில் ஓர் இலவசப் படிப்பகம் நடைபெற்று வருகிறது. தினமணி என்ற நாளிதழும், ஆனந்த விகடன், கல்கி, தியாகபூமி, ஆகிய வார வெளியீடுகளும், அமெரிக்கன் ரிப்போர்ட்டர் இருவார வெளியீடும், கலைமகள், ஞான சம்பந்தம், கண்ணன், மஞ்சரி, சித்தாந்தம், திருக்கோயில், தர்ம சக்கரம் ஆகிய திங்கள் வெளியீடுகளும் படிப்பகத்திற்கு வருகின்றன. நாள்தோறும் பல அன்பர்கள் அவற்றைப் படித்துப்பயன் பெறுகின்றனர்.

### ரேடியோ

பொது மக்களின் நலன் கருதி ரேடியோ, சங்கத்தில் வைக்கப் பெற்றிருக்கிறது. அது அன்றாடம் ஒலி பரப்பப்பெறும். முக்கிய வானொலி நிகழ்ச்சிகளைப் பலர் செவி மடுத்தின்புற வாய்ப்பளிப்பதாய் இருக்கின்றது.

## நாற்பத்து ஒன்பதாவது ஆண்டு விழாவும்
## பாரதி விழாவும்

பராபவ ஆண்டு ஆவணித்திங்கள் 26-ஆம் நாள் (11-9-66) ஞாயிற்றுக்கிழமை முற்பகல் 9-30 மணிக்கு ஸ்ரீ மீனாக்ஷி பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் தேவகோட்டை கலெக்டர் M. ஆறுமுகம்பிள்ளை அவர்கள் தலைமையில் விழாத்தொடங்கியது. ஸ்ரீ. மீ. பெ. உயர்நிலைப்பள்ளி மாணக்கியர்கள் இறைவணக்கம் பாடி சங்கத் தலைவர் தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள் வரவேற்க, காரியதரிசி அபிசீனியா பழ. நாச்சியப்பன் அறிக்கை வாசித்தவுடன் தலைவர் முன்னுரையாகச் சங்கத்தைப் பாராட்டிப் பேசி சங்கத்தின் வளர்ச்சிக்கு பலரும் சேர்ந்து முயற்சிக்க வேணுமென்று கூறினார்கள். 'மெய்ப்பொருள் வேந்தன்' என்பது பற்றி திரு, இலஞ்சி. அ. இ. முத்துக்குமாரசாமி அவர்களும், 'நெஞ்சை அள்ளும் சிலம்பு' என்பது பற்றி திரு, இரா. இராதாகிருட்டினன் அவர்களும் அழகுறப் பேசினார்கள். துணைக்காரியதரிசி நன்றி நவில விழா இனிது நிறைவெய்தியது.

## பாரதி விழா

பிற்பகல் 4-15 மணிக்கு டாக்டர் அ. சிதம்பரநாதன் அவர்கள் தலைமையில் பாரதி விழாத்தொடங்கியது. மி. பெ. உயர்நிலைப்பள்ளி மாணுக்கியர் இறைவணக்கம் பாடத் தலைவர் முன்னுரையுடன் 'பாரதி காட்டும் பரம்பொருள்' என்று திரு. சேர. குமாரசாமி B. A., அவர்களும், 'பாரதி காட்டும் பெண்மை' என்று திரு, இரா. இராதா கிருட்டிணன், அவர்களும் 'பாரதியின் தனித்தன்மை' என்று வித்துவான் பூ. அமிர்தலிங்கம் அவர்களும் சொன் மாரி பெய்தார்கள். காரியதரிசி அபிசீனியா. பழ. நாச்சியப்பன் நன்றி சொல்ல இரவு 8 மணிக்கு விழா இனிது நிறைவெய்தியது.

### இலக்கியக்கூட்டம்

பராபவ ஆண்டு ஐப்பசித் திங்கள் 20-ஆம் நாள் (5—11—66) இரவு 7 மணி முதல் சங்கக் கட்டிடத்தில் காவேரிபட்டணம் திரு. ச. விசுவநாதன், ச. வெங்கடேசன் சகோதரர்கள் வில்லிபாரதத்தைப் பற்றிய சொற்பொழிவு செய்தார்கள். அன்பர்கள் பலர் கேட்டு ரசித்தார்கள்.

## கலைமகள் விழா

பராபவ ஆண்டு ஐப்பசித் திங்கள் 6-ஆம் நாள் (22—10—66) பிற்பகல் 7 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் கலைமகள் பூஜை நடைபெற்றது. அன்பர்கள் கூடி வழிபாடு செய்தார்கள்.

### கூட்டங்கள்

நடப்பு ஆண்டில் செயற்குழு 13 முறை கூடி சங்கப்பணிகளை நிறைவேற்றி யுள்ளது.

### சங்கப் பதிவு

இச்சங்கம் 1860-ஆம் ஆண்டு இந்திய சொசைட்டிகள் ரிஜிஸ்ட்ரேஷன் சட்ட விதிகளின்படி 15—6—1934ல் புதுக்கோட்டை ரிஜிஸ்ட்ரார் ஆபீசில் தொடர் எண் S. 11/64 ஆகப் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

### அனுதாபத் தீர்மானம்

இவ்வாண்டில் இவ்வுலக வாழ்வை நீத்த சங்கத்து புரவலரான தேவகோட்டை தமிழ் வள்ளல் உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார், ஆயுள் உறுப்பினர் களான திரு. சு. சா. சண்முகநாதன் செட்டியார், திரு, கி. நாராயணன் செட்டியார், திரு. சித. சித. சிதம்பரம் செட்டியார், நாச்சியாபுரம் திரு. சு. மு. சுப. சொக்கலிங்கம் செட்டியார், கோட்டையூர் திரு. சித. தே. பழநியப்ப செட்டியார் ஆகியோருக்கு அனுதாபத்தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது.

**வேண்டுகோள்**

இப்பகுதியிலுள்ள மக்கள் விழிப்பிற்குப் பெருங்காரணமாய் விளங்கும் இச் சங்கத்தில் உறுப்பினர்களாகிச் சங்கத்தை மேலும் மேலும் வளர்க்க வேண்டும் எனப் பெரிதும் வேண்டுகிறேம். சங்கத்திற்கு ஆண்டுக் கட்டணம் ரூபாய் ஆறு. ஆயுள் கட்டணம் ரூபாய் நூறு. ரூபாய் இருநூறுக்குக் குறையாமல் வழங்குபவர் புரவலர்.

நிதி மிகுத்தவர் பொற்குவை தாரீர்!
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவும் அற்றவர் வாய்ச்சொல் அருளீர்!
ஆண்மையாளர் உழைப்பினை நல்கிர்!

என்ற பாரதியாரின் சொற்களால் உங்களை வேண்டி "கோடி மேன்மை நிறைவுற இச் சங்கத்தார் பல்ஊழி வாழ்ந்து ஒளிர்க நிலத்தின் மீதே" என்று அன்னுர் வாழ்த்திய தனிச் சங்கமான இதில் பெருவாரியாக உறுப்பினர்களாகிப் பல்லாற்றுனும் சங்கத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் நல்க வேண்டுகிறேம்.

**நன்றி**

இச் சங்கத்தை இத்துணை ஆண்டுகளாகப் பேணி வளர்த்த பெரியோர்களுக்கும், உறுப்பினர்களாகி ஊக்கமளித்தவர்கட்கும், புத்தகம், பொருள் முதலியன தந்து ஆக்கம் அளித்தவர்கட்கும், விழாக்களில் தலைமை தாங்கியும், சொற்பெருக்காற்றியும், அரும்பணி புரிந்த தமிழ் அறிஞர்கட்கும், இச் சங்கத்தின் வளர்ச்சியில் அக்கறை காட்டும் அனைவருக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியை உவகையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேம்.

உங்கள்,

காரைக்குடி
9—9—67

**அபிசீனியா பழ. நாச்சியப்பன்**
செயலாளன்.

## புரவலர்

### காரைக்குடி

திரு சா. நா. அ. சொ. அண்ணாமலை செட்டியார்
திரு அரு. மு. மு. அருணாசலம் செட்டியார்
திரு சா. அரு. மெ. அருணாசலம் செட்டியார்
திரு சா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார்
திரு ராம. சு. இராமநாதன் செட்டியார்
திரு சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார்
திரு சுப. சு. ராம. சுப்பிரமணியன் செட்டியார்
திரு மெ. சொக்கலிங்கன்
திரு தமிழ்க்கடல், சிவமணி, ராய. சொ.
திரு மெ. தெய்வராயன்
திரு தி. நா. நாராயணன் செட்டியார்
திரு சா. ராம. சா. நாராயணன் செட்டியார்
திரு சி. பழ. ப. பழனியப்பன்
திரு A. P. பியாரிலால்
திரு இராம. பெரியகருப்பன்
திரு பெரி. குமா. பெரியகருப்பன்செட்டியார்
திரு நா. ஆ. மாரிமுத்து
திரு மெ. செ. மெய்யப்பன் B. E.,
திரு பெரி. வீரப்பசெட்டியார்

### ஆத்தன்குடி

திரு கா. அரு. கா. காடப்பசெட்டியார்

### இராயவரம்

திரு பவ. ராம. குழந்தையன் செட்டியார்
திரு அ. கு. ராம. சு. சொ. இராமன் செட்டியார்
திரு மு. அ. மு. பழநியப்பசெட்டியார்

### ஈரோடு

திரு K. நடராசன் செட்டியார்
திரு வை. பழநியப்பசெட்டியார்

### கண்டவராயன்பட்டி

திரு க. வி. ராம. மாணிக்கம் செட்டியார்

### கண்டனூர்

திரு சித. அரு. அருணசலம் செட்டியார்
திரு வீ. தெ. வீரப்ப செட்டியார்

### கானடுகாத்தான்

திரு க. வெ. சித வெ. வேங்கடாசலம் செட்டியார்

### கொத்தமங்கலம்

திரு சி. சின்னக்கறுப்பன்

### கோட்டையூர்

திரு அழ. அ. அண்ணமலை செட்டியார்
திரு வெ. சித. அண்ணமலை செட்டியார்
திரு ராம. பெ. நா. அருணசலம் செட்டியார்
திரு ராம. பெ. அழ. அ. அழகப்பசெட்டியார்
திரு அழ. சிதம்பரம் செட்டியார்
திரு வெ. சித. மீனுட்சிசுந்தரம் செட்டியார்
திரு வெ. சித. வேங்கடாசலம் செட்டியார்

### கோயமுத்தூர்

திரு தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார்

### கோனபட்டு

திரு க. மு. அ. முத்தப்ப செட்டியார்

### சிராவயல்

திரு வ. பழ. பழநியப்பசெட்டியார்

### செட்டிநாடு

டாக்டர் ராசா சர். மு. அ. முத்தையா செட்டியார்
இராணி மெய்யம்மை ஆச்சி
குமாரராசா மு. அ. மு. முத்தையா செட்டியார்
திரு மு. அ. மு. இராமசாமி செட்டியார்

### சென்னை

திரு P. அண்ணமலை
திரு அ. மு. மு. அருணசலம் செட்டியார்
திரு M. V. அருணசலம் செட்டியார்
திரு ந. சொ. அரு. அருணசலம் செட்டியார்
திரு L. அழகப்பன்
திரு RM. இராமநாதன்
திரு AL. RM. இராமநாதன்

திரு வயி. இராமநாதன்
திருமதி உமையாள் இராமநாதன்
திரு P. சிதம்பரம்
திரு V. சிதம்பரம்
திரு A. சுப்பிரமணியன் செட்டியார்
திரு ஏ. மு. சொக்கலிங்கம் செட்டியார்
திரு R. நாச்சியப்பன்
திரு L. CT. L. பழநியப்பசெட்டியார்
திரு ஏ. மு. பெரியணன் செட்டியார்
திரு AV. மெய்யப்ப செட்டியார்
திரு P. லெட்சுமணன்
திரு அழ. லெட்சுமணன்

### சேலம்

திரு MS. உடையப்பசெட்டியார்
திரு S. R. குமாரசாமி B. A.,
திரு பழ. ப. சித. சிதம்பரம் செட்டியார்

### திருச்சிராப்பள்ளி

திரு அரு. அண்ணமலை செட்டியார்
திரு வயி. அ. வயிரவன் செட்டியார்

### திருப்புத்தூர்

திரு நா. ஆறுமுகம் பிள்ளை
திரு நா. ஆறு. நாகராசன்

### தேவகோட்டை

திரு உ. ராம. மெ. சுப. சேவு. அண. அண்ணமலைசெட்டியார்
திரு முத்து க. அ. அண்ணமலை செட்டியார்
திரு தி. சு. பழ. ப. சித. சுப்பிரமணியன் செட்டியார்
திரு உ. மு. சுப. லெ. சுப. சுப்பிரமணியன் செட்டியார்
திரு சு. மு. மு. சுப்பிரமணியன் செட்டியார்
திரு உ. மு. சுப. லெ. மெய்யப்ப செட்டியார்
திரு ராம. அரு. ராம. விரப்ப செட்டியார்

### நாட்டரசன்கோட்டை

திரு வெ. கண. கண்ணப்ப செட்டியார்

### பட்டுக்கோட்டை

திரு ஏ. மு. விசுவநாதன் செட்டியார்

### பள்ளத்தூர்

திரு உ. அ. பெரி. மு. அருணுசலம் செட்டியார்
திரு மு. அ. பழநியப்ப செட்டியார்
திரு S. RM. பழநியப்ப செட்டியார்
திரு மெ. மு. மெய்யப்ப செட்டியார்

### பொள்ளாச்சி

திரு நா. மகாலிங்கம் B. SC.,

### மதுரை

திரு லெ. அழகுசுந்தரம் செட்டியார்
திருமதி இராதா தியாகராசன்
திரு தி. சுந்தரம் செட்டியார்
திரு கருமுத்து தியாகராசன் செட்டியார்
திரு லெ. நாராயணன் செட்டியார்
திரு தி. மாணிக்கவாசகம்

## ஆயுள் உறுப்பினர்

### காரைக்குடி

திரு அழ. கரு. அடைக்கப்ப செட்டியார்
திரு மெய. ஆ. அ. மு. அண்ணுமலை செட்டியார்
திரு அண. அ. அண்ணுமலை செட்டியார்
திரு ப. சு. ராம. அண்ணுமலை செட்டியார்
திரு அரு. அருணுசலம்
திரு மு. அரு. சா. அருணுசலம் செட்டியார்
திரு சி. மு. அரு. நா. அருணுசலம் செட்டியார்
திரு பெரி. அரு. அருணுசலம் செட்டியார்
திரு சா. அரு. நா. அருணுசலம் செட்டியார்
திரு அழ. அழகப்பன்
திரு கரு. வ. அழகப்பசெட்டியார்
டாக்டர் கே. இராகவன்
திரு மு. மெ. இராமசாமி செட்டியார்
திரு S. இராமசாமி செட்டியார்
திரு வ. ராம. இராமசாமி செட்டியார், B. A.,
திரு க. அழ. ராம. கரு. இராமசாமி செட்டியார்
திரு நா. இராமனுதன் செட்டியார்
திரு ஆ. வி. பழ. சித. இராமனுதன் செட்டியார்
திரு ராம. இராமனுதன்
திரு ராம. வெ. இராமனுதன் செட்டியார்

திரு ராம. மு. நா. இராமநாதன் செட்டியார்
திரு பழ. வெ. ராம. வெ. இராமநாதன் செட்டியார்
திரு சேவு க. ராம. இராமநாதன் செட்டியார்
திரு எஸ். ஏகப்பன்
திரு சா. கணேசன்
திரு லெ. கணேசன்
திரு மா. கண்ணப்பன்
திரு வீர. கண்ணப்ப செட்டியார்
திரு ராம. கறு. கறுப்பன் செட்டியார்
திரு கா. காளையப்பன்
திரு சு. ராம. ராம. கிருஷ்ணப்ப செட்டியார்
திரு கி. நா. கிருஷ்ணன்
திரு S. குப்புச்சாமி
திரு க. மெ. மெ. பழ. சண்முகம் செட்டியார்
திரு பழ. சண்முகம்
திரு சித. ராய. சிதம்பரம் செட்டியார்
திரு மெ. நா. சித. சிதம்பரம் செட்டியார்
திரு சித. சோம. சிதம்பரம் செட்டியார்
திரு சித. ராம. சித. சிதம்பரம் செட்டியார்
திரு சிவ. அ. சிவராமன் செட்டியார்
திரு சுப. சு. சு. சுப. சுப்பிரமணியன் செட்டியார்
திரு முரு. சுப. ராம. தெ. சுப்பிரமணியன் செட்டியார்
திரு மு. மு. சுப்பிரமணியன் செட்டியார்
திரு கதி. ராம. சுப்பிரமணியன் செட்டியார்
திரு நா. அ. நா. நா. சா. சுப்பிரமணியன், B. SC.,
திரு R. K. சுப்பிரமணியன் F. C. A.
திரு சு. பழ. சுப்பையா செட்டியார்
திரு சேவு. க. சேவுகன் செட்டியார்
திரு குப. சு. அ. மெ. சொ. சொக்கலிங்கம் செட்டியார்
திரு சா. நா. அ. அழ. சொ. சொக்கலிங்கம் செட்டியார்
திரு சித. ராம. சொக்கலிங்கம் செட்டியார்
திரு எல். சொக்கலிங்கம் B. COM., B. L.,
திரு தி. லெ. லெ. சோமசுந்தரம்
திரு மெ. கு. தி. தண்ணீர்மலையான் செட்டியார்
திரு ராம. தெ. தேவராயன் செட்டியார்
திரு பெரி. நா. நா. அ. தேவராசன் செட்டியார்
திரு பழ. தெ. லெ. தேனப்ப செட்டியார்
திரு மு. நடராசன் செட்டியார்
திரு A. T. A. N. நடராசன் செட்டியார்

திரு அபிசீனியா. பழ. நாச்சியப்பன்
திரு நா. கு. நாச்சியப்பன்
திரு மெய. ஆ. அ. நாச்சியப்ப செட்டியார்
திரு சொ. நாராயணன்
திரு அரு. நா. நாராயணன் செட்டியார்
திரு அழ. அ. நா. நாராயணன் செட்டியார்
திரு சா. நா. நாராயணன்
திரு நாக. லெ. நாராயணன் செட்டியார்
திரு டாக்டர் P. K. நாராயணன் M. B. B. S., T. D. D.
திரு பெரி. பஞ்சநதம் செட்டியார்
திரு சித. பழநியப்பன்
திரு பழ. தெ. லெ. பழநியப்பன்
திரு மெ. செ. அ. மெ. பழநியப்ப செட்டியார்
திரு அ. மெ. அ. பழநியப்ப செட்டியார்
திரு ராம. பழநியப்ப செட்டியார்
திரு மு. பழ. பழநியப்ப செட்டியார்
திரு சி. பழ. சித பழநியப்பன்
திரு பழ. அ. அ. பழநியப்ப செட்டியார்
திரு A. V. M. பழநியப்பன்
திரு ஆவி. ப. முரு. மு. முரு. பழநியப்ப செட்டியார்
திரு சித. பழ. பழநியப்ப செட்டியார்
திரு T. பார்த்தசாரதி அய்யங்கார், B. A , B. L.,
திரு T. V. S. மணியன்
திரு மரு. சு. மாணிக்கவேல் செட்டியார்
திரு ரெ. முத்துக்கணேசன்
திரு அ. மு. க. மு. சித. முத்துக்கறுப்பன் செட்டியார்
திரு அ. மு. க. மு. அழ. முத்துக்கறுப்பன் செட்டியார்
திரு அ. மு. க. மு. க. கரு. முத்துக்கறுப்பன் செட்டியார்
திரு அ. தெ. மு. தெ. முத்துக்கறுப்பன் செட்டியார்
திரு மு. சித. முத்துராமன் செட்டியார்
திரு மு. மெ. முத்துராமன்
திரு அரு. ராம. முத்துராமன்
திரு மா. முத்தையா
திரு நா. முத்தையா
திரு சேவு. க. மு. முத்தையா செட்டியார்
திரு முரு. லெ. முருகப்ப செட்டியார்
திரு ராம. தெ. முருகப்பன்
திரு இராம. முருகப்பன்
திரு சு. ராம. தெ. முத்தையா செட்டியார்

திரு ராம. ப. மெ. ப. மெய்யப்ப செட்டியார்
திரு மெ. சிவ. மெய்யப்ப செட்டியார்
திரு மெ. வி. மெ. மெய்யப்ப செட்டியார்
திரு சு. கும. சுப. மெய்யப்ப செட்டியார்
திரு சு. கும. மெ. மெய்யப்ப செட்டியார்
திரு தெ. நா. ராம. மெ. மெய்யப்ப செட்டியார்
திரு அ. மெ. அ. மெய்யப்ப செட்டியார்
திரு வெ. ராம. மெ. ராம. மெய்யப்ப செட்டியார்
திரு மெ. லெ. மெய்யப்ப செட்டியார்
திரு கு. மெ. மெ. லெ. மெய்யப்ப செட்டியார்
திரு லெ. நா. மெய்யப்பன்
திரு சு. ராம. மெய்யப்பன்
திரு AR. லெட்சுமணன்
திரு அ. ராம. வெ. வள்ளியப்ப செட்டியார்
திரு S. வாசுதேவன்
திரு மெ. ராம. சொ. வீரப்பன்
திரு கி. வி. வினைதீர்த்தான் செட்டியார்
திரு சுப. மு. நா. வீரப்ப செட்டியார்
திரு மா. வீரப்பன்
திரு சு. குழ. வெ. சுப. வெங்கடாசலம் செட்டியார்
திரு GR. ஸ்ரீநிவாசன்
திரு ராம. வெங்கடாசலம்

### அமராவதிபுதூர்

திரு வெ. ராம. சோம. கறுப்பன் செட்டியார்
திருமதி மு. மரகதவல்லி

### அரிமளம்

திரு அ. செ. சு. ராம. சாமிநாதன் செட்டியார்

### அரியக்குடி

திரு வயி. ராம. கி. இராமய்யா செட்டியார்
திரு RM. வெங்கடாசலம்

### ஆத்தன்குடி

திரு பழ. அருணாசலம் செட்டியார்
திரு சி. ராம. நா. நா. இராமநாதன் செட்டியார்
திரு நா. ராம. ராம. இராமநாதன் செட்டியார்
திரு கரு. மு. சித. சிதம்பரம் செட்டியார்
திரு பெ. மு. சுப்பையா செட்டியார்
திரு பெ. லெ. லெட்சுமணன் செட்டியார்

### ஆவினிப்பட்டி

திரு அ. பழ. பழநியப்ப செட்டியார்

### இராமச்சந்திரபுரம்

திரு வ. சு. சு. சுப்பிரமணியன் செட்டியார்

### இராயவரம்

திரு ராம. ராம. இராமநாதன் செட்டியார்
திரு மு. அ. மு. காசிவிசுவநாதன் செட்டியார்
திரு பவ. அழ. குழந்தையன் செட்டியார்
திரு பவ. அழ. வைரவன் செட்டியார்

### இராஜபாளையம்

திரு P. C. பலராமராஜா

### ஈரோடு

திரு மு. கணபதி முதலியார்
திரு K. கந்தசாமி செட்டியார்

### கண்டவராயன்பட்டி

திரு சிவ. அழ. அழகப்ப செட்டியார்
திரு மா. இராமனுதன் செட்டியார்
திரு நா. சி. சொ. சொக்கலிங்கம் செட்டியார்
திரு மு. ப. வ. மாணிக்கம் செட்டியார்

### கண்டனூர்

திரு பழ. சுப. சுப்பிரமணியன் செட்டியார்

### கல்கத்தா

திரு மா. கருப்பையா செட்டியார்

### கும்பகோணம்

திரு முத்த. வெ. சொ. நாச்சியப்பன்

### கூழிபிறை

திரு வ. ராம. சி. சின்னையா செட்டியார்

### கொத்தமங்கலம்

திரு சி. வெ. சி. சின்னக்கறுப்பன் செட்டியார்

### கோட்டையூர்

திரு அரு. நா. அருணசலம் செட்டியார்

## கோயமுத்தூர்

திரு SM. KR. கறுப்பன் செட்டியார்
திரு AL. சிங்காரஞ் செட்டியார்

## கோறுபட்டு

திரு மெ. அ. ராம. சுப்பிரமணியன் செட்டியார்
திரு ப. சொ. பழநியப்ப செட்டியார்
திரு நா. வயிரவன்

## சென்னை

திருமதி அன்னபூரணி வீரப்பன்
திரு ராம. விரப்பன்
திரு C. V. CT. R. ரெங்கநாதன்
திரு S. H. நாராயணன்

## ஆ. தெக்கூர்

திரு கருமுத்து. சிவலிங்கம் செட்டியார்

## சேலம்

திரு N. M. நல்லப்பன்

## தேவகோட்டை

திரு அரு. ராம. அரு. அருணசலம் செட்டியார்
திரு முத்து. கரு. அரு. கரு. அரு. அருணசலம் செட்டியார்
திரு லெ. அரு. அருணசலம் செட்டியார்
திரு N. அருணசலம்
திரு ராம. அரு. அரு. ராம. அரு. இராமநாதன் செட்டியார்
திரு பழ. சோம. கைலாசநாதன் செட்டியார்
திரு உ. ராம. உ. மு. அ. மு. சிதம்பரம் செட்டியார்
திரு அள. அரு. சோமநாதன் செட்டியார்
திரு அள. சுப. பழ. திருநாவுக்கரசு செட்டியார்
திரு அரு. லெ. வெ. நடராசன் செட்டியார்
திரு மெ. வ. மாணிக்கம் செட்டியார்
திரு லெ. மு. வீ. முத்துவீரப்பசெட்டியார்
திரு S. மெய்யப்பன் B. A , B. L.,
திரு உ. ராம. மெ. சு. செ. பழ. லெட்சுமணன் செட்டியார்
திரு ராம. அரு. அரு. வீரப்பசெட்டியார்
திரு முத்து. கரு. அரு. பழ. வெ. வேங்கடாசலம் செட்டியார்

### நாச்சியாபுரம்

திரு கண. செ. கண. அண்ணுமலை செட்டியார்
திரு வயி. சண்முகம் செட்டியார்
திரு சுப. சொ. சுப்பிரமணியன் செட்டியார்
திரு ந. மெ. தியாகராசன் செட்டியார்
திரு கரு. தெ. வேலாயுதம் செட்டியார்

### பலவான்குடி

திரு ராம. கும. சு. குமரப்ப செட்டியார்
திரு கும. சு. சுப்பிரமணியன் M.A.,

### பள்ளத்தூர்

திரு பெரி. அழகப்ப செட்டியார்
திரு ராம. அ. க. கறுப்பன் செட்டியார்
திரு சுப. அருணுசலம்

### பாப்பாகோவில்

திரு DR. அருணுசலம்

### புதுக்கோட்டை

திரு சாத்தப்பா சுப்பிரமணியன்
திரு TR. சொக்கலிங்கம் B. com., A. C. A.,

### மகிபாலன்பட்டி

திரு சி. ராம. இராமசாமி செட்டியார்

### மதுரை

திரு KT. சண்முகம் செட்டியார்
திரு நா. ம. ரா. சுப்பராமன்
திரு R. நாகராஜ்

### மாயூரம்

திரு KS. வெங்கு
திரு KS. ராமு

### மேலைச்சிவபுரி

திரு பழ. சித. சிதம்பரம் செட்டியார்

### மைசூர்

திரு கி. சுப. விணதீர்த்தான் செட்டியார்

## உறுப்பினர்

### காரைக்குடி

திரு பழ. தெ. லெ. அருணாசலம்
டாக்டர் N. உதயசிங்
திரு M. கணேசன் B. A., B. T.
திரு TR. ST. கண்ணப்பன்
திரு கறு. கதி. கறுப்பன் செட்டியார்
திரு மெ. காந்தி
திரு K. சங்கரய்யர்
திரு சித. லெ. சிதம்பரம் செட்டியார்
திரு சா. சீனிவாசன்
திரு நா. சுப்பிரமணியன்
திரு வே. சொக்கலிங்கம்
திரு மெய. பழ. மெ. சொக்கலிங்கம் செட்டியார்
திரு வி. வெ. குப. தண்ணீர்மலை செட்டியார்
திரு ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியார்
திரு இராம. தேனப்பன்
திரு நா. லெ. நா. வெ. நாராயணன் செட்டியார்
திரு S. பெத்தபெருமாள்
திரு ராம. மீனாட்சிசுந்தரம்
திரு சி. மு. அரு. அரு. முத்தையா செட்டியார்
திரு நா. மெய்யப்பன்
திரு வயி. மோகன்
திரு ராம. வள்ளியப்ப செட்டியார்
திரு சுப. வெ. வேங்கடாசலம் செட்டியார்

### அரண்மனைசிறுவயல்

திரு முரு. பழ. பழநியப்ப செட்டியார்

### அரிமளம்

திரு ராம. அண. அண்ணாமலை செட்டியார்

### அழகப்பாபுரம்

திரு பூ. அமிர்தலிங்கன்
திரு அ. இராமசாமி
திரு எம். இராமச்சந்திரன்
திரு சா. இராதாகிருட்டிண நாயுடு
திரு இராம. இராமநாதன்
திரு இராம. இராமநாதன்

திரு வீர. காசிவிசுவநாதன்
திரு இரா. சாரங்கபாணி
திரு இரா. பத்மனுபன்
திரு உ.. பாலசுப்பிரமணியன்
திரு MR. சுப்பையா
திரு ரெ. சிங்காரவடிவேலன்
திரு பா. சூரியநாராயணன்
திரு தே. சொக்கலிங்கம்
திரு இ. ரெ. பிச்சைக்கண்ணு
திரு மு. கோ. வேங்கடகிருஷ்ணன்
திரு அ. விசுவநாதன்

ஆத்தூர்

திரு இராம. சிதம்பரம்

இராசிபுரம்

திரு மு. இராமசாமி

கடலூர்

திரு குப. சபாபதிப் பிள்ளை

காவேரிப்பட்டணம்

திரு. ச. விசுவநாதன்
திரு. ச. வேங்கடேசன்

காணுடுகாத்தான்

திரு இராம. சிவராமன் செட்டியார்

திருச்சிராப்பள்ளி

திரு இரா. இராதாகிருஷ்ணன்

திருப்பதி

திரு N. சுப்பு ரெட்டியார் M. A., B. SC., L. T.

தேவகோட்டை

திரு வீர. வீரப்பன்

நாட்டரசன்கோட்டை

திரு ஆவி. அரு. இராமநாதன் செட்டியார்

பலவான்குடி

திரு ச. வயிரவன்

பட்டுக்கோட்டை

திரு S. தேவராஜன்
திரு அன்பு. வேதாசலம்

பள்ளத்தூர்

திரு கு. ராம. வள்ளியப்பன்

புதுக்கோட்டை

திரு அரு. சொக்கலிங்கம் செட்டியார்
திரு CT. மலையாண்டி

புதுவயல்

திரு அரு. உ. விர. அழகப்ப செட்டியார்

பெருவளநல்லூர்

திரு க. பத்மநாபன்

மதுரை

திரு P. P. இராமமூர்த்தி

மேலைச்சிவபுரி

திரு அ. சுவாமிநாதன் செட்டியார்

விருதுநகர்

திருமதி இரா. மீனாட்சி

வேலூர்

திரு S. K. இராமராசன்

## ஆண்டு விழாக்களில் தலைமை தாங்கிய பெரியார்கள்

1 திரு வே. முத்துசுவாமி அய்யர்
2 திரு வி. கலியாணசுந்தர முதலியார்
3 டாக்டர் T. S. S. ராசன்
4 திரு ச. சச்சிதானந்தம் பிள்ளை
5 திரு ந. மு. வேங்கிடசாமி நாட்டார்
6 திரு வி. கலியாணசுந்தர முதலியார்
7 திரு வ. உ. சிதம்பரம் பிள்ளை
8 திரு எஸ். சோமசுந்தர பாரதியார்
9 திரு வி. கலியாணசுந்தர முதலியார்
10 திரு டி. கே. சிதம்பரநாத முதலியார்
11, 12 திரு ரா. பி. சேதுப் பிள்ளை
22 டாக்டர் T. S. S. ராசன்
23 திரு சுவாமி சித்பவானந்தா
24 திரு சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார்
25 திரு வி. கல்யாணசுந்தர முதலியார்
28 திரு எஸ். நடராச நாடார்
35 திரு சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார்
36 டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார்
39 திரு சண்முகராசேசுவர சேதுபதி (முதல் நாள்)
திரு சொ. முருகப்பனுர் (கவியரங்கம்)
திரு A. G. வேங்கடாச்சாரியார் (மறு நாள்)
40 திரு தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர்
41 சிவத்திரு ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் (ராய. சொ. மணிவிழா, முற்பகல்)
திரு ம. பொ. சிவஞானக் கிராமணியார் (ராய. சொ. மணிவிழா, பிற்பகல்)
திரு அ. ச. ஞானசம்பந்தன் (பாரதி விழா கவி அரங்கம்)
திரு சோமசுந்தரத்தம்பிரான் (பாரதி விழாப் பேரவை)
திரு ராய. சொக்கலிங்கன் [ஆண்டு விழா]
42 திரு மு. அருணுசலம்
43 சிவத்திரு ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் (முதல் நாள்ப் பேரவை)
திரு ம. பொ. சிவஞானம் [பட்டி மண்டபம்]
திரு வீ. உலக ஊழியனுர் (கவி அரங்கம்)
திரு கு. க. சதாசிவ அடிகள் [மறுநாள்ப் பேரவை]
44 திரு வீ. உலக ஊழியனுர் [முதல் நாள்ப் பேரவை]
திரு ராய. சொக்கலிங்கன் [பட்டி மண்டபம்]
திரு சா. கணேசன் (கவி அரங்கம்)
திரு புர. சுவாமிநாதன் [மறுநாள்ப் பேரவை]
46 திரு T. இலக்குமணப்பெருமாள் [முற் பகல் பேரவை]
திரு தமிழ்க்கடல். ராய. சொக்கலிங்கன் [பட்டி மண்டபம்]

47 திரு கருமுத்து. தியாகராசன் (ராய. சொ. உமையாள் மண்டபத் திறப்பு விழா)
திரு தமிழ்க்கடல். ராய. சொ. (ஆண்டு விழா)
டாக்டர் வ. சுப. மாணிக்கம் (பாரதி விழா)
தவத்திரு. குன்றக்குடி அடிகளார் [பட்டி மண்டபம்]
48 சிவராசயோகமடம் மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகள்
49 M. ஆறுமுகம் பிள்ளை R. D. O. (ஆண்டு விழா)
டாக்டர் அ. சிதம்பரநாதன் (பாரதி விழா)

## நடப்பு ஆண்டு செயற்குழு

க திரு ராய. சொக்கலிங்கன், தலைவர்
உ திரு சி. மு. அரு. நா. அருணாசலம் செட்டியார், உப தலைவர்
ங திரு அபிசினியா. பழ. நாச்சியப்பன், செயலாளர்
ச திரு மு. மெ. முத்துராமன், துணைச் செயலாளர்
ரு திரு மெ. நா. சித. சிதம்பரம், பொருளாளர்
சு திரு சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார்
எ திரு சு. ராம. ராம. கிருஷ்ணப்ப செட்டியார்
அ திரு சித. ராய. சிதம்பரம் செட்டியார்
கூ திரு பெரி. நா. நா. அ. தேவராசன் செட்டியார்
ம திரு அரு. ராம. முத்துராமன்
மக திரு ரெ. முத்துக்கணேசன்

## கணக்குத் தணிக்கையாளர்கள்

க திரு L. சொக்கலிங்கம், B. com., B. L.
உ திரு T. R. சொக்கலிங்கம் B. com., A. C. A.,

## புதிய ஆண்டு செயற்குழு

க திரு. ராய. சொக்கலிங்கன், தலைவர்
உ திரு. சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார், உப தலைவர்
ங திரு. அள. அளகப்பன், செயலாளர்
ச திரு. நா. மெய்யப்பன், துணைச்செயலாளர்
ரு திரு. மு. மெ. முத்துராமன், பொருளாளர்
சு திரு. அபிசினியா பழ. நாச்சியப்பன்
எ திரு. சி. மு. அரு. நா. அருணாசலம் செட்டியார்
அ திரு. அரு. ராம. முத்துராமன்
கூ திரு. ரெ. முத்துக்கணேசன்
ம திரு. பெரி. நா. நா. அ. தேவராசன் செட்டியார்
மக திரு. A. V. M. பழநியப்பன்

## கணக்குத் தணிக்கையாளர்கள்

க திரு. L. சொக்கலிங்கம் B. com., B. L.
உ திரு. TR. சொக்கலிங்கம் B. com., A. C. A.

## விவேகானந்த புத்தகசாலைக்கு புத்தகம் வழங்கியவர்கள்

| | | |
|---|---|---|
| இ. ம. சங்கம் | .... | 33 |
| ராய. சொ. | .... | 5 |
| அழகப்பா கல்லூரி | ... | 2 |
| ராம. சொ. திரு. | ... | 2 |
| க. வெ. சித. வெ. | .... | 1 |
| அபிசீனியா. பழ. நா. | ... | 1 |
| சோம. நாராயணன் | ... | 1 |
| பொள்ளாச்சி N. மகாலிங்கம் | ... | 1 |
| ஆக புத்தகம் | ... | 46 |

## ராய. சொ. வழங்கிய சாமான்கள்

| | | |
|---|---|---|
| ரிவால்விங்குஷன் சேர் | ... | 1 |
| சாப்பாட்டு மேசை | ... | 1 |
| நாற்காலி | .... | 2 |
| மரடப்பா | ... | 4 |
| மரத்தட்டு | ... | 1 |
| அரிவாள்மணை | ... | 1 |
| மங்குக்கரண்டி | .... | 3 |
| மங்குக்கிண்ணம் | ... | 2 |
| காதுவைத்த மங்குச்சட்டி | ... | 1 |
| மங்குப் பேசின் | ... | 2 |
| மங்குத்தட்டு | .... | 2 |
| அலுமினியக் கிண்ணம் | .... | 4 |
| இரும்பு விசைப்படிக்கல் | ... | 6 |
| துணி, விசிறி | ... | 1 |
| ஆக | ... | 31 |

## படங்கள் வழங்கியவர்கள்

| | | |
|---|---|---|
| செக்காலை மெ. நாச்சம்மை ஆச்சி, வடலூர் வள்ளலார் படம் | | 1 |
| ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியார் சொக்கலிங்க ஐயா படம் | .... | 1 |
| ராய. சொக்கலிங்கன், ஈசான சிவாச்சாரியார் படம் | .... | 1 |

## பராபவ - ஆவணி - ௧௬ (1-9-66) முதல் பிலவங்க - ஆவணி - ௰௫ (31-8-67) முடிய வரவு செலவு விபரம்.

| செலவு | | | | வரவு | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இடத்து வாடகைச் செலவு பற்று | ரு. | 75 | 00 | ஆதாய வரவு | ரு. | 385 | 66 |
| சிப்பந்திகள் சம்பளச் செலவு பற்று | ரு. | 766 | 00 | வட்டி வரவு | ரு. | 2936 | 10 |
| பல்வகைச் செலவு பற்று | ரு. | 509 | 41 | நன்கொடை வரவு | ரு. | 600 | 00 |
| சொற்பொழிவுச் செலவு பற்று | ரு. | 47 | 00 | பிரவேசக் கட்டண வரவு | ரு. | 49 | 00 |
| பத்திரிக்கைச் சந்தாச் செலவு பற்று | ரு. | 147 | 95 | புரவலர் கொடை வரவு | ரு. | 6000 | 00 |
| அச்சுக் கூலிச் செலவு பற்று | ரு. | 16 | 25 | ஆயுள் உறுப்பினர் வரவு | ரு. | 2800 | 00 |
| மின்சாரச் செலவு பற்று | ரு | 168 | 65 | உறுப்பினர் சந்தா வரவு | ரு. | 376 | 00 |
| சங்கக் கட்டிட மராமத்துச் செலவு பற்று | ரு. | 20 | 50 | | | | |
| நிகர வருமானம் | ரு. | 11,396 | 00 | | | | |
| | | 13,146 | 76 | | | 13,146 | 76 |

| வருமானம் | | | | செலவு | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | சங்கக் கட்டிடம் கொள்முதல் கணக்குப் பற்று | ரு. | 929 | 18 |
| | | | | சாமான் கொள்முதல் பற்று | ரு. | 884 | 67 |
| உ. நாராயணன் வரவு | ரு. | 10 | 00 | விவேகானந்தா புத்தகசாலை கொள்முதல் பற்று | ரு. | 160 | 53 |
| கண்ணனூர் திருவேபதி மில்ஸ் பிரைவேட் லிமிடெட் வரவு முன் பற்றுக்கு | ரு. | 15,000 | 00 | டெலிபோன் டெபாஸிட் பற்று | ரு. | 300 | 00 |
| நிகர வருமானம் | ரு. | 11,396 | 00 | பொன் விழாச் செலவு பற்று | ரு. | 1500 | 00 |
| | | | | பாங்க் ஆப் காரைக்குடி லிமிடெட் சேவிங்ஸ் கணக்கு பற்று | ரு. | 17,782 | 27 |
| | | | | ரொக்கம் | ரு. | 4849 | 35 |
| | | 26,406 | 00 | | | 26,406 | 00 |

குறிப்பு, பேரேடு, ஆதரவுச் சீட்டுக்கள் யாவும் இந்தொகைப்படி சரியாக இருக்கின்றன.

பிலவங்க ஆவணி ௰௬ 4—9—67

(Sd) ராய. சொக்கலிங்கன் தலைவர்.
(Sd) அபிசீனியா. பழ. நாச்சியப்பன் செயலாளர்.

(Sd) L. சொக்கலிங்கம், B. Com., B. L. தணிக்கையாளர்.
(Sd) TR. சொக்கலிங்கம், B. Com., A C. A. ,,

## பிங்கள - ஆவணி - உ௯சூ (10-9-1917) முதல் பிலவங்க - ஆவணி - ௰ரு (31-8-67) முடிய வருமானம் செலவு விபரம்.

| செலவு | | | | வரவு | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இடத்து வாடகைப் பற்று | ரு. | 6097 | 03 | ஆதாய வரவு | ரு. | 10,003 | 44 |
| பத்திரிக்கைச் சந்தாச் செலவு பற்று | ரு. | 4168 | 26 | வட்டி வரவு | ரு. | 10,864 | 59 |
| ஆண்டு விழாச் செலவு பற்று | ரு. | 18180 | 26 | நன்கொடை வரவு | ரு. | 18,733 | 97 |
| சொற்பொழிவுச் செலவு பற்று | ரு. | 5195 | 14 | புரவலர் கொடை வரவு | ரு. | 47,954 | 00 |
| சிப்பந்திகள் சம்பளச் செலவு பற்று | ரு | 11439 | 80 | ஆயுள் உறுப்பினர் சந்தா வரவு | ரு. | 24,275 | 00 |
| அச்சுக்கூலிச் செலவு பற்று | ரு. | 1617 | 39 | பிரவேசக் கட்டணம் வரவு | ரு. | 1,142 | 00 |
| மின்சாரச் செலவு பற்று | ரு. | 2152 | 63 | உறுப்பினர் சந்தா வரவு | ரு. | 22,137 | 11 |
| பல்வகைச் செலவு பற்று | ரு. | 13593 | 88 | | | | |
| சங்கக் கட்டிடம் மராமத்துச் செலவு பற்று | ரு. | 20 | 50 | | | | |
| நிகர வருமானம் | ரு. | 72645 | 22 | | | | |
| | | 1,35,110 | 11 | | | 1,35,110 | 11 |

| வருமானம் | | | | செலவு | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | சங்கக் கட்டிடம் கொள்முதல் கணக்குப் பற்று | ரு. | 31,901 | 92 |
| | | | | சாமான் கொள்முதல் பற்று | ரு. | 4843 | 12 |
| இட வாடகை முன் பண வரவு | ரு. | 15 | 00 | விவேகானந்த புத்தகசாலை கொள்முதல் பற்று | ரு. | 1336 | 64 |
| நிகர வருமானம் | ரு. | 72,645 | 22 | இட வாடகை முன் பணம் பற்று | ரு. | 30 | 00 |
| | | | | மின்சார இலாக்கா முன் பணம் பற்று | ரு. | 110 | 00 |
| | | | | டெலிபோன் டெபாசிட் பற்று | ரு | 300 | 00 |
| | | | | பொன் விழா கணக்குப் பற்று | ரு. | 1500 | 00 |
| | | | | பாங்க் ஆப் காரைக்குடி லிமிடெட் சேவிங்ஸ் கணக்குப் பற்று | ரு. | 27,442 | 27 |
| | | | | ரொக்க இருப்பு | ரு. | 5,196 | 27 |
| | | 72,660 | 22 | | | 72,660 | 22 |

குறிப்பு, பேரேடு, ஆதாரவுச் சீட்டுக்கள் யாவும் ஐந்தொகைப்படி சரியாக இருக்கின்றன.

பிலவங்க ஆவணி ௰௯ 4—9—67

(Sd) ராய. சொக்கலிங்கன். தலைவர்.

(Sd) அபிசீனியா. பழ. நாச்சியப்பன் செயலாளர்.

(Sd) L. சொக்கலிங்கம், B. Com., B. L. தணிக்கையாளர்.

(Sd) TR. சொக்கலிங்கம், B. Com., A. C. A. ,,